# பாணினியின் அஷ்டாத்தியாயி

## (தமிழாக்கம்)

பகுதி 1

முனைவர் கு. மீனாட்சி

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

# பாணினியின் அஷ்டாத்தியாயி தமிழாக்கம்

## பகுதி 1

முனைவர் கு. மீனாட்சி

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title | : | Paniniyin Aṣṭādhyāyī Tamiḻākkam Part - I |
| Translator | : | Dr. K. Meenakshi |
| Publisher & © | : | International Institute of Tamil Studies,<br>C.I.T. Campus, Tharamani,<br>Chennai - 600 113. |
| Publication Number | : | 304 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 1998 |
| Edition | : | First |
| Paper used | : | TNPL 16 Kg Super Printing |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing types | : | 10 Points |
| Number of Pages | : | IX + 431 |
| Price | : | |
| Number of Copies | : | 1100 |
| Type Set & Printed by | : | **BRAINET COMPUTERS**<br>158/7, Lakeview Road,<br>West Mambalam,<br>Chennai - 600 033.<br>✆ : 044 - 488 0958 |
| Subject | : | Tamil Translation of Aṣṭādhyāyī |

Printed and Published with financial Assistance from the Government of India, Central Institute of Indian Languages, Mysore.

# அணிந்துரை

ச. சு. இராமர் இளங்கோ
இயக்குநர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
டி.டி.டி.ஐ அஞ்சல்,
தரமணி,
சென்னை - 600 113.

சமஸ்கிருத மொழி என்பதற்குச் 'செம்மை செய்யப்பட்டது' என்பது பொருளாகும். சமஸ்கிருத மொழியைச் செம்மைப்படுத்துவதற்கு ஏதுவாக அமைந்தவர் இலக்கணப் பேராசிரியர் பாணினி ஆவார். வடமொழியில் கிடைக்கின்ற முதல் மூத்த இலக்கண நூல் பாணினி எழுதிய அஷ்டாத்தியாயி என்னும் இலக்கண நூலாகும். பாணினி என்னும் இந்நூல் ஆசிரியர் பெயரால் 'பாணினியம்' என்றும் அழைக்கப்படுகிறது.

பாணினி காலம் கி.மு. 8 ஆம் நூற்றாண்டு என்று கோல்ட்ஸ்டுக்கர் கருதுகிறார். ஆயின் பெரும்பாலான ஆய்வாளர்கள் பாணினி காலம் கி.மு. 4–ஆம் நூற்றாண்டு என்று குறிப்பிட்டுள்ளனர். ரிக், யசூர், சாம, அதர்வண முதலிய வேதங்களோடு அமைப்பு வேறுபடும் வகையில் பாணினி அஷ்டாத்தியாயி எனும் இலக்கண நூலை இயற்றியுள்ளார்.

அற்றை நாளில் சமஸ்கிருத மொழி இருவகை வழக்குடையதாக விளங்கிற்று. கற்றறிந்த அறிஞர்கள் பேசிய மொழிகள் முதல் பிரிவிலும் ஏனையோர் பேசிய மொழிகள் இரண்டாவது பிரிவிலும் அடங்கும். பாணினி முதல் பிரிவைச் சார்ந்தவர்கள் பேசுகின்ற மொழிக்கு இலக்கணம் வகுத்தார் என்பர்.

பாணினி இலக்கணம் சூத்திரங்களால் ஆனது. சில சொற்களில் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் தன்மை உடையன இச்சூத்திரங்கள்.

இந்நூல் 8 அத்தியாயங்களையும் 4000 சூத்திரங்களையும் கொண்டதாகும். அவையின்றி, 14 சிவ சூத்திரங்கள் அல்லது மாகேசுவர சூத்திரங்கள் முன்னதாக இணைக்கப்பட்டுள்ளன. இந்த இலக்கண நூலுக்குக் காத்தியாயனர், பதஞ்சலி ஆகியோர் உரை எழுதியுள்ளனர். அவர்களுடைய உரைகள் வார்த்திகம், மகாபாஷ்யம் என்ற பெயர்களைக் கொண்டவை.

வடமொழி இலக்கண நூலோர் இந்த இலக்கணத்தையும் உரைகளையும் மூன்று முனிவர்கள் இலக்கணம் என்ற பொருளில் 'முனித்ரய வ்யாகரணம்' என்று குறிப்பிடுவர்.

பாணினியைப் புரிந்துகொள்வதற்கு இவ்விரு உரைகளும் மிகத் தேவையாக அமைகின்றன.

இந்நூல் குறித்து, 'வடமொழி இலக்கிய வரலாறு' நூலுள் திரு. கைலாசநாதக் குருக்கள்,

"நமது கைக்கெட்டிய முழு இலக்கண நூல்களுள் பழையது பாணினீயமே. இங்கு வைதிக இலக்கணம் விரிவாகக் கூறப்படாது சிற்சில விதிகள் மட்டும் கூறப்படுவது நோக்கற்பாலது. இந்நூல் வேத சாகைகளுள் ஒன்றுடனாவது இணைக்கப்படாதிருப்பதும் கவனிக்க வேண்டுவதே. இது எழுந்த காலம் சமயப் பற்றற்ற தனி நிலையில் நூலமையச் சூழ்நிலை பொருந்திய காலம். சமயத்துடன் தொடர்பு பெற்றுச் சமய அடிப்படையிலேயே சாஸ்திரங்கள் தோன்றின எனினும், ஆசிரியர்கள் படிப்படியாக இவ்வழியினின்றும் விலகித் தனிவழி நின்று சமயப் பற்றற்ற நூல்களை எழுதும் மரபையும் தொடங்கி வைத்தனர்" என்கின்றார். (பக். 192-193)

அபிதான சிந்தாமணி, பாணினி, ஒரு மகரிஷி. இவர் தமது உள்ளத்தில் உலகமுய்ய வியாகரணம் அருளிச் செய்ய வேண்டிச் சிவமூர்த்தியைத் தரிசித்து நிற்கையில், சிவமூர்த்தி, இவரது மன எண்ணமறிந்து தமது திருக்கரத்தில் இருந்த நாதமயமாகியடமருகத்தைச் சிறிது அசைத்தனர். அதிலிருந்து எழுத்துக்கள் உண்டாயின. அவ்வெழுத்துக்களை அருகில் இருந்த இவர் பன்னிரண்டு சூத்திரங்களாக்கினார். இதற்குப் பதஞ்சலி முனிவர் பாஷ்யம் செய்தனர் என்கின்றது. (பக். 1095-76). இவ்வாறு பாணினி எழுதிய இலக்கண நூலுக்குத் தெய்வீகத் தொடர்புடைய புராணக் கதையும் கூறப்படுகிறது.

பாணினி அஷ்டாத்தியாயி பலரால் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. ஆயினும் தமிழில் இதுகாறும் இந்த நூல் மொழிபெயர்க்கப்படவில்லை. வடமொழியில் கிடைக்கின்ற மூத்த இலக்கணமான இந்நூலினை முனைவர் கு. மீனாட்சி முதல் முதலாகத் தமிழாக்கம் செய்துள்ளார். அத்துடன் அஷ்டாத்தியாயி தொடர்புடைய காத்யாயனரின் வார்த்திகம், பதஞ்சலியின் மகாபாஷ்யம் உரைகளில் உள்ள தொடர்புடைய கருத்துகளையும் மொழிபெயர்த்துள்ளார். 'தமிழிலாப் பிறமொழி நூல் அனைத்தும் நல்ல தமிழாக்கி வாசிக்கத் தருதல் வேண்டும்' என்ற பாரதிதாசனின் கருத்திற்கிணங்க வடமொழி இலக்கண நூலான இதனைத் தமிழ் ஆக்கம் செய்த முனைவர் கு. மீனாட்சி அவர்கள் பாராட்டுதலுக்கும் போற்றுதலுக்கும் உரியவர்.

இந்நூலினை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மூன்று பகுதிகளாக வெளியிடுகிறது. முனைவர் கு. மீனாட்சி அவர்கள் தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகியவற்றில் வல்லுநர். மேலும் சிறந்த மொழிநூல் அறிஞர். இவருடைய மும்மொழிப் புலமை இந்நூலுள் நன்கு வெளிப்படுகிறது.

இந்தியாவில், முதல் இலக்கண நூல் பாணினியின் அஷ்டாத்தியாயி என்று சிலரும் தொல்காப்பியம் என்று சிலரும் கூறிவருகின்றனர். இந்நூலாசிரியர் இருசாராரின் ஐயத்தை நீக்கும் வகையில் **'Tolkappiyam and Astadhyayi'** என்ற நூலை நிறுவனத்தின் வழி வெளியிட்டுள்ளார். இவருடைய ஆய்வுப் பணியின் தொடர்ச்சியாக 'அஷ்டாத்தியாயி' எனும் தமிழ் மொழிபெயர்ப்பு நூலினையும் நிறுவனம் வெளியிடுகின்றது.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் காட்டிவருகின்ற மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி-பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும் தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு. த. இரா. சீனிவாசன், இ.ஆ.ப. அவர்களுக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய 'இந்திய மொழிகள் நடுவண் நிறுவன'த்திற்கு எங்கள் நன்றி.

இந்நூலினை நல்ல முறையில் அச்சிட்டுத்தந்த 'பிரைநெட் கம்ப்யூட்டர்ஸ்' அச்சகத்தார்க்கும் எங்கள் நன்றி.

27.07.98

இயக்குநர்.

# முகவுரை

தொல்காப்பியரின் வடமொழி இலக்கணத் தேர்ச்சி அனைவரும் அறிந்ததே. தொல்காப்பிய உரையாசிரியர்கள், பின்னால் வந்த வீரசோழிய ஆசிரியர் போன்றவர்களும் வடமொழி இலக்கணங்களில் தேர்ச்சி பெற்றவர்களே. பல காலக் கட்டங்களில் எழுந்த நூல்களின் ஆசிரியர்களும் இருமொழிகளையுமே நன்கு கற்றுணர்ந்தவர்கள்தான் என்று வரலாற்றுச் சான்றுகள் பறைசாற்றுகின்றன. பல மொழிபெயர்ப்பு நூல்கள் தொல்காப்பியர் காலத்திலேயே இருந்தன என்பது தொல்காப்பியரே, முதல்நூல், வழிநூல் என்ற சொற்களைப் பயன்படுத்தியிருப்பதிலிருந்து விளங்கும். இருபதாம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுச்சிப் புலவர் பாரதி, 'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்' என்று வேறுமொழிகளையும் கற்றுணர்ந்த தமிழறிஞர்களுக்கு ஆணையிட்டுக் கூறுகிறார்.

பாணினியின் அஷ்டாத்தியாயி ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. ஆனால், தமிழ் இலக்கண நூல்களில் ஆழ்ந்த அறிவுள்ள பல தமிழறிஞர்கள், பாணினியின் இலக்கணத்தோடோ அல்லது அதன் ஆங்கில மொழிபெயர்ப்புகளோடோ நேரிடைத்தொடர்பு கொள்ள இயலாத நிலையில் காணப்படுகிறார்கள். உரையாசிரியர்களின் உரைகளிலிருந்துதான் வடமொழி இலக்கணங்களைப் பற்றி, அவர்கள் அறிந்து கொள்ள இயலுகிறது. பல மேல்நாட்டு அறிஞர்களால் மிகவும் புகழப்பட்ட அஷ்டாத்தியாயியை அதன் தமிழாக்கத்தையாவது படித்து அறிந்து கொள்வதற்குக்கூட இதுவரையில் அதன் தமிழாக்கம் தமிழறிஞர்களுக்குக் கிடைக்கவில்லை. இத்தகைய நூலின் தேவையைப் பல அறிஞர்கள் புரிந்து கொண்டும் இருக்கிறார்கள். இந்தக் குறையை நிறைவு செய்வதற்காக எடுத்துக்கொண்ட எனது எளிய முயற்சிதான் இந்தத் தமிழாக்கம். இப்பணி முதன் முதலில்

பல்கலைக் கழக மானியக் குழுவின் (**University Grants Commission**) நிதி உதவியுடன், உயர்மட்ட ஆராய்ச்சித் திட்டத்தின் கீழ்ச் செய்யப்பட்டது.

அஷ்டாத்தியாயி என்ற பாணினி இலக்கணத்துடன் காத்தியாயனரின் வார்த்திகம், பதஞ்ஜலியின் மகாபாஷ்யம் ஆகிய மூன்றையும் சேர்த்துத்தான் படிப்பது தொன்று தொட்ட வழக்கம். அஷ்டாத்தியாயி சூத்திரப்பாடம் மட்டும் தனியாக மொழிபெயர்த்தால், அத்தமிழாக்கம் எளிதில் புரிந்துகொள்ள இயலாது. வடமொழி இலக்கணத்தை முனித்ரய வ்யாகரணம் அதாவது மூன்று முனிவர்களின் இலக்கணம் என்று கூறுவதுண்டு. ஆகவே இம்மொழிபெயர்ப்பில் முதலில் பாணினியின் சூத்திரங்களைத் தமிழில் கொடுத்து, தொடர்ந்து, மகாபாஷ்யம், வாமனர் ஜயாதித்தரின் காஸிகா என்ற நூல்களின் அடிப்படையில் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது. அவ்வாறே, வார்த்திகங்களையும் தமிழில் கொடுத்து, தொடர்ந்து, அதன் தமிழ் மொழிபெயர்ப்பும் கொடுக்கப்பட்டுள்ளது.

இந்நூலின் அச்சிடப்பட்ட சில எழுத்துக்களைப் பற்றிய விளக்கம் தேவை. தமிழ் எழுத்துக்களைவிட அதிகமான எழுத்துக்களைக் கொண்டது ஸம்ஸ்கிருதம். இதன் எழுத்தான, நாகரியில், ஒவ்வொரு வர்க்கத்திலும் நன்னான்கு எழுத்துக்கள் உள்ளன. அவை அந்தந்த எழுத்துக்களோடு, 1,2,3,4 என்ற எண்கள் இணைத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டாக, 'க' என்ற எழுத்து அதன் உச்சரிப்பினடிப்படையில் 4 வகையாக அமையும். அவை முறையே க¹ (**=ka**), க² = (**kha**), க³ (**=ga**) க⁴ (**=gha**) என்று கொடுக்கப்பட்டுள்ளன. அவ்வாறே ரு¹ (**=r**) என்றும் 'ரு²' (**=ru**) ஸ¹ (**=s¹**), 'ஸ' (**=s**) என்றும் உச்சரிக்க வேண்டும்.

பாணினி பல இடங்களில் சுரத்தைப்பற்றிப் பேசுகிறார். வேதமொழியில், உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம் என்ற மூன்று வகையான சுரங்கள் காணப்படும். இவைகளைக் குறிப்பிட சரியான குறியீடு கிடைக்காததால், அவைகளை அந்தந்த இடங்களில் குறிப்பிடவில்லை. ஆகவே, சில சூத்திரங்களுக்காகக் கொடுக்கப்பட்டுள்ள இரண்டு எடுத்துக் காட்டுக்களும் ஒரே மாதிரியாகக் காணப்படுகின்றன. ஆயினும், அதற்கு முன்பு கொடுக்கப்பட்டிருக்கும் விளக்கத்திலிருந்து, இவைகளை வேறுபடுத்த இயலும். உதாத்த சுரத்தை மட்டும், அந்த எழுத்துடன் '2' அல்லது '3' என்ற குறியுடன் காட்டப்பட்டுள்ளது. எடுத்துக் காட்டாக, போ⁴ அல்லது க².

இந்த மொழிபெயர்ப்புப் பணியைத் தொடங்கிய காலத்திலிருந்து, பலர் எனக்கு ஊக்கம் அளித்து, உறுதுணையாக

இருந்தார்கள். அவர்கள் அனைவருக்கும் எனது நன்றி உரியது. ஆயினும், சிலரைக் குறிப்பிட்டு, நன்றி கூறுவது எனது கடமை.

இம்மொழிபெயர்ப்புப் பணியை நான் தொடங்குவதற்குக் காரணமாக அமைந்தவர் பேராசிரியர் அகத்தியலிங்கம் (முன்னாள் துணை வேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்) அவர்கள் ஆவர். இப்பணியைச் செய்து முடிக்க அவர்களது ஆர்வமும், ஊக்கமும், உறுதுணையாக இருந்தன. பேராசிரியர் அகத்தியலிங்கம் அவர்களுக்கு நான் என்றென்றும் கடமைப்பட்டுள்ளேன். எனது உளமார்ந்த நன்றி அவர்களுக்கு உரியது. இத்தமிழாக்கத்தை நூல் வடிவில் வெளிக் கொண்டு வருவதற்காகவும் பேராசிரியர் அகத்தியலிங்கம் அவர்கள் முயற்சி எடுத்துக் கொண்டார்கள். ஆனால் அவர்கள் விருப்பம் நிறைவேறவில்லை. கனவாகவே நின்ற அந்த முயற்சி, இன்று நனவாகிறது. இதற்குக் காரணம் முனைவர் இராமர் இளங்கோ அவர்கள் (இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை) ஆகும். எனது தமிழாக்கத்தை அச்சேற்றுவதற்காக, அணுகியபோது, எவ்விதத் தயக்கமும் காட்டாமல், உடனேயே ஏற்றுக்கொண்டு, இன்று அதை நூல் வடிவத்தில் வெளியிட்டுள்ளார்கள். முனைவர் இராமர் இளங்கோ அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றி. அஷ்டாத்தியாயியின் தமிழ் மொழிபெயர்ப்புப்பணியை நான் தொடங்கிய காலத்திலிருந்தே இதற்கு ஊக்கமளித்து, தனது கருத்துக்களையும் எடுத்துக்கூறிப் பல வகையில் உதவி புரிந்தவர் முனைவர் இ. அண்ணாமலை அவர்கள் (முன்னாள் இயக்குநர், இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம், மைசூர் **(Central Institute of Indian Languages, Mysore)** ஆவர். இன்று இது, நூலாக வருவதில் மிகப்பெரிய பங்கு அவர்களுடையதுதான். முனைவர் இ. அண்ணாமலை எடுத்துக்கொண்ட ஆர்வத்திற்கும், அவர்கள் எனக்கு அளித்த ஊக்கத்திற்கும் எனது நன்றி என்றென்றும் உரியது.

பேராசிரியர் செ. வை. சண்முகம் (ஓய்வு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், மொழியியல் துறை) அவர்கள், நான் இப்பணியை மேற்கொண்ட நாளிலிருந்து, பல காலக் கட்டங்களில், தனது கருத்துக்களைக் கூறி, இப்பணியை நான் செய்து முடிக்க ஊக்கமளித்து உதவினார்கள். அவர்களுக்கு எனது உளங்கனிந்த நன்றி.

இந்த அஷ்டாத்தியாயியின் தமிழ் மொழிபெயர்ப்புப் பணியில் ஈடுபட்டபோது, பல இன்னல்கள் இடையூறுகளை நான் எதிர்கொள்ள வேண்டிவந்தது. அந்த நேரங்களில் எல்லாம் எனக்கு ஊக்கமளித்து உறுதுணையாக நின்றவர்கள் பல நண்பர்கள். அவர்களில், சிலர் குறிப்பிடத் தகுந்தவர்கள். முனைவர் ரவிந்திர வர்மா (எனது சக ஆசிரியர்), திரு. இராம கிருட்டிணன், திரு. மணிவேல் ஆகியவர்களுக்கு நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

அஷ்டாத்தியாயியைத் தமிழில் மொழிபெயர்க்க நிதி உதவி செய்த பல்கலைக்கழக மானியக் குழுவுக்கு எனது மனமார்ந்த நன்றி. நான் இந்த ஆராய்ச்சியை மேற்கொண்டு, இதைச் செய்து முடிக்கப் பலவகையில் உதவிபுரிந்த ஜவகர்லால் நேரு பல்கலைக் கழகத்துக்கு எனது உளமார்ந்த நன்றி உரியது.

இது நூலாக வெளிவருவதற்கு உதவிய இந்தியமொழிகளின் நடுவண் நிறுவனம், மைசூர்; உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை ஆகியவைகளுக்கு எனது நன்றி.

இது அச்சாகும் போது, நான் சென்னையில் தங்கிய நாட்களில் அன்போடும் ஆர்வத்தோடும் பலவகையில் முனைவர் இ. ராஜலட்சுமி ஸ்ரீனிவாசன், அவர்கள் கணவர் திரு. எஸ். ஸ்ரீனிவாசன்ஆகியோர் உதவினர். அவர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றி.

இதன் பிழை திருத்தத்தில், ஆர்வத்தோடு எனக்கு உதவி புரிந்த எனது தோழி திருமதி. சீதாலட்சுமி அவர்களுக்கு எனது உளமார்ந்த நன்றி.

**பூனே,**
**01/07/1998.**

*கு. மீனாட்சி*

# முன்னுரை

அஷ்டாத்தியாயி அல்லது அஷ்டகம் (''எட்டு அத்தியாயங்களைக் கொண்டது'') என்றழைக்கப்படும் பாணினியால் எழுதப்பட்ட ஸைம்ஸ்க்ருத மொழியின் இலக்கண நூல் நந்நான்கு பாதங்களாகப் பிரிக்கப்பட்ட எட்டு அத்தியாயங்களைக் கொண்டது. இதில் கிட்டத்தட்ட 4000 சூத்திரம் எனப்படும் இலக்கண விதிகள் காணப்படுகின்றன. ஒவ்வொரு அத்தியாயத்திலும் விளக்கவெடுத்துக் கொண்ட தலைப்பு, அத்தியாயங்கள் அமைக்கப்பட்டிருக்கும் வகைமுறை ஆகியவைகளைப் பொறுத்து ஒவ்வொரு அத்தியாயத்திலும் காணப்படும் சூத்திரங்களின் எண்ணிக்கை வேறுபடும். அவைகள் வருமாறு:

| | | | | |
|---|---|---|---|---|
| 1.1.75 | 2,73 | 3.93 | 4.110 | 1.351 |
| 2.1.72 | 2.38 | 3.73 | 4.85 | 2.268 |
| 3.1.150 | 2.188 | 3.176 | 4.117 | 3.631 |
| 4.1.178 | 2.145 | 3.168 | 4.144 | 4.635 |
| 5.1.176 | 2.146 | 3.119 | 4.160 | 5.555 |
| 6.1.223 | 2.199 | 3.139 | 4.175 | 6.736 |
| 7.1.103 | 2.118 | 3.120 | 4.97 | 7.438 |
| 8.1.74 | 2.108 | 3.119 | 4.68 | 8.369 |

பாணினியின் சூத்திரங்களோடு இணைந்தமையாத ஆனால், அச்சூத்திரங்களைப் புரிந்து கொள்ள இன்றியமையாதவையாகக் கருதப்ப டும். தனித்தனியாக அமைந்துள்ள, சில துணை நூல்கள் வருமாறு (1)சிவசூத்திரம் (2)தாதுபாடம் (3)கணபாடம் (4)உணாதிசூத்திரம் (5)பி²ட் சூத்திரம் (6)லிங்கானுஸாஸனம் (7)ஸிக்ஷா. இந்நூல்களின் ஆசிரியர் பாணிணியா அல்லது வேறு ஒருவரா என்று முடிவாக எதுவும் கூறமுடியாதபோதிலும், பாணினியின் இலக்கணத்தோடு இவைகளுக்குள்ள நெருங்கிய தொடர்பு பற்றியோ அல்லது அவ்விலக்கணத்தை எளிதில் புரிந்து கொள்ள இந்நூல்களின் அவசியத்தைப் பற்றியோ எந்தவிதக் கருத்து வேறுபாடோ சந்தேகமோ இல்லை.

## 1. சிவசூத்திரம்

சிவசூத்திரம் அல்லது மாஹேஸ்வர சூத்திரம் அல்லது பிரத்தியாஹார சூத்திரம் எனப்படும் இந்நூல் 14 சூத்திரங்களைக் கொண்டது. ஸம்ஸ்க்ருத மொழியின் நெடுங்கணக்கு வைப்பு முறையிலிருந்து மாறுபட்ட முறையில் ஸம்ஸ்க்ருத எழுத்துக்களை இச்சூத்திரங்களில் வைக்கப்பட்டிருக்கின்றன. சிவசூத்திரத்தில் வைக்கப்பட்டிருக்கும் எழுத்துக்களைக் கொண்டு பிரத்தியாஹார சூத்திரங்களைளமைக்கப்பட்டு. இவ்விலக்கணத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளன. இச்சூத்திரங்களில் வைக்கப்பட்டிருக்கும் இறுதியெழுத்துக்கு `இத்'' அல்லது ''அனுபந்தம்'' என்று பெயர். இச்சூத்திரத்திலிருந்து எடுக்கப்பட்ட ஒரெழுத்தை முதலில் வைத்து, அதையடுத்து, ''இத்'' எனப்படும் ஒரெழுத்தைத் தேவைக்குத் தகுந்தவாறு எடுத்து வைத்து இப்பிரத்தியாஹார சூத்திரங்களளமைக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, முதல் சூத்திரத்தின் முதலெழுத்தான அ–வையும் நான்காம் சூத்திரத்தினிறுதியில் நிற்கும் இத் எனப்படும் எழுத்தான ச்–ஐ அதையடுத்து வைத்து அச் என்னும் பிரத்தியாஹாரம் அமைக்கப்பட்டிருக்கிறது. அச் என்ற பிரத்தியாஹாரம் அ–வுக்கும் ச்–க்கும் இடையே காணப்படும் எல்லாவெழுத்துக்களையும் சுட்டும். இது எல்லாவுமிரெழுத்துக்களையும் சுட்டுவதற்குப் பயன்படுத்தப்படும். இவ்வாறே 'உறல் என்ற பிரத்தியாஹாரம் எல்லா மெய்யெழுத்துக்களையும் அல்–என்ற பிரத்தியாஹாரம் மைஸ்க்ருத மொழியின் எல்லாவெழுத்துக்களையும் சுட்டும். சிவசூத்திரங்களிலிருந்து ஆக்கப்பட்ட 44 பிரத்தியாஹார சூத்திரங்களை பாணினி தனது இலக்கணத்தில் பயன்படுத்தியுள்ளார். (பார்க்க சிவசூத்திரம்)

## 2. தாதுபாடம்

பாணினி தனது இலக்கணத்தில் விகரணங்களையும் (Conjugational Sign) அவைகளுக்குரியவொட்டுக்கள், அவைகளை நீக்குதல் ஆகியவைகளைப் பற்றிப் பேசும்போது அவைகளை தாதுக்களின் வகுப்புகள் மூலம் குறிப்பிடுகிறார். எடுத்துக்காட்டாக அதாதி$^{3}$ ப்ரப்$^{4}$ருத்$^{3}$ப்$^{4}$ய ஸப (2.4.72), ஜூஹோத்$^{3}$ யாதி$^{3}$ப்$^{4}$ய ஸ்லு (2.4.75), தி$^{3}$வாதி$^{3}$ப்$^{4}$ய ஸ்யன்(3.1.69) ஸ்வாதி$^{3}$ ப்$^{4}$ய ஸ்னு(3.1.73), துத$^{3}$ாதி$^{3}$ப்$^{4}$யஸ்' (3.1.77) ருத$^{4}$ாதி$^{3}$ப்$^{4}$ய ஸ்னம்(3.1.78), தனாதி$^{3}$க்: ங்ப்$^{4}$ய உ (3.1.79), க்ர்யாதி$^{3}$ப்$^{4}$ய ஸ்னா (3.1.81) ஆகியவைகளில் ஸப், ஸ்லு என்ற விகரணங்கள் சில தாதுக்களுக்குப் பின் நிற்கும்போது மறைவதையும் ஸ்யன் முதலிய விகரணங்கள் குறிப்பிட்ட சில தாதுக்களுக்குப்பின் இணைக்கப்படுவதையும் குறிப்பிடுகின்றன (1)அத$^{3}$ாதி$^{3}$, (2)ஜூஹோத்யாதி$^{3}$ (3)தி$^{3}$வ ாதி$^{3}$ (4)ஸ்வாதி$^{3}$ (5)துத$^{3}$ாதி$^{3}$ (6)ருத$^{4}$ாதி$^{3}$ (7)தனாதி$^{3}$ (8)க்ர்யாதி$^{3}$ (9)சுராதி$^{3}$ என்ற தாதுக்களின் வகுப்புகள் உள்ளவையென்பது இச்சூத்திரங்களிலிருந்து தெளிவாகிறது. ப்$^{4}$வாத$^{3}$யோ, த$^{4}$ாதவ (1.1.1) என்ற சூத்திரத்திலிருந்து ப்$^{4}$வாதி என்ற வகுப்பும் இருப்பதாகத் தெரியவருகிறது. ஸம்ஸ்க்ருத மொழியில் காணப்படும் தாதுக்கனைத்தையும் அவைகளையடிச் சொல்லாக மாற்றும் போது அவைகளோடிணைப்படும் விகரணங்களினடிப்படையில் 10 வகுப்புகளாகப்

பிரிக்கப்பட்டு தாதுபாடத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. அவைகள் வருமாறு (1)ப்$^{4}$வாதி$^{3}$ (1035), (2)அத$^{3}$ாதி$^{3}$ (72) (3)ஜுஹோத்யாதி,(24), (4)தி$^{3}$வாதி(1 40), (5)ஸ்வாதி$^{3}$(35), (6)துத$^{3}$ாதி(157), (7)ருத$^{43}$ாதி$^{3}$(25), (8)தனாதி$^{3}$ (10)க்ர்யாதி$^{3}$ (67), (10)சுராதி$^{3}$ (441). இவ்வகுப்பின் பெயர்களுக்கு வலதுபுறத்தில் காணப்படும் அடைப்புக்குறிக்குள் காணப்படும் எண், அவைகளின் எண்ணிகையைச் சுட்டும். இத்தாதுக்களின் மொத்த எண்ணிக்கை 1970 ஆகும்.

## 3. கணபாடம்

தாதுபாடத்தில் தாதுக்களின் வகுப்பைக் கூறியிருப்பது போல் கணபபாடத்தில் பெயர்ச்சொற்களை குறிப்பிட்டவொரு வரிசைக்கிர ப்டி அமைக்கப்பட்டிருக்கிறது. இது இருவகையில் அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம் (1) ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையில் அமைக்கப்பட்ட சொற்கள் (2) பெயர்ச்சொற்களின் எண்ணிக்கையைக் குறிப்பிடாமல் அமைக்கப்பட்டவை.

தாதுபாடம், கணபாடம் ஆகியவிரண்டின் ஆசிரியரும் பாணினியா அல்லது இவைகள் வேறு ஒருவரால் எழுதப்பட்டவையாவென்று முடிவுக்கு வராத ஒரு விவாதம் இன்று வரை நடந்து கொண்டிருக்கிறது . ஆயினும் இவைகளின் ஆசிரியர் யாராக இருந்தபோதிலும், இந்நூல்கள் அஷ்டாத்தியாயிக்கு எவ்வளவு முக்கியமானது என்பதை இங்கு விளக்குவது பொருத்தமாகவிருக்கும்.

பாணினி தனது சூத்திரங்களின் தாதுக்களை சுரம் அல்லது இத்–தின் தொடர்பாகத்தான் குறிப்பிட்டிருக்கிறார். இத்தகைய சுரம் பெற்ற தாதுக்கள், இத்–தைக் கொண்ட தாதுக்கள் எவையெவையென்பதையறிய தாது பாடத்தின் உதவியைத்தான் நாட வேண்டியிருக்கும். ஏனென்றால் தாதுபாடத்தில்தான் இவைகளின் பட்டியல் கொடுக்கப்பட்டிருக்கிறது. இத்தகைய சூத்திரங்களைப் படிக்கும்போது தான் தாதுபாடம் பாணினியின் விதிகளைப் புரிந்து கொள்ள எத்துணை முக்கியமானது என்பதை உணர்கிறோம். எடுத்துகாட்டாக. ஆத்மனேபத வினையை வரையறுக்கும் சூத்திரம் அனுதாத்த சுரமோ அல்லது ங்–ஐ இத்–தாகக் கொண்டதோவான தாதுக்கள் ஆத்மனேபதமாகுமென்று கூறுகிறது (1.3.12.) அனுதாத்த சுரங்கொண்ட தாதுக்கள் ங்–ஐ இத்–தாகக் கொண்ட தாதுக்கள் எவையெவையென்பதையறிய தாது பாடத்தின் துணை தேவையாகிறது.

இதைப் போன்று 4.1.76–லிருந்து தொடங்கி 5ஆம் அத்தியாயமிறுதிவரையில் தத்திதவொட்டுகளைப் பற்றி பாணினி பேசுகிறார். அவ்வமயம் ஒரு குறிப்பிட்ட வகுப்பின் பெயரை மட்டுந்தான் பாணினி குறிப்பிடுகிறார். அக்குறிப்பிட்ட வகுப்பினுள்ளடங்கும் சொற்கள் எவையெவையென்பதையறிய கண பாடத்தின் உதவியைத்தான் நாட வேண்டியிருக்கும்.

### 4. உணாதி சூத்திரங்கள்

தாதுக்களுடன் சில குறிப்பிட்டவொட்டுக்களை யிணைத்துப் பெயரடிச் சொற்களாக்கும் விதிகளைக் கொண்டது இந்நூல். இதன் முதல் சூத்திரம் உண் (=உ) என்றவொட்டை சில தாதுக்களுடனிணைத்துப் பெயரடிச் சொல்லாக்குவதைப் பற்றிய விதியாகவமைகிறது. இச்சூத்திரத்திருந்து இந்நூல் உணாதி சூத்திரங்கள் என்ற பெயர் பெறுகிறது. காட்டாக க்ரு–என்ற தாதுவுடன் உண்– (உ) இணைக்கப்பட்டு காரு–என்ற சொல்லாக்கப்படுவதை விளக்குகிறது இந்நூலின் முதற் சூத்திரம். பஞ்சபாதி[3] "ஐந்து இயல்கள் கொண்டது" த[3]ஸ'பாதி "பத்து இயல்கள் கொண்டது" என்று இருவகை யில் கிடைக்கின்றது இந்நூல். இதனாசிரியர் யார் என்பதும் முடிவாகக் கூற முடியாது.

### 5. பி[2]ட் சூத்திரங்கள்

பெயரடிச் சொற்களின் ஒலியன் வடிவம் அவைகள் சுட்டும் பொருட்கள் ஆகியவைகளினடிப்படையில் அச்சொற்களின் சுரத்தை நிர்ணயிக்கும் விதிகளைக் கொண்டது இந்நூல். ஸந்தநு அல்லது ஸாந்தநு என்பவரால் இந்நூல் எழுதப்பட்டிருக்கலாமென்ற கருத்து பொதுவாக நிலவுகிறது. இதன் முதல் விதி பி[2]ஷ் என்ற சொல்லைக் கொண்டபடியால் பி[2]ட் என்ற பெயரால் இது அழைக்கப்படுகிறது.

### 6. லிங்கானுஸாஸனம்

பெயர்ச் சொற்களினமைப்பு அவைகள் சுட்டும் பொருட்கள் ஆகியவைகளினடிப்படையில் அச்சொற்களின் பாலை நிர்ணயிக்கும் விதிகளைக் கொண்டது லிங்கானுஸாஸனம் என்ற இந்த நூல் ஆண்பால், பெண்பால், நபும்சகம், பெண்பால்–ஆண்பால் (ஸத்ரீபும்ஸக), ஆண்பால்–நபும்சகம் (புமான் நபும்கம்), அவிஸிஷ்டலிங்க (ஒரு குறிப்பிட்ட பாலைச் சுட்டாத) என்ற தலைப்புக்களில் பாலைப் பற்றி விளக்கும் விதிகளைக் கொண்டது இந்நூல். கிட்டத்தட்ட 200 சூத்திரங்களில் இவைகள் விளக்கப்பட்டுள்ளன. இத்தலைப்புக்கள் உணர்த்துகிறபடி, சில சொற்கள் ஒரெயொரு பாலைச் சுட்டுவதாகவும் அதாவது ஆண்பால், பெண்பால், நபும்சகம் ஆகியவைகளில் ஏதாவதொன்றில் அமைவுதாகவும் வேறுசில சொற்கள் ஆண்பால்–பெண்பாலாகவும், அல்லது ஆண்பால் நபும்சகமாகவும், மற்றுஞ்சில இம்மூன்று பால்களிலுமே பயன்படுத்த படக்கூடியவைபாகவும் அமைகின்றன. இதனாசிரியர் யாராக இருக்கக்கூடுமென்பது பற்றிய கருத்து வேற்றுமை காணப்பட்டாலும் இதனாசிரியர் பாணினியாக இருக்க முடியாது என்பது பொதுவாக எல்லோராலும் ஒத்துக் கொள்ளப்பட்ட கருத்து.

### 7. ஸிக்ஷா

இதைப் பாணீனீய ஸிக்ஷா என்ற மற்றொரு பெயராலும் குறிப்பிடப் படுவது உண்டு. ஆயினும் இந்நூல் பாணினியால் எழுதப்படவில்லையென்பது பெரும்பாலான

ஆராய்ச்சியாளர்களின் கருத்து, இது ஒரு ஒலியனியல் நூல்.

## பாணினி இலக்கணத்தின் கருமொழி (Language of Description)

இந்தோ ஆரியமொழியின் தொடக்க கால நிலையில் அமைந்திருந்த மொழியின் இலக்கணமே அஷ்டாத்தியாயி. பாணினியின் காலத்தில் அவர் வசித்து வந்த இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் உயர்மட்ட வகுப்பினரால் பேசப்பட்ட மொழியின் வர்ணனையிலக்கணம் அஷ்டாத்தியாயியென நம்பப்படுகிறது. இம்மொழியை பாணினி பாஷா–வென்று குறிப்பிடுகிறார். தான் வர்ணிக்கும் மொழியைப் பாணினி ஸம்ஸ்கிருதம் என்ற பெயரால் தனது இலக்கணத்தில் எங்கேயுமே குறிப்பிடவில்லை. (முதன்முதலாக ஸம்ஸ்கிருதம் என்ற சொல் மொழியின் தொடர்பாகப் பயன்படுத்தியுள்ளதை இராமாணயத்தில்தான் காணலாம்) ஆயினும், பாஷாவின் தனிப்பட்ட வர்ணனையிலக்கணம்தான் அஷ்டாத்தியாயியென்று கூறுவது பொருத்தமாகாது. காலத்தால் முற்பட்ட வேதமொழியின் மொழிக்கூறுகள் (சந்த³ஸி). இந்தியாவின் கிழக்குப்பகுதி (ப்ராசாம்), வடபகுதி (உதீ³சாம்) ஆகியவைகளில் காணப்படும் மொழிக்கூறுகள், ஆகியவைகளையும், தனது இலக்கணத்தில் வேறுபாடுகளாகப் பாணினி குறிப்பிடுகிறார். இவைகளைத்தவிர தனது காலத்துக்கு முற்பட்ட காலத்து இலக்கண நூலார்களின் கருத்துக்களையும் மொழிக் கூறுகளின் வேறுபாடுகளாகப் பாணினி குறிப்பிட்டுள்ளார்.

அஷ்டாத்தியாயிக்கு முன்பும் பல இலக்கண நூல்கள் இருந்தனவென்பதற்கு உட்சான்றுகள் இவ்விலக்கண நூலிலிலேயே கிடைக்கின்றன. தனது காலத்துக்கு முன் எழுந்த இலக்கண நூல்களில் காணப்படும் மொழிக் கூறுகளின் வேறுபாடுகளைப் பற்றிப் பேசும்போது பாணினி அந்தந்த இலக்கண நூலார்களின் பெயரைச் சுட்டி அவரது கருத்துப்படி இக்குறிப்பிட்ட சொல் இவ்வாறான வடிவம் பெறுமென்று கூறுகிறார். அவர்கள் பெயர்கள் வருமாறு ஆபிஸலி (6.1.91), கஸ்யப (1.2.15; 8.4.67) க³ார்க்³ய (7.3.99; 8.3.20; 4.67), க³ாலவ (6.3.61; 7.1.74), சாக்ரவர்மன் (6.1.130; 4.170), ப⁴ாரத்³வாஜ (7.2.63), ஸாகடாயன (3.4.111; 8.3.; 4.50) ஸாகல்ய (1.1016; 6.1.27; 8.3.19) ஸேனக (5.4.112), ஸ்போடாயன (6.1.23). பதஞ்ஜலி தனது மயாபாஷ்யத்தில் காஸக்ருத்ஸன (1.12.5–6) என்ற மற்றொரு இலக்கண நூலாரையும் குறிப்பிடுகிறார். ஆயினும் இவர்களுடைய இலக்கண நூல்களில் ஒன்றுகூட இப்போது கிடைக்கவில்லையென்பது குறிப்பிடத்தகுந்தது.

## பாணினியென்று பெயர்

'பாணின' என்பவரின் மகன் அல்லது 'பனின்' என்பவரின் பேரன் அல்லது 'பணி' என்பவரின் மகன் என்று பலவிதமாக 'பாணினி' என்ற சொல்லின் இலக்கணம் (Tymology) கூறப்படுகிறது. 'பாணினி' என்ற பெயரைத்தவிர, த³ா க்ஷீ புத்ர "தாஷி என்பவரின் மகன் ஸாலாதுரீய அதாவது "ஸாலாதுர என்ற இடத்தில் பிறந்தவர்" என்ற

மற்ற பெயர்களும் உண்டு.

பாணினியின் காலம்

கி.மு. 7ஆம் நூற்றாண்டிலிருந்து 4ஆம் நூற்றாண்டுவரை, அறிஞர்கள் இவருடைய காலத்தை ஏதோவொரு நூற்றாண்டைக் குறிப்பிடுகிறார்கள். பொதுவாக இவரது காலம் கி.மு. 3ஆம் நூற்றாண்டாக இருக்கலாமென்று நம்பப்படுகிறது.

பாணினியின் பிறந்த இடம்.

இந்தியாவின் வடமேற்குப் பகுதியிலுள்ள ஸாலாதுர என்ற கிராமம் பாணினியின் பிறந்தவிடமென்று நம்பப்படுகிறது. இது தற்சமயம் ப ாகிஸ்தானிலுள்ள லாகூர் என்ற இடமாக இருக்ககூடுமென்பது பெரு ம்பாலான கருத்து.

பாணினியின் சூத்திரங்களினமைப்பு

சுருக்கமாகக்கூறும் வகையிலமையும் சூத்திர நடையில் பாணினி தனது இலக்கணத்தில் விதிகளையமைத்துள்ளார். இதற்காகச் சில கலைச் சாதனங்களைத் (Technical Device) தனது இலக்கண நூலில் கைய ாண்டுள்ளார். அவைகள் வருமாறு

## 1) பிரத்தியாஹாரங்கள்

பாணினி பிரத்தியாஹாரம் அமைக்கும் விதத்தை ஒரு சூத்திரத்தில் விளக்கியுள்ளார். (1.1.71) ஒரு சூத்திரத்தில் தேவைபான எழுத்துக்களைபெல்லாம் ஒவ்வொன்றாக எடுத்து விவரித்துக் கூறாமல், அதற்குள்ளடங்கும் எழுத்துக்களெல்லாவற்றையும் சுருக்கமாக பிரத்தியாஹாரங்கள் மூலம் சுட்டலாம். இதற்காக ஸிவ சூத்திரங்களில் காணப்படுமெழுத்துக்களைப் பெரும்பாலும் பாணினி பயன்படுத்தியுள்ளார். காட்டாக அச் என்ற பிரத்தியாஹாரத்தைப் பயன்படுத்தும்போது ஸம்ஸ்க்ருத மொழியின் எல்லாவுயிரெழுத்துக்களையும் இதற்குள்ளடக்கிவிடலாம். இதைப்போன்ற ஹல் என்ற பிரத்தியாஹாரத்தைப் பயன்படுத்தி இம்மொழியின் எல்லா மெய்யெழுத்துக்களையும் சுட்டலாம். ஆகவே இவ்வெழுத்துக்களை மீண்டும் மீண்டும் கூறாமல் இப்பிரத்தியாஹாரங்களைப் பயன்படுத்தி சூத்திரங்களைச் சுருக்கமாக அமைத்துள்ளார்.

## 2) அனுபந்தம்

அனுபந்தம் என்ற சொல்லை பாணினி தனது இலக்கணத்தில் பயன்படுத்தவில்லை. இதைவிடச் சிறப்பான இத் என்ற சொல்லை இதனிடத்தில் பயன்படுத்தியுள்ளார். இ(போ) என்ற தாதுவிலிருந்தாக்கப்பட்டது இத் என்ற சொல். இது மறைதல் என்ற பொருளைச் சுட்டும். அடிச்சொல் (ப்ரக்ருதி), ஒட்டு (ப்ரத்யய), ஆகமம், பதிலி (ஆதே³ஸம்)

ஆகியவைகளுடன் அனுபந்தமெனப்படும் எழுந்து இணைக்கப்படும். விகரணம், குணம், விருத்தி, சுரம் போன்ற மாற்றங்களேற்படுவதை இவ்வனுபந்தம் சுட்டும். முழுமையான சொல்லாக்கப்பட்டவுடன் இவ்வனுபந்தம், இதன் பெயருக்கேற்ப (போதல்) மறைந்து விடும்.

எந்தெந்தவெழுத்துக்கள் 'இத்'தாகப் பயன்படுத்தப்படுமென்பதை சூ.1.3.2–9. ஆகியவைகளில் குறிப்பிட்டள்ளார். இச்சூத்திரங்களிலிருந்து, தேவநாகரியின் நெடுங்கணக்கில் காணப்படும் பெரும்பாலானவெழுத்துக்கள் இத்–தாகப் பயன்படுத்தப்படுமென்று தெரிய வருகிறது. எந்ததெந்தச் சூழல்களில் எந்தெந்தவெழுத்துக்கள் 'இத்'தாக வருமென்பதையும் பாணினி சுட்டிக் கூறியுள்ளார். ஐ, ஔ என்ற இரண்டெழுத்துக்களைத் தவிர மற்றவெல்லாயிரெழுத்துக்களையும், த்[3], த்[4], ப்[3], ஹ என்ற நான்கையும் தவிர்த்த ஏனைய மெய்யெழுத்துக்களையும் இத்–தாகப் பாணினி பயன்படுத்தியுள்ளார். பிரத்தியாஹாரங்களாக்குவதற்கு அனுபந்தங்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. (பார்க்க சிவசூத்திரம், பிரத்தியாஹாரம்)

சிவ சூத்திரங்களிலிருந்து மட்டுமல்லாமல் அஷ்டாத்தியாயியின் சூத்திரங்களிலிருந்தும் பிரத்தியாஹாரங்கள் அமைத்து, பாணினி தனது விதிகளில் பயன்படுத்தியுள்ளார். காட்டாக சூ.4.1.2–இல் வேற்றுமையுருபுகளைக் கூறுகிறார். இதிலிருந்து ஸுப் என்ற பித்தியாஹாரத்தை உண்டாக்கி எல்லா வேற்றுமையுருபுகளையும் சுட்டுவதற்குப் பயன்படுத்தியுள்ளார். இதே போல் திப் என்பது வினையோடிணைக்கப்படும் எல்லா இடவொட்டுக்களையும் சுட்டும். (2) த் என்ற அனுபந்தத்தை ஒருயிரெழுத்தையடுத்து இறுதியில் வைத்து ஆக்கப்படும் பிரத்தியாஹாரம் அந்த ஒரேயொரு உயிரெழுத்தைச் சுட்ட பயன்படுத்தியுள்ளார். காட்டாக அத் என்ற பிரத்தியாஹாரம் அ என்ற உயிரெழுத்தையும் ஆத் என்ற பிரத்தியாஹாரம் ஆ என்ற உயிரெழுத்தையும் சுட்டுமாறு பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. இதைப்போன்று, மெய்யெழுத்துக்களின் ஒரு வர்க்கத்தின் (வகுப்பு) முதலெழுத்தையடுத்து உ என்ற அனுபந்தத்தைச் சேர்த்தாக்கப்படும் பிரத்தியாஹாரம் அவ்வர்க்கத்தைச் சேர்ந்த எல்லாவெழுத்துக்களையும் சுட்டும். காட்டாக, கு, சு என்ற பிரத்தியாஹாரங்களை, முறையே பின்னண்ணவொலிகள், அண்ணவொலிகள் ஆகியவைகளைச் சுட்டப்பயன்படுத்தியுள்ளார். (3) பெண்பாலைச் சுட்டும் ஒட்டான ஈ, ஙீன், ஙீப், ஙீஷ் என்ற மூன்று ஒட்டுக்களால் குறிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளின் முதலில் காணப்படும். இத்–தான ங் அவைகளெல்லாவற்றையும் பொதுவில் குறிப்பிடப் பயன்படுகிறது. ன், ப், ஷ் என்ற இத் எழுத்துக்கள் அவைகளின் செயற்பாடுகளின் வேறுபாடுகளைச் சுட்டப்பயன்படுகின்றன. ஆகவே ங் என்றவெழுத்தால் பெண்பாலொட்டுக்களைப் பொதுவாகப் குறிப்பிடப்படுகிறது. இதைப் போன்று சாப், டாப், டாப் என்று பெண்பாலொட்டுக்களைச் சுட்ட ஆப் என்ற பொதுவான வொட்டைப் பயன்படுத்துகிறார் பாணினி.

சில அனுபந்தவெழுத்துக்கள் முதலிலும் வேறு சில இறுதியிலும் நிற்கும்.

ஒவ்வொரு அனுபந்தமும் தனித்தனிச் செயற்பாடு கொண்டது. சில அனுபந்தங்கள் சுரத்தைக் சுட்டுவதாகவும் காணப்படுகின்றன. காட்டாக ப் என்ற அனுபந்தம் அனுதாத்த சுரத்தைக் சுட்டுமென்று பாணினி கூறுகிறார். (3.1.4)

## 3)கணங்கள்

பார்க்க, க$^{3}$ணபாடம், சொற்களை ஒரு வகுப்பிலமைத்துக் கூறும் போது, ஒரு விதியில்அவ்வகுப்பின் முதல் முதலில் நிற்கும் சொற்களை மட்டும் குறிப்பிட்டுவிட்டு காட்டாக அம்ஸ்வாத$^{3}$ய (6.2.193) அவ்வகுப்பைச் சேர்ந்த மற்ற சொற்களிலும் அவ்விதி அவ்வாறே செயல்படுமென்பதைக் குறிப்பிட இயலும். இம்முறையினால், எல்லாச் சொற்களையும் தனித்தனியாக கூறுவதைத் தவிர்க்க முடிகிறது.

## 4) கலைச் சொற்கள்

கி$^{4}$ ('இ' அல்லது 'உ' வீற்றுப் பெயரடிச் சொற்கள்), கு$^{4}$ (த$^{3}$ா, த$^{4}$ா என்ற தாதுக்கள்) நதீ 'ஈ' அல்லது ஊ வீற்று பெண்பாற் சொற்கள்) போன்ற கலைச் சொற்களைப் பயன்படுத்தி, மேலே கூறியவெழுத்துக்களை ஈறாகக் கொண்ட, எல்லா அடிச் சொற்களையும் தனித்தனியாகக் கூறுவதைத் தவிர்த்திருக்கிறார் பாணினி. இக்கலைச் சொற்களைப் பயன்படுத்தி தனது சூத்திரங்களையமைக்கும்போது இவைகளெல்லாவற்றையும் ஒரே விதிக்குள்ளடக்குவது எளிதாகிறது.

## 5) அனுவிருத்தி

முதலில் கூறப்பட்ட விதிகளில் சில சொற்களைப் பயன்படுத்தி, அவைகளை அதையடுத்து வரும் சூத்திரங்களில் பயன்படுத்துவதில்லை. இச்சொற்களை அனுவிருத்தி மூலம், தேவையான இடங்களில் கொண்டு வந்து பொருள் விளக்குவது வழக்கம். இம்முறைக்கு அனுவிருத்தியென்று பெயர். பாணினி இம்முறையைப் பின்பற்றி சூத்திரங்களையமைத்தபோதிலும், அனுவிருத்தியென்ற சொல்லை அவர் பயன்படுத்தவில்லை. பிற்கால உரையாசிரியர்கள் இதை அனுவிருத்தியென்று கூறி பொருள் விளக்குகிறார்கள். இதன் மூலம் சொற்களை மீண்டும் மீண்டும் விதிகளில் பயன்படுத்துவதைத் தவிரிக்க இயலுகிறது.

இந்தவிதமாகத் தேவையான சொற்களை முந்திய சூத்திரங்களிலிருந்து அடுத்துவருஞ் சூத்திரங்களிலிணைப்பது தொடர்ச்சியாக அமையும். சில சமயங்களில் அவ்வாறு தொடர்ச்சியாக அமையாமல், அதாவது தேவையில்லாத இடங்களில் அச்சொற்களைத் தற்காலிமாக நிறுத்திவைத்துவிட்டு, மறுபடியும் தேவையெழும்போது அச்சொற்களைக் கொண்டு வந்து பொருள் காண்பதும் உண்டு. இதற்கு மண்டுகப்லுதி 'தவளைக்குதி ' என்று பெயர். தலைப்புகளைத் தொடங்கும் அதிகார சூத்திரங்கள் அனுவிருத்திக்குச் சிறந்த எடுத்துக்காட்டு.

## அஷ்டாத்தியாயியின் கருவிமொழி (Metalanguas)

கருமொழியை அதாவது ஸம்ஸ்கிருத மொழியினடிப்படையில் பாணினி கருவிமொழியையமைத்திருந்தபோதிலும் இவ்விரண்டுக்கும் வேறுபாடுகள் பல உண்டு.

(1) பாணினி தனது கருவி மொழியில், சொல்லின் தொடக்கத்தில் சில கூட்டு மெய்களையமைத்திருக்கிறார். காட்டாக ஹம்யந்த (7.2.5), ம்வோஸ்ச (3.2.64) இச்சொற்களின் முதலில் காணப்படும் கூட்டு மெய்கள் ஸம்ஸ்க்ருத மொழியில் சொல்லின் முதலில் வாரா.

(2) ஸம்ஸ்கிருத மொழியில் ஸந்தி விதிப்படி, நிற்கும் சொல்லினிறுதி மூக்கொலி, வருஞ் சொல்லினுயிரெழுத்துக்கு முன்னால் பொதுவாக இரட்டிக்கும். காட்டாக ப்ரஹஸன் + உவாச ப்ரஹஸன்னுவாச. ஆனால் அஷ்டாத்தியாயின் கருவி மொழியில், இந்த இரட்டித்தல் காணப்படவில்லை. இகோ யணசி (யண் + அசி) (6.1.77).

(3) கருவி மொழியில் வினைச் சொற்களே பயன்படுத்தப்படவில்லை. பெயர்ச் சொற்களே காணப்படுகின்றன. இச்சூத்திரங்களின் பொருட்களை விளக்க, விளைச் சொல்லை நாமாகவே அவைகளுடன் சேர்க்க வேண்டும். காட்டாக வ்ருத்[3]தி[4] ஆத்ஐச் (1.1.1) அதே[3]ங்கு[3]ண: (1.1.2) என்ற சூத்திரங்களில் வ்ருத்[3]தி, ஆத், ஐச் அத், ஏங், கு3ண: என்ற சொற்களே காணப்படுகின்றன. இவைகளுடன் அஸ்தி அல்லது ப[4]வதி, 'ஆகு' என்ற வினைகளை சேர்த்து விளக்க வேண்டும்.

(4) ஸம்ஸ்கிருத மொழியில் காணப்படும் எட்டு வேற்றுமைகள், கருவி மொழியில் காணப்படவில்லை. இதில் ஐந்தே ஐந்து வேற்றுமைகள்தான் பயன்படுத்தப்பட்டுள்ளன. முதல் வேற்றுமை, 3ஆம் வேற்றுமை, 5ஆம் வேற்றமை, 6ஆம் வேற்றுடை, 7ஆம் வேற்றுமைகள் கருவி மொழியில் காணப்படுகின்றன. 2, 4, 8ஆம் வேற்றுமைகள் கருவி மொழியில் பயன்படுத்தப்படவில்லை.

கருமொழியில் சுட்டும் பொருட்களையே கருவிமொழியிலும் இவ்வேற்றுமைகள் சுட்டவில்லை. கருவிமொழியில் இவைகள் சுட்டும் பொருட்களை பாணினி விளக்கிக் கூறுகிறார். சூத்திரத்தில் பயன்படுத்தியுள்ள 6ஆம் வேற்றமைச் சொல் அதனிடத்தில் என்ற பொருளையும் (1.1.49) "எது தொடர்கிறதோ அல்லது பின்னால் நிற்கிறதோ" வென்ற பொருளை 5ஆம் வேற்றுமைச் சொல்லும் (1.1.67), 7ஆம் வேற்றுமைச் சொல் "எது முன்னால் நிற்கிறதோ" என்ற பொருளையும் (1.1.66) என அவைகள் சுட்டும் பொருட்களை வரையறுத்துள்ளார். இதை ஒரு எடுத்துக் காட்டுடன் விளக்குவோம். "இகோ யண் அசி" (5.1.77) என்ற சூத்திரத்தில் இக் 6ஆம் வேற்றமைச் சொல், யன் முதல் வேற்றுமைச் சொல், அசி 7ஆம் வேற்றுமைச் சொல் அச்–சுக்கு முன் நிற்கும் இக்–குக்குப் பதிலியாக யண்–வரவேண்டும் என்பது இச்சூத்திரத்தின் பொருள்.

காலம், வினை நோக்கு ஆகியவைகளைச் சுட்டப் பயன்படுத்தியுள்ள லகாரம் கருவி மொழியில் மட்டும் காணப்படும் சொல் அவ்வாறே தத்திவொட்டுக்களான பி² ( = ஆயன), க்²( = இன்) போன்ற ஒலியன்களும் கருவிமொழியில் இவ்வாறு பயன்படுத்தப்படமாட்டாது.

## அஷ்டாத்தியாயியில் பயன்படுத்தப்பட்டிருக்கும் விதிகளின் வகைகள்

### 1. ஸம்க்3ஞா விதி

கலைச் சொற்கள் பற்றிய விதிகள் ஒரு குறிப்பிட்ட சொல் அல்லது எழுத்தையொரு கலைச் சொல்லாக வரையறுக்கும் விதிகள் கிட்டத்தட்ட நூறு கலைச் சொற்களை பாணினி தனது இலக்கணத்தில் பயன்படுத்தியுள்ளார். (அ)ஸ'ப்த³ ஸம்க்³ஞா (ஆ)அர்த²ஸம்க்ஞா, (இ)த³ர்ம ஸம்க்³ஞா என்று ஸம்க்ஞாவை மூன்று வகையாகப் பிரிக்கலாம். (1) ஒரு சொல் லுக்கு அளிக்கப்படும் கலைச் சொல். விருத்தி, ப்ராதிபதிகம் போன்றவை இதைச் சேர்ந்தது (2) ஒரு சொல்லின் பொருளினடிப் படையில் அழைக்கப்படும் கலைச் சொல், விபாஷா, லோப, லுக் போன்றவைகள் இதிலடங்கும் (3) ஒலியின் பண்பின் அடிப்படையில் கலைச் சொல்லாக வரையறுப்பது உதாத்தம், அனுதாத்தம் ஸ்வரித ம் போன்றவை இதற்கு எடுத்துக் காட்டுக்கள்.

பெரும்பாலான கலைச் சொற்களை பாணினி, அஷ்டாத்தியாயியின் முதல் அத்தியாயத்தின் முதல் பாதத்திலேயே அளித்துள்ளார். இவைகள் இவ்விலக்கண நூல் முழுவதிலுமே பயன்படுத்தக்கூடியவை வேறுசில கலைச் சொற்களை எந்தெந்தச் சூழலில் பயன்படுத்தப்படுகிறதோ அந்தந்த அத்தியாங்களில் விளக்கியுள்ளார். காட்டாக, தொகையைப் பற்றிப் பேசும் 2ஆம் அத்தியாயத்தில், அவைகளைப் பற்றிய விளக்கங்களையும் கொடுத்திருக்கிறார். இதேபோல் ஒட்டுக்களைப் பற்றிய கலைச் சொற்களை 3.4.5 அத்தியாயங்களில் காணலாம்.

### 2. பரிபாஷா விதி

அஷ்டாத்தியாயியின் விதிகளைத் தகுந்த முறையில் விளக்குவதையோ அல்லது பயன்படுத்துவதையோ வரையறுக்கும் விதிகள் கிட்டத்தட்ட 75 பரி பாஷா விதிகளை பாணினி குறிப்பிடுகிறார். ஆனால், இதோடு 150க்கும் மேற்பட்ட பரிபாஷா விதிகளை இலக்கண மரபு ஒத்துக் கொள்கிறது. பரிபாஷா விதிகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை வருமாறு.

அ) வாசனகீ–பாணினி வெளிப்படையாகத் தனது இலக்கண நூலில் குறிப்பிட்டுள்ளவை.

ஆ) க்³ஞாபகஸித்³த⁴–அஷ்டாத்தியாயில் வெளிப்படையாகக் குறிப்பிடாவிட்டாலும் இத்தகைய விதிகளை பாணினி மறைமுகமாக ஏற்றுக் கொண்டிருக்கிறாரென்பது அவருடைய இலக்கணத்திலிருந்து தெளிவாகிறது. அவ்வாறு பாணினி இவைகளை ஒப்புக்கொள்ளாமலிருந்திருந்தால்சிலசூத்திரங்கள்பொருளற்றதாக ஆகியிருந்திருக்கும்

என்ற உண்மையிலிருந்து இவைகளின் முக்கியத்துவம் விளங்கும்.

இ) ந்யாயஸித்த –இவைகள் வெளிப்படையானவையாகவும் அடி வழக்குச் சார்ந்துவைகளாகவும் (axiomatic) அமைகின்றன பரிபாஷாவென்ற சொல்லை பானினி பயன்படுத்தவில்லை. பரிபாஷா விதிகள் இலக்கண விதிகளைத் தகுந்த முறையில் விளக்குவதற்கு உறுதுணையாக அமைகின்றன.

## 3) விதி

பொதுவாக இலக்கண நூலில் காணப்படுபவை.

## 4) நியம விதி

ஒரு குறிப்பிட்ட விதியின் செயற்பாட்டின் எல்லையை வரையறுக்கும் விதி

## 5) ப்ரதிஷேத[4] அல்லத நிஷேத[4] விதி (தடுப்பு விதி)

ஒரு குறிப்பிட்ட சூழலில் செயற்படக்கூடிய விதியை அவ்விடத்தில் பயன்படுத்துவதற்குத் தடை விதிக்கும் விதி. (1)ப்ரஸஜ்ய ப்ரதிஷேத (2)பர்யுதாஸ என்று இருவகையாக இவ்விதிகளைப் பிரிக்கலாம்.

*(அ) ப்ரஸஜ்யப்ரதிஷேத[4]* – ஓரிடத்தில் பயன்படுத்தக்கூடிய விதியை 'நஞ்' என்ற எதிர்மறையிடைச் சொல்லை ஒரு செயலைச் சுட்டுஞ் சொல்லோடிணைத்து, அவ்விதி செயற்படாமல் தடுப்பது காட்டாக 6.4.3 நாமி, 6.4.4. ந திஸ்ரு சதஸ்ரு.

ஆறாம் வேற்றுமையுருபான 'நாம்'உக்கு முன் நிற்கும் அடிச்சொல்லிறுதியுயிர் நெடிலாகுமென்று 6.4.3 விதிக்கிறது. 6.4.4. திஸ்ரு. சதஸ்ரு என்ற சொற்களுக்குப்பின் 'நாம்' நிற்கும்போது, அவ்வடிச் சொற்களினிறுதியுயிர் நெடிலாகாது என்ற விதிக்கிறது.

(ஆ) *பர்யுதாஸ* – ஓரிடத்தில் செயல்படக்கூடிய விதியை அங்கு செயற்படாமல் தவிர்க்கும் நோக்கத்துடன் அமைக்கும் தடுப்பு விதி. இங்கு, எதிர்மறை இடைச் சொல்லான 'நஞ்' பொதுவாக, ஒரு பெயர்ச் சொல்லோடிணைத்து எதிர்மறைத் தொகையாக்யப் பயன்படுத்தப்படும். மேலே குறிப்பிட்ட ப்ரஸஜ்யப்ரதிஷேதத்தில் காணப்படுகிறபடி தனியாக 'நஞ்' நிற்காது. காட்டாக ஸுட் அநபும்கஸ்ய (1.1.43) நபும்சகச் சொற்களைத் தவிர்த்த (அநபும்ஸகஸ்ய) மற்ற விடங்களில் 'ஸுட்' வரும். இங்கு 'நபும்ஸக' என்ற பெயர்ச் சொல்லோடு 'நஞ்' ணைக்கப்பட்டு ஒரு தொகையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காணலாம்.

## 6. விப⁴ாஷா (விருப்பு விதி)

ஒரு குறிப்பிட்ட விதியை விருப்பாகச் செயற்படுமாறு அமைக்கப்பட்டிருக்கம் விதி விருப்பு விதியெனப்படும். ''ந வா இதி விப4ாஷா (1.1.44)'' அல்லது இல்லை'' என லிபாஷாவை வரையறுக்கிறார் பாணினி. விருப்பு விதியை மூன்று வகையாகப் பிரிக்கலாம். (அ) ப்ராப்தே (ஆ)அப்ராப்தே (இ) உப⁴யத்ர. (அ)கட்டாயமாகச் செயற்படக்கூடிய ஒரு விதியை விருப்பாக ஆக்குவது. பார்க்க (8.1.45) (ஆ) முதலில் குறிபிடப்படாத விதியை, விருப்பு விதியாக முதன்முதலில் விதிப்பது (7.2.6 3.90) (அ)மேலே கூறப்பட்ட இரண்டையுமே விருப்பாக ஆக்குவது.

இவைகளைத் தவிர, மற்றொரு விருப்பு விதியையும் உரையாசிரியர் கள் கூறுகிறார்கள். இது ''வ்யவஸ்தி³த விப⁴ாஷா'' எனப்படும். விருப்பாக விதிக்கப்பட்ட ஒரு விதி. செயற்படும் எல்லாவிடங்களிலும் இவ்விதி கட்டாயமாக செயற்படாது. ஆனால் ஒரு சில இடங்களில் மட்டும் இவ்விருப்புவிதி கட்டாயமாக செயற்படும். வேற இடங்களில் இது செயற்படாது. காட்டாக 1.4.3. ஈ, ஊ, வீற்றுச் சொற்கள் (பெண்பால்) 'நதீ' என்ற ஸம்க்³ஞா பெறும் எனக் கூறுகிறது. இதையடுத்து வரும் விதி 'இயங்' 'உவங்' என்ற ஆதேசங்களோடு வரும். 'ஈ' அல்லது 'ஊ' வீற்றுச் சொற்கள் 'நதீ' ஆகாது என்று கூறுகிறது. மேலே கூறப்பட்ட சொற்கள் 'ஆம்' என்ற வேற்றுமையுருபுக்கு முன் நிற்கும்போது 'இயங்' அல்லது 'உவங்' ஒடு வந்தாலும் 'நதீ' என விருப்பாக அழைக்கப்படும் என்ற விருப்பு விதி (1.4.5) (மேலும் பார்க்க 2.4.56 3.2.124)

விப⁴ாஷா, வா, அன்யதரஸ்யாம், ப³ஹுலம் என்ற பல சொற்களை விருப்பு விதியையமைக்குமிடங்களில் பாணினி பயன்படுத்தியுள்ளார். இச்சொற்களைத் தவிர காலத்தால் முற்பட்ட சில இலக்கண நூலார்களின் கருத்துப்படி இச்சொல் இவ்வாறாக்கப்படுமென்று கூறி மற்றொரு வகையிலும் விருப்பு விதிகள் அமைந்துள்ளதை அஷ்டாத்தியாயியில் காணலாம்.

## 7) நிபாதன விதி

விதிக்குப் புறம்பாக ஆக்கப்பட்ட சொற்களை, தருவிக்கப்பட்டதாக ஆக்கும் விதிகள் சொல் தருவிக்கப்படும் படிப்படியான நிலைகளை மற்ற செயற்பாட்டு விதிகள் (operational rule) கூறுவது போல் விளக்காமல் சொற்களை அதன் முழுமையான உருவத்தில் ஆக்கப்பட்டதாகக் கூறும் விதிகள் (பார்க்க 6.4.174)

## 8. அதிகார விதி

தலைப்புகள் விதிகளின் செயற்பாடு ஆகியவைகளை ஒருங்கே ஓரிடத்தில் அமைக்கப்பயன்படுகிறது இவ்விதி.

## 9) அதிதேஸ

ஒரு விதியின் குணம் அல்லது தன்மையை மற்றொன்றிலும் செயற்படு மாறு அமையும் விதி. பொதுவாக, விதி என்ற தத்திதவொட்டைப் பயன்படுத்தி பாணினி இவ்விதிகளை யமைத்துள்ளார். காட்டாக லேடோ லங்வத் (3.4.85) சில இடங்களில் வத் இல்லாமலும் காணப் படுகிறது. காட்டாக க³ங் சூடாதி³ப்⁴யோ அஞ்வின் விதி (1.2.1) ; வத்³ப்⁴ாவ என்ற சொற்றொடரில் முடியும் எல்லா விதிகளிலும் இந்த அதிதேஸம் காணப்படுகிறது. "ஸ்த3ானிவத்³ப்⁴ா⁵வ (1.1.56–59) ஸன்வத்³ப்⁴ா⁵வ (7.4.93), அந்தாதி³வத்³ப்⁴ாவ (6.1.85) அபூ⁴ததத்³ப்⁴ாவ (5.4.50) முதலியவைகள் இதற்கு எடுத்துக்காட்டாகும். அதி தேசங்களில் ஸ்த³ாநிவத்³ பாவம் மிகவும் முக்கியமானது. இது இருவகைப்படும்.

அ) *ருபாதிதேஸம்* – இதில் ஸ்த³ானி எனப்படும் மூலவடிவத்தை ஆதேஸம் எனப்படும் துணைமை வடிவத்தின் இடத்தில் (secondary form) பதிலியாகக் கொண்டு வருவது இதற்கு ரூபாதிதேஸம் எனப்படும் (ஆ)மற்றொரு வகையான ஸ்தானிவத்³ பாவம் கார்யாதிதேஸம் எனப்படும். ஸ்த2ானி அதாவது மூல வடிவத்துக்கு விதிக்கப்படும் செயற்பாடு, அதற்குப் பதிலியாக அமையும் வடிவத்திலும் செயற்படுவது.

விதி எனப்படும் பொதுவான செயற்பாடு விதிகளைப் பற்றி இங்கு சிறிது விளக்குவது பொருத்தமாக இருக்கும். இவைகள் ப்ரத்யயம் (ஒட்டு) ஆகமம், ஆதே³ஸம்–(பதிலி), விகாரம் (மாற்றம்), லோபம் (கெடுதல்) ஆகியவைகளைப் பற்றியது. *ப்ரத்யய* ஒட்டுக்களையிணைத்துச் சொற்கள் தருவிப்பது பற்றியது, ஆகமம் விகரணம், ஆகமம் என்று இருவகையானது. விகரணம் தாதுக்களுடன் இணைக்கப்பட்டு வினையடிச் சொல்லாக்கப்படுவதைப் பற்றி விளக்கும். விகரணங்களை ஒட்டுக்களெனக் கருதப்படும். இவைகள் அடிச்சொல்லோடிணைக்கப்பட்ட போதிலும் தனது தனித்தன்மையைத் தக்கவைத்துக் கொள்ளும். ஆனால் ஆகமங்களை ஒட்டுக்களெனக் குறிப்பிடுவதில்லை. அவைகள் ஓரடிச் சொல்லோடிணைக்கப்படும்போது அதோடு ஒரு பகுதியாகவே மாறிவிடும். தனது தனித்தன்மையைத் தக்கவைத்துக் கொள்ளாது.

*ஆதேஸம்* – பதிலிகளைப் பற்றிக் கூறுபவை

*லோபம்* – கெடுதல், மறைதல்

காணப்படாதது (அத³ர்ஸவம்) லோபம்(கெடுதல்) என்று இதை பாணினி விளக்குகிறார். (1.1.60) 'லுக்', 'ஸ்லு', 'லுப்', 'லோப' என்ற சொற்களை இதற்குப் பாணினி பயன்படுத்துகிறார். இவற்றுள் ஒட்டுக்கள் கெடுதலைப் பற்றிக் கூறும்போது 'லுக்', 'ஸ்லு', 'லுப்' என்ற சொற்களையும் ஒட்டுக்களல்லாத மற்றவைகளின் மறைதலைப் பொதுவாக லோப என்ற சொல்லாலும் குறிப்பிடுகிறார். ஒட்டுக்களின் கெடுதலைச் சுட்டும் 3 சொற்களில் 'ஸ்லு' என்ற சொல், ஒரு குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்த தாதுக்களுக்குப்பின் நிற்கும் ஒட்டுக்கள் கெடுதலைச் சுட்டும்போது மட்டுந்தான் பயன்படுத்தியுள்ளார். தனது

மூல எண்ணையும், பாலையும் தக்க வைத்துக் கொள்ளும் தத்திவொட்டுக்கள் கெடுதலைப் பற்றிப் பேசுமிடங்களில் 'லுப்' என்ற சொல்லைப் பயன்படுத்தி விளக்கியுள்ளார். 'ஸ்லு', 'லுப்' என்ற இரண்டையும் பயன்படுத்த இயலாத மற்ற இடங்களான தாதுக்கள் அல்லது பெயரடிச் சொற்கள் ஆகியவைகளுக்குப்பின் நிற்கும் ஒட்டுக்கள் கெடுதலைப்பற்றி விளக்கும்போது 'லுக்' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். இவைகளைத் தவிர்த்த ஏனைய இடங்களில் கெடுதலை 'லோபம்' என்ற சொல்லால் விளக்குகிறார். 'லுக்', 'ஸ்லு', 'லுப்' என்ற சொற்களைப் பயன்படுத்தி விதிக்கப்பட்டிருக்கும் 'கெடுதல்' ஒட்டு முழுமையாகக் கெடுதலை விதிக்கிறது, ஒட்டு அல்லது ஒட்டு அல்லாதது (non-suffix) ஆகியவைகளின் ஒரேயொரு பகுதி மட்டும் கெடுதலை லோப என்ற சொல்லைப் பயன்படுத்தி விதியமைத்துள்ளார்.

### அஷ்டாத்தியாயியின் அமைப்பு

அஷ்டாத்தியாயி கிட்டத்தட்ட 4000 சூத்திரங்களை உள்ளடக்கிய எட்டு அத்தியாயங்கள் கொண்டது என்று ஏற்கெனவே குறிப்பிட்டோம். இவ்வத்தியாயங்களில் விளக்கப்பட்ட பொருட்கள் வருமாறு.

### அத்தியாயம் ஒன்று

ஸம்க்[3]ஞா, பரிப[4]ாஷா விதிகள், அதிதேஸ விதிகள், ஆத்மனேபதம் பரஸ்மைபதம் பற்றிய விதிகள், காரகங்கள் பற்றிய விதிகள்.

### அத்தியாயம் இரண்டு

தொகைகள் பற்றிய விதிகள் வேற்றுமையுருபுகள், தொகைகளின் எண்=பால் பற்றிய விதிகள், தாதுக்களின் பதிலிகள் பற்றிய விதிகள், லுக்–கினால் கெடுதல் பற்றிய விதிகள்

### அத்தியாயம் மூன்று

'ஸன்' முதலியவொட்டுக்களிணைத்துத் தருவிக்கப்பட்ட தாதுக்கள் பற்றிய விதிகள், 'க்ருத்' ஒட்டிணைக்கப்பட்டு ஆக்கப்பட்ட சொற்கள் தொடர்பான விதிகள், 'திங்' ஒட்டுக்களிணைத்தாக்கப்படும் வினைகள் தொடர்பான விதிகள்

### அத்தியாயம் நான்கும் ஐந்தும்

வேற்றுமையுருபுகள் (ஸுப்) இணைத்தாக்கப்படும் சொற்கள் தொடர்பான விதிகள், பெண்பாலொட்டுக்கள் தொடர்பானவை, தத்[3] தி[4]தவொட்டுக்களிணைத்தாக்கப்பட்ட பெயர்ச் சொற்கள் பற்றிய விதிகள்.

அத்தியாயம் ஆறும் எழும்

இரட்டித்தல், உயிராக்கம் (ஸம்ப்ரஸாரணம்) ஸந்தி(ஸம்ஹித), ஸுட் ஆகமம், சுரம், அடிச் சொல்லின் ஒலியனியல் செயற்பாங்கு தொடர்பான விதிகள், ஒட்டுக்கள், ஆகமங்களில் செயற்பாங்கு பற்றிய விதிகள்.

அத்தியாயம் எட்டு

சொற்களின் இரட்டிப்பு, பதங்களின் சுரம், பதம் தொடர்பான ஒலியனியல் செயற்பாங்கு, பதங்களல்லாதவைகள் தொடர்பான பலவிதமான செயற்பாங்குகள் பற்றிய விதிகள்.

ஸபாத ஸப்தாத்[4]யாயி 'முதல் ஏழு அத்தியாங்களும் ஒரு பாதமும் கொண்டது'. த்ரிபாதி[3] 'கடைசி மூன்று பாதங்களைக் கொண்டது' என்று அஷ்டாத்தியாயியை அதமைப்பின் அடிப்படையில் இரு தொகுதிகளாகப் பிரிக்கலாம். இந்த இருவகைப் பாகுபாடு 8.2.1 இலிருந்து தெளிவாகப் புலனாகிறது. இறுதியிலமையும் மூன்று பாதங்களில் விதிக்கப்பட்டுள்ள விதிகள் அதற்கு முன்னாலுள்ள ஏழு அத்தியாங்கள் எட்டாம் அத்தியாயம் முதல் பாதம் ஆகியவைகளைப் பொறுத்தவரையில் செயலற்றவையென்று 8.2.1 கூறுகிறது (பூர்வத்ராஸித்[3]தம்)

## பாணினியின் இலக்கணத்தில் கையாண்டுள்ள பொதுவான செயல்முறைக்கொள்கைகள்

வழக்கிலிருக்கும் சில சொற்களில் காணப்படும் பொதுத் தன்மையின் (ஸாமான்ய) அடிப்படையில் அவைகளையொரு தொகுதியாக எடுத்துக்கொண்டு அவைகளின் பொதுத் தன்மையைச் சுட்ட விதிகளையமைத்துள்ளார். இவற்றுள், சில சொற்களில் காணப்படும் சிறப்புத் தன்மையைச் சுட்ட அவைகளை இதன் உட்பிரிவாக அமைத்துள்ளார். ஆகவே இவ்விலக்கணத்தில் பாணினி, பொதுவான விதிகளை (உத்ஸாகர்)யமைத்து அவைகளைச் சார்ந்த சில புறனடை விதிகளை (அபவாத)யும் அமைத்துள்ளார். உத்ஸர்க விதிகள் விரிவான செயல் எல்லை (broad demain) கொண்டதாகவும் அவைகளின் தொடர்பான புறனடை விதிகள் அதற்குட்பட்டதாகவும் காணப்படுகிறது. உத்ஸர்க விதி, அபவாத விதி இரண்டையுமே ஒரு சூழலில் பயன்படுத்தக்கூடிய ஒரு நிலை ஏற்படும்போது உத்ஸர்கவிதியை விட அபவாத விதிதான் பலம் பொருந்தியது. ஆகவே இச்சூழலில் அபவாத விதியைத்தான் பயன்படுத்த வேண்டும் என்று கூறுகிறது ஒரு பரிபாஷா விதி. காட்டாக, 6.1.77 முழு உயிர்களான இ,உ,ருல் ஆகியவைகளுக்குப்பின் ஒருவிரெழுத்து நிற்கும்போது அவ்வுயிரெழுத்துக்களுக்குப் பதிலியாக முறையே அரையுயிர்களான ய்,ப்,ர்,ல் வரும் என்று கூறுகிறது. (இகோ யணசி) சூ.6.4.77 இவ்விதிக்குப் புறனடையாக அமைகிறது. 'ஈ' அல்லது 'ஊ' வீற்றுச் சொற்களுக்குப்பின் ஒருயிரெழுத்தை முதலில் கொண்ட ஒட்டு நிற்கும்போது, இறுதியுயிரான 'ஈ' அல்லது' ஊ'வுக்குப் பதிலியாக முறையே 'இயங்' 'உவங்' வருமென்று இச்சூத்திரம் கூறுகிறது. அயலாத விதி, உத்ஸர்க விதியைச் செயலற வைக்குமென்ற (blocking)பரிபாஷாவின் படி இங்கு 6.4.77தான் செயற்படும். 6.1.77

அல்ல.

<u>அந்தரங்க ( அகக்கட்டுப்பாடு ), ப[3]ஹிரங்க[3] ( புறக்கட்டுப்பாடு ) செயற்பாங்கு</u>

இவ்விரண்டின், அகக்கட்டுப்பாட்டுக்குளுகடக்கிய விதி, முதலில் செயற்படும் (அந்தரங்கம் கார்யம்) அதன்பிறகுதான் பஹிரங்கவிதி செயற்படும். காட்டாக வஸதியத்ர (வஸதி > வஸது+அத்ர) 'அவன் இங்கு வசிக்கட்டும்'. லோடோ லங்வத் (3.4.56) 'லோட்'டின் அடிப்படைபொட்டுக்களை (basic endings) லங் (நிகழ்கால ஒட்டு) போன்று கருதப்படுமென்று இச்சூத்திரம் கூறுகிறது. இகோ யணசி (6.1.77). முழு உயிருக்கும் அரையுயிர் பதிலியாவதை விதிக்கும். மேலே கொடுக்கப்பட்ட எடுத்துக்காட்டில் அதாவது வஸத்வத்ர = வஸதி + வஸது (3.4.86) அத்ர = வஸத்வத்ர (6.1.77) என்ற படிநிலையில் ஆக்கவேண்டும். இதில் 3.4.86 அந்தராங்க விதி, 6.1.77 ப[3]ஹிரங்க விதி.

கட்டாயமாக செயற்படுவது, கட்டாயமாக அல்ல. (நித்ய, அநி த்ய) செயற்பாங்கு

$க_1$, $க_2$ என்ற இரண்டு விதிகளுமே ஒரு குறிப்பிட்ட சூழலில் செயற்படக்கூடுமென்று ஒரு நிலையை வைத்துக் கொள்வோம். இவைகளிலொன்று நித்ய–மாகவும் மற்றொன்று அந்த்யமாகவும் கீழ்க்கண்ட நிபந்தனைக்குள்ளமையும்போது கருதப்படும். $க_1$ஐப் பயன்படுத்திய பிறகு '$க_2$'செயற்படமுடியாத நிலையேற்படுமானால், அதாவது '$க_1$' செயற்படுவதால் '$க_2$' செயற்படக்கூடிய சூழல் மறைந்து அல்லது நீக்கப்பட்டு விடுகிற நிலை. அதே சமயம் '$க_2$' செயற்பட்ட போதிலும் '$க_1$' செயற்படக்கூடிய நிலை நீடிப்பது இவ்விரண்டு சூழலில் '$க_1$' நித்யமாகவும் '$க_2$'அநித்யமாகவும் கருதப்படும். இவ்விரண்டில் 'க' (அதாவது அநித்ய கட்டாயமாகச் செயற்படாத)வுக்கு முன்பு '$க_1$' (நித்ய கட்டாயமாகச் செயற்பட வேண்டியது) ஐப் பயன்படுத்த வேண்டும். இதை 'துத்[3]' 'தாதுவிலிருந்து வினைச்சொல் தருவிப்பதைக் காட்டாக எடுத்துக்கொண்டு விளக்குவோம். 'துத்[3]' தோடு திங் இ ணைக்கும் நிலையில் இரண்டு விதிகளை ஒரே சமயத்தில் பயன்படுத்தக்கூடிய நிலையைக் காணலாம். சூ.3.1.77ஐப் பயன்படுத்தி தாதுவோடு 'ஸ' இணைப்பது 7.3.86ஐப் பயன்படுத்தி 'துத்[3]' இன் 'உ'வுக்கு குணவெழுத்து பதிலியாக இணைத்தல், இவ்விரண்டுக்குள், 'குண'வெழுத்து ஓ பதிலியாக வந்தபிறகும் 'ஸ'வை தாதுவோடு இணைக்க முடியும். கர்த்தாவைச் சுட்டும் ஸார்வதாதுகவொட்டு இச்சுழலிலிலும் 'துத்[3]' ஐத் தொடர்ந்து வரமுடியும். 3.4.86இன்படி 'து' நிகழ்காலவொட்டான 'தி' போன்று செயற்படும். இதைப்போல் 'தோத்'ஐயும் 'துத்[3]' போன்று கருதப்படும் (1.1.56). ஆனால் 'ஸ'வை முதலில் இணைத்தால் குணம் பதிலியாக வராது. 'ஸ' ஒரு 'ஙித்'ஆகும் (1.2.84). ஆகவே 7.3.66–இல் விதிக்கப்பட்ட குணம் பதிலியாக வராது (1.1.5) ஆகையால் குணவெழுத்து பதிலியாகும் என்ற விதியான 7.3.86 (நித்யமானது) முதலில் செயற்படவேண்டும்.

## 4) விப்ரதிஷேதே[4] பரம் கார்யம் ( 1.4.2 )

ஒன்றுக்கொன்று முரண்பாடான இருவிதிகள், பொதுவிதி (உத்ஸர்க) புறனடை(அபவாத) என்ற தொடர்புக்குள் அமையாதவைகளாக நிற்கும் போது அவ்விரண்டையுமே மாறி மாறிப் பயன்படுத்தலாம் என்று விதியமைக்கப்பட்டுள்ளது.

காட்டாக 3.1.133 'ண்வுல்', 'த்ருச்' என்ற வொட்டுக்களை தாதுக்களுடவிணைப்பதுபற்றிய விதி, ஆனால், ஒரே சமயத்தில் இரண்டு ஒட்டுக்களையும் இணைத்தல் கூடாது. ஒரேயொரு ஒட்டுத்தான் இணைக்க முடியும். மேலே கூறிய விதி (அதாவது 3.1.133) இல் ஓட்டுக்களை மாறிமாறி இணைக்க விதி வகுத்துள்ளது. ஆயினும் ஒன்றுக்கொன்று முரண்பாடான செயல்பாங்கு கொண்ட இரு விதிகளில் ஒன்றேயொன்றைத்தான் பயன்படுத்தவியலும் என்ற சூழலும் காணப்படுகிறது. இத்தகைய சூழலில் எந்த விதியைப் பயன்படுத்த வேண்டுமென்பதற்கும் விதியமைத்துள்ளார் பாணினி. இத்தகைய சூழலால் ஏற்படும் குழப்பதைத் தவிர்க்க பாணினி, சூத்திரங்களை (இந்தவிடங்களில்) ஒரு குறிப்பிட்ட வரிசைக் கிரமத்தில் அமைத்துள்ளார். இவைகளுள் எது முதலில் செயற்படுமென்பதை 1.4.2 பரிபாஷா விதி விளக்குகிறது. இந்தப் பரிபாஷா விதியின்படி முரண்பாடான இரு விதிகளுள் வரிசைக் கிரமத்தில் பின்னால் நிற்கும் விதியை அவ்வரிசையில் முதலில் நிற்கும் விதி செயற்படுவதற்கு முன்பே பயன்படுத்த வேண்டும்.

## 5) பூர்வத்ராஸித்தம் (8.2.1)

8.2.1இலிருந்து அத்தியாயத்தில் கடைசி வரையில் இந்த விதி பொதுவாகச் செயற்படும். இப்பகுதிக்கு 'த்ரிபாதி' என்று பெயர். இப்பகுதியில் காணப்படும் சூத்திரங்களுள், பின்னால் விதிக்கப்பட்டுள்ள விதிகள், அதற்கு முன்னால் விதிக்கப்பட்டுள்ள விதிகளின் செயல்பாங்கைப் பொறுத்தவரையில் செயலற்றவை. அதாவது நிகழாதவையென்று கருதப்படும். இத்தகைய விதியின் செயல்பாங்கு நிறுத்தம் (suspension of rule) கடைசி மூன்று பாதங்களைத் தவிர, வேறு அத்தியாயங்களிலும் செயற்படுவது உண்டு. 'த்ரிபாதி'யில் காணப்படும் விதிகள், அதற்கு முன்னால் அமைந்துள்ள முதல் ஏழு அத்தியாங்களிலும் 8வது அத்தியாயத்தின் முதல் பாதத்திலும் கூறப்பட்ட விதிகளைப் பொறுத்தவரையில் நிகழாதவையென்று கருதப்படும். ஆகவே, த்ரிபாதியின் விதிகள் அவைகளுக்கு முன்னால் அமைக்கப்பட்டிருக்கும் விதிகளைப் பொறுத்த வரையில் இல்லாதவைகளாகும் (non-existent) 'அஸித்த' (தற்காலிகமாக நிறுத்திவைத்தல்) விதிகளின் விளைவு வருமாறு (1) 'த்ரிபாதி'யின் ஒரு விதியைப் பயன்படுத்தி ஒரு சொல்லைத் தருவித்தால், 'த்ரிபாதி'க்கு முன்னாலமைந்திருக்கும் விதியை அத்தருவிக்கப்பட்ட சொல்லில், செயற்படுத்த முடியாது. அதற்கான சூழல் காணப்பட்டாலும் செயற்படுத்த முடியாது. (2) முதல் ஏழு அத்தியாயங்கள், எட்டாம் அத்தியாயத்தின் முதல் பாதம் ஆகியவைகளின் விதிகள் செயற்பட்ட பிறகுதான் த்ரிபாதி–யின் விதிகளைச் செயற்படுத்த முடியும். அவ்வாறே, த்ரிபாதியிலமைக்கப்பட்டுள்ள விதிகளில், முதலில் காணப்படும் விதிகளை செயற்படுத்திய பிறகுதான் பின்னால் அமையும் விதிகளை செயற்படுத்த வேண்டும். இதை ஓரிரு எடுத்துக் காட்டுக்களின் மூலம் விளக்குவோம்.

'அஸ்மை' என்ற (நான்காம் வேற்றுமையொருமை) மாற்றுப்பெயரினிறுதி 'ஐ'யைத் தொடர்ந்து ஒருயிரெழுத்து நிற்கும்போது, இவ்விறுதி 'ஐ','ஆய்' ஆகும் (3.1.78) அதாவது

அஸ்மை → அஸ்மாய் ஆகும். 8.3.19 சொல்லினீறான 'ய்'கெடும் என்று விதிக்கிறது. ஆகவே இச்சொல் அஸ்மா என்றாகிறது. இப்போது இச்சொல்லைத் தொடர்ந்து உயிரெழுத்தை முதலில் கொண்ட ஒரு சொல் வருமானால், பொதுவாக 'ஸந்தி'விதியின் படி நிகழும் மாற்றங்கள் ஏற்படாது. அஸ்மா+உத்[3]த[4]ர=அஸ்மா உத்[3]த[4]ர அஸ்மா+ஆஹர=அஸ்மா ஆஹர இவைகள் அஸ்மோத், அஸ்மாஹர என்று ஆகாது. அதாவது 6.1.87 விதிக்கும் குணவெழுத்து பதிலியாக வருவது 6.1.101 விதிக்கும் நெடில் பதிலியாக வருவது ஆகிய ஸந்தி விதிகள் இங்கு செயற்படாது. ஆகவே, 8.3.19, அதற்கு முன்னாலமைந்துள்ள 6.1.87 101 சூத்திரங்களைப் பொறுத்தவரையில் நிறுத்திவைக்கப்பட்டுள்ளதாக கருதப்படும். இவ்வாறு அதன் செயலாக்கத்தைத் தற்காலிகமாக நிறுத்தி வைப்பதால், 6.1.87 101 ஸந்திவிதிகள் செயற்படுவதற்கான சூழல் ஏற்படாமல் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. அதாவது 8.3.19–ஐ பயன்படுத்தினால் உண்டாகும். இறுதி 'ய்' கெட்டதாக் கருதப்படமாட்டா.

## பாணினியின் சொல்லாக்க முறை

ஸம்ஸ்கிருத மொழியின் கூற்றுகளையும் அவற்றின் உறுப்பினர்களையும் ஆக்கப்படும் முறையை தனது இலக்கண நூலான அஷ்டாத்தியாயியில் விளக்கியுள்ளார். அடி (base) அதாவது ஒட்டுக்களிணைக்கப்படுவதற்கு முன்பு நிற்கும் வடிவம் (அங்க 1.4.13) ஒட்டுக்கள் (3.1.1), பதம் (தொடரியல் சொல் 1.4.14), வாக்கியம் ஆகியவைகள் கூற்றுகளின் உறுப்பினர்களாகக் கருதப்படுகின்றன. அடி–இருவகைப்படும் (அ) வி னையடி (தாது 1.1.1 3.1.32), (ஆ) பெயரடி (பிராதிபதிகம் 1.2.45–46) இவ்விரண்டையும் மூலஅடி, ஆக்கப்பட்ட அடி என்று திரும்பவும் இருவகையாகப் பிரிக்கலாம். ஸுப் (வேற்றுமையுருபுகள் (4.1.2) அல்லது திங் (மூவிடப் பெயர் ஒட்டுக்கள்) (3.4.78) இணைக்கப்பட்டு ஆக்கப்பட்ட முழுமையான வினைச் சொல், பெயர்ச் சொல்லுக்கு பதம் என்று பெயர். ஒட்டுக்கள் இருவகையானவை (அ) தாதுக்களுடனிணைக்கப்படுபவை. இவைகள் நான்கு வகைப்படும் (1) முதல் தாதுவுடனிணைக்கப்படும் ஒட்டுக்கள். இவைகள் துணை வினைக்கு (நாமதாது, இயக்குவினை போன்றவை) ஆக்கப்பயன்படுபவை (2) விகரணங்கள் (conjugational sign) (3)திங்– (மூவிடப் பெயர் ஒட்டுக்கள்) (4)க்ருத் ஒட்டுக்கள் ஆகியவை இவைகள் தாதுக்களுடனிணைக்கப்படுபவை (ஆ) தத்திதவொட்டுக்கள் இவைகள் பிராதிபதிகங்கள் அல்லது பெண்பாற் சொற்களுடனிணைக்கப்படுபவை (4–5)

ஒட்டுக்கனிணைப்பது பற்றிப் பேசும்போது, பெரும்பாலும், எந்தெந்தப் பொருளைச் சுட்டும் சூழலில் இவைகள் அடிச் சொற்களுடவிணைக்கப்படும். இவைகளோடு எவ்வகையான சொற்கள் அல்லது ஒட்டுக்கள் எந்தெந்தப் பொருளைச் சுட்டும் போது நிற்கும் என்பதையும் பாணினி விளக்கியுள்ளார்.

**1.2.41** அப்ருக்த ஏகால் ப்ரத்யய:

ஒரே ஒரு எழுத்தைக் கொண்ட ஒட்டுக்கு அப்ருக்தம் என்று பெயர்.

எ–டு க்வின் ஒரு அப்ருக்தம். இங்கு 'வ்' (எழுத்து) ஒட்டு மற்ற க், இ, ன் 'இத்'

ஒரு அடிச்சொல் (லோடு இணைக்கப்பட்ட அப்ருக்தம் கெடும் (6.1.67) க்$^4$ருதஸ்ப்ருஸ் + க்வின் = க்$^4$ருதஸ்ப்ருக் வ் (3.2.58) க்$^4$ருதஸ்பருக்

**1.2.42** தத் புருஷ ஸமானாதி$^4$கரண: கர்மதா$^4$ரய

ஸமான (ஒரே/ஒத்த வேற்றமையில் அமைந்துள்ள பதங்களைத் தொகுத்து உருவாக்கிய தத்புருஷ ஸமாசத்துக்கு (வேற்றுமைத் தொகை) கர்மதா4ரயம் என்று பெயர்( பண்புத் தொகை)

எ–டு நீலோத் பலம் (நீலம் உத்பலம்)

**1.2.43** ப்ரத$^2$மா நிர்தி$^3$ஷ்டம் ஸமாஸ உபஸர்ஜனம்

(இந்த இலக்கண நூலில்) ஸமாஸத்தைப் பற்றிப் பேசும் இடங்களில் எந்தவொரு சொல் முதல் வேற்றுமையில் அமைந்துள்ளதோ அச்சொல்லுக்கு உபஸர்ஜனம் என்று பெயர்.

எ–டு த்$^3$விதீயா ஸ்ரித அதீத பதித க$^3$த (2.1.24) என்ற சூத்திரத்தில் 'த்$^3$விதீயா' என்ற சொல் ப்ரத$^2$மா விப$^4$க்தியில் முதல் வேற்றுமையில் அமைந்துள்ளது. இது உபஸர்ஜனம், காட்டாக, கஷ்டஸ்ரித: என்ற தத்புருஷ ஸமாஸத்தில் கஷ்ட என்ற சொல் உபஸர்ஜனம்.

**1.2.44** ஏக விப$^4$க்தி : சாபூர்வநிபாதே

ஒரு ஸமாஸத்தின் ஒரு உறுப்பினர் எப்போதுமே ஒரே வேற்றுமையு ருபைக் கொண்டதாயும் (ஏகவிபக்தி) (புதைநிலையில்) அது முதல் உறுப்பினரல்லாததவும் அமையும்போது அவ்வுறுப்பினர் உபஸர்ஜனம் என்ற பெயர் பெறும்.

எ–டு

| | | |
|---|---|---|
| 1) நிஷ்க்ராந்த: | கௌஸாம்ப்$^3$யா: | நிஷ்கௌஸாம்பி$^3$ |
| 2) நிஷ்க்ராந்தம் | கௌஸாம்ப்$^3$யா: | நிஷ்கௌஸாம்பி$^3$ம் |
| 3) நிஷ்க்ராந்தேன | கௌஸாம்ப்$^3$யா: | நிஷ்கௌஸாம்பி$^3$னா |
| 4) நிஷ்க்ராந்தாய | கௌஸாம்ப்$^3$யா: | நிஷ்கௌஸாம்ப$^3$யே |
| 5) நிஷ்க்ராந்தாத் | கௌஸாம்ப்$^3$யா: | நிஷ்கௌஸாம்பே$^3$ |
| 6) நிஷ்க்ராந்தஸ்ய | கௌஸாம்ப்$^3$யா: | நிஷ்கௌஸாம்பே$^3$ |
| 7) நிஷ்க்ராந்தே | கௌஸாம்ப்$^3$யா: | நிஷ்கௌஸாம்பெ$^3$ள |

இங்கு முதல் உறுப்பு பல வேற்றுமைகளில் காணப்பட்டாலும் 2வது உறுப்பு. 5ம் வேற்றமையிலேயே எல்லா இடங்களிலும் அமைந்திருக்கிறது. இதற்கு, அதாவது, 'கெஸாம்ப்யா' என்ற சொல் உபஸர்ஜனம் எனப் பெயர் பெறுகிறது.

**1.2.45** அர்த²வத் அதா⁴துர் அப்ரத்யய: ப்ராதிபதிகம்.
தாதுவோ, ப்ரத்யயமோ (ஒட்டு) அல்லாத, பொருளை உணர்த்தும் ஒரு சொல், ப்ராதிபதி³கம் எனப்படும்.
எ–டு குண்டம் பானை

**1.2.46** க்ருத் தத்³தி⁴த ஸமாஸாஸ்' ச
க்ருத். தத்³தி⁴த ஒட்டுக்களை இணைத்து உருவாக்கும் சொற்கள் ()உம், ஸமாஸங்களும் கூட ப்ராதிபதி³கம் எனப் பெயர் பெறும்.
எ–டு க்ருத்–காரக: க்ரு + ணவுல் (3.1.133, 7.1.1, 2.115) தத்³தி⁴த – ஔபக³வ உபகோர் அபத்யம் உபகு +அண் (4.1.92)
ஸமாஸ–ரஜபுருஷ: ராக்கு: புருஷ: (2.4.71 , 8.2.7)

**1.2.47** ஹ்ரஸ்வோ நபுமம்ஸகே ப்ராதி பதி³கஸ்ய
ப்ராதிபதிகத்தின் இறுதி உயிர்க்குப் பதிலாக ஒரு குறில் அஃறினையில் (நபும்ஸகே) வரும்.
எ–டு அதிரை – அதிரி; ஆனால் க்ராமணீ (ஆண்பால்)

**1.2.48** கோ³ஸ்த்ரியோர் உபஸர்ஜனமஸ்ய
உபஸர்ஜனமாக வரும் கோ³ என்ற சொல்லின் இறுதி உயிர்க்கும், பெண்பால் ஒட்டுக்களில் முடியும் ப்ராதி பதி³ கத்தின் இறுதி உயிர்க்கும் பதிலாகக் குறில் வரும்.
எ–டு சித்ர + கோ³ = சித்ரகு³ ; அதி + மாதா = அதிமாத:

வா: ஈயஸி ப³ஹுவ்ரீஹே ப்ரதிஷேதோ⁴ வக்தவ்ய: 'ஈயஸி' என்ற ஒட்டில் முடியும் பெண்பால் சொற்கள், பஹுவ்ரீஹிஸமாசத்தில் வரும்போது, இந்த விதிக்கு விலக்காகும்.
எ–டு ப³ஹுஸ்'ரேயஸி

**1.2.49** லுக் தத்³தி⁴த லுகி.
ஒரு தத்³தி⁴த ஒட்டு கெடும்போது (லுக்) அத்துடன், உபஸர்ஜனத்தி ன் பெண்பால் ஒட்டுக்களும் 'லுக்' இனால் கெடும்.
பஞ்ச இந்த்ராண்யோ தே³வதா அஸ்ய
பஞ்ச + ஐஸ் + இந்த்ர + ஆனுக் + ஙீஷ் + ஐஸ் + தேவதா + ஐஸ் = பஞ்ச+ 0/ இந்த்ர 0 0 ஸு + பஞ்சேந்த்ர
4.2.24 படி 'அண்' ஒட்டு இணைக்கப்படுகிறது. 4.1.88,' அண்' ஒட்டு 'லுக்' கினால் கெடும். தத்தித ஒட்டுக்கு 'லுக்' ஆதேஸம் வரும்போது பெண்பால் ஒட்டு 'ஙீஷ்' உம் மறையும் அதனால் பஞ்சேந்த்ர (5 இந்திர ாணிக்குரிய யாகத்தின் ஆப்பம்) என்ற புறநிலையில் உள்ள தொகை கிடைக்கிறது.

**1.2.50** இத்[3] கோ[3]ண்யா

கோணி ஒரு அளவு என்ற பெயர்ச் சொல்லோடு இணைக்கப்பட்ட தத்[3]தி[4]த ஒட்டு லுக் கினால் கெடும்போது, அதன் இறுதி உயிர் குறிலாகும்.

எ–டு பஞ்ச கோ[3]ணி : பஞ்ச: பி[4]: கோ[3]விபி[4]: க்ரித:

பஞ்ச + பி[4]ஸ கோ[3]ணி பி[4]ஸ் க்ரீத + ஸி + பஞ்ச θ கோணி = த[2]க் (5.1.19 37) பஞ்ச – கோணீ θ (5.1.28) பஞ்ச கே[3]ாணி ஸு 5 சாக்குக்கு வாங்கியது.

**1.2.51** லுபி யுக்த வத்[3] வ்யக்தி வசனே

'லுப்' ஒரு தத்[3]தி[4]த ஒட்டுக்குப் பதிலியாக வரும்போது, (அதாவது தத்தித ஒட்டு கெடும்போது). தத்தி3தத்தினால் தருவிக்கப்பட்ட சொல்லின், பால்(வயக்தி), எண் (வசனே) ஆகியவைகள் மூல வடிவத்தோடு ஒத்திருக்கும்.
வங்கானாம் ஜனபதோ நிவாஸ: வங்க மக்களின் தேசம் வங்க + அண்(4.1.83 2 ஈ69) வங்க θ (4.2.84) வங்க + ஜஸ் = வங்கா:
ஆனால், லவணேன ஸம்ஸ்ருஷ்டா: ஸூப: லவண + ட[4]க
(4.4.22) லவண லுக் (4.4.24) லவண: ஸூப(ஆண்பால்) லவணா யவாகூ: 3 (பெண்பால்) லவணம் ஸ1ாகம் (அஃறிணை)
இங்கு 'லுக்' ஆதேஸத்தால் மூலச் சொல் அஃறிணையாக இருந்த போதிலும், தருவிக்கப்பட்ட சொல் 3 பால்களிலும் அமைகின்றன.
வா. ஹரீதக்யாதிஷூவவ்யக்தி:
ஹரீதகி முதலிய சொற்களில், பால் மட்டுந்தான் மூலச் சொல்லை ஒக்கும்.
ஹரீதக்யா: ப[2]லானி ஹரீதக்ய: (4.3.167) கடுக்காய் பழங்கள்
வா: க[2]ரதி காதி[3]ஷுவசனம்
'க[2]லதிக' முதலிய சொற்களில், எண் மாத்திரம் மூலச் சொல்லை ஒத்திருக்கும்.
க[2]லதிகஸ்ய பர்வதஸ்ய அதூ3ரப4 வானி வனானி (4.2.7082)
க[2]லதிகம் வனானி. 'மலைக்காடுகள்' அதாவது, மலையின் பக்கத்தில் உள்ள காடுகள் இங்கு கலதிகம், ஒருமை, வனானி பன்மை.

**1.2.52** விஸே[1]ஷணானாம் [4] அஜாதே:

ஒரு இனத்தைக் குறிக்கும் விஸே[1]ஷணங்களைத் தவிர (பெயரடை) மற்ற விஸே[1]ஷணங்களின் பாலும், எண்ணும் மூலச் சொற்களை ஒத்திருக்கும்.
பஞ்சாலா: ரமணீயா: ப[3]ஹூ அன்னா: ப[3]ஹு க்ஷீரக்[4]ருதா:
பஹுமால்ய ப[2]லா: அழகிய பஞ்சால மக்கள், நிறைய உணவு, பால், நெய் முதலியவைகளை உடையவர்கள் இங்கு, ரமணீயா: முதலிய பெயரடைகள். பஞ்சாலா என்ற பெயர்ச் சொல்லின் பால், எண்ணுடன் இயைபு உள்ளதாக அமைத்திருக்கின்றன.
ஆனால் பஞ்சாலா: ஜனபத: இங்கு ஜனபத என்ற சொல், ஒரு இனத்தை (ஜாதி)க் குறிப்பதால், பஞ்சாலா: என்ற சொல்லின் பால், எண்ணுடன் இயைபு

காணப்படவில்லை.

வா. மனுஷ்யலுபி ப்ரதிஷேத[4]: வக்தவ்யம்

'லுப்' இனால் தருவிக்கப்பட்ட மனிதன் தொடர்பான சொற்கள், விதிவிலக்கு சஞ்சா கத் 'லுப்' (5.3.98) சஞ்சா, சஞ்சா அபி4ரூப: இங்கு அபிரூப:, என்ற பெயரடைக்கும் சஞ்சா என்ற பெயர்ச்சொல்லுக்கும், பால் எண் இயைபு இல்லை. (வைக்கோலினால் செய்த அழகிய மனிதப் பொம்மை)

**1.2.53** தத் (அஸி'ஷ்யம்) ஸம்க்ஞா ப்ரமாணத்வாத்

இந்த பால் எண் இயைபு பற்றி கற்பிக்க வேண்டியது தேவையில்லை (அனி'ஷ்யம்) ஏனென்றால் அது வழக்கத்திலேயே உள்ளது. (மைக்[3]ஞா ப்ரமாணத்வாத்)

அடை–பெயர்ச்சொல், முதனிலைச் சொல், ஆக்கல்களின், பால் எண் இயைபு பற்றி (வழக்கிலேயிருப்பதால்) தனியாகக் குறிப்பிட வேண்டிய தேவையில்லை. காட்டாக, தா[3]ரா: 'மனைவி' என்ற சொல், எப்போதுமே ஆண்பால், பன்மை. ஆனால் இது பெண்மைக் குறிக்கும் சொல்லாகவே பயன்படுத்தப்படும் இதேபோல் 'ஆப' 'தண்ணீர்' பெண்பால் பன்மை.

இதற்கு முன்னால் கூறப்பட்ட சூத்திரங்கள் (சொல்) பொருளை வரையறுக்கிறது. இச்சூத்திரம் பஞ்சாலா போன்ற சொற்களை 'தத்திதலுப்' மூலம் ஆக்கிய சொற்கள் என்று கருதாமல், ஒரு பொதுப் பெயராகவே கருதலாம்.

**1.2.54** லுப் யோக[3] அப்ரக்[2] யானாத்

லுப் மறைவு பற்றிய சூத்திரங்கள் தேவையற்றவை. ஏனென்றால் முதனிலைச் சொல், அதனின்று ஆக்கிய சொல், இவ்விரண்டும் இடையே உள்ள பொருள் பற்றிய உறவு (ஸம்பந்தம்) வழக்கில் இல்லை. (அப்ரக்[2]யானாத்)

இச்சூத்திரங்களில், ஒரு சொல் இருப்பதுபோல் பாவித்து, அதன் பிறகு அது கெடுவதாகக் கூறப்பட்டிருக்கிறது.

காட்டாக, வரணா: என்ற சொல் ஒரு நகரத்தின் பெயர் இச்செ ால்லை, வரணா (ஒரு மரத்தின் பெயர்) என்ற சொல்லிலிருந்து ஆக்கப்பட்டது என்று சொல்வது, அதாவது, இந்நகரம், வரண மரங்கள் இருக்குமிடத்தில் அமைந்துள்ளது என்று சொல்வதைவிட இத்தகைய சொற்களை இயற்பெயராகக் கருதுவது பொருத்தமாக இருக்கும்.

(பார்க்க 4.2.69, 70, 81, 82)

**1.2.55** யோகப்ரமாணே சதத்[3]பா[4]வே அத[3]ர்ஸனம் ஸ்யாத்

முதனிலைச் சொல் – அதனின்று ஆக்கிய சொல், இவ்விரண்டுக்குமிடையே உள்ள உறவு அடிப்படையானது என்றால் அச்சொல் மறைந்த போது (செட்டபோது) (ததபாவே) அதனின்று ஆக்கிய சொல்லும் மறைந்துவிடும் (அதர்ஸ'னம் ஸ்யாத்) காட்டாக, பஞ்சாலா: என்ற சொல் ஒரு நாட்டின் பெயர். இந்த இனத்தை சேர்ந்த மக்கள் அங்கு வசிப்பதால், இந்நாடு பஞ்சால என்ற

சொல் ஒரு நாட்டின் பெயர். இந்த இனத்தை சேர்ந்த மக்கள் அங்கு வசிப்பதால், இந்நாடு பஞ்சால என்ற பெயர் பெற்றது என்று இச்சொல்லின் வரலாறு கூறப்படுகிறது ஆனால், இந்த இனம் அங்கு வசிக்காவிட்டால், இந்நாட்டின் பெயர் அதாகவேதான் இருக்கும். அப்பெயர் மறையாது. இத்தகைய சூத்திரங்களின் தேவையின்மையை பஞ்சாலா போன்ற சொற்கள் தெளிவாக்குகிறது.

**1.2.59** அஸ்மத்³ த்³வயோஸ் ச

அஸ்மத்² 'நான்' (தன்மை மாற்றுப் பெயர்)

ஒருமை, இருமையில், விருப்பாக பன்மை பயன்படுத்தப்படும்.

அஹம் ப்³ரவீமி நான் பேசுகிறேன்.

இதற்குப் பதிலாக வயம் ப்²ரும: நாங்கள் பேசுகிறோம் (இருமை) என்றும் கூறலாம்.

வா ஸவிஸே'ஷணஸ்ய ப்ரதிஷேஷதோ⁴ வக்தவ்ய:

அடையுடன் வரும்போது இவ்விதி பயன்படுவதில்லை.

அஹம் தே³வத³த்த: ப்³ரவீமி

நான் தேவதத்தன் பேசுகிறேன். இங்கு பன்மை பயன்படுத்த முடியாது.

வா யுஷ்மதி³ கு³ ரௌ ஏகேஷாம்

'கு³ருங என்ற சொல், யுஷ்மத்³ 'நீ' என்ற சொல்லுடன் பயன்படுத்தும்போது, விருப்பாக ஒருமையோ அல்லது பன்மையோ பயன்படுத்தலாம்.

த்வம் மே கு³ரு:/யூயம் மே கு³ரவ

**1.2.60** ப² ல்கு³னி ப்ரோஷ்ட² பத³ானாம் ச நக்ஷத்ரே

ப²ல்கு³னி ப்ரோஷ்ட² பதம் ஆகிய இரண்டு சொற்களும் நக்ஷத்திர த்தைக் குறிக்கும்போது இருமையானபோதிலும் விருப்பாக பன்மையில் பயன்படுத்தலாம்.

கதா³ பூர்வே ப²ல்கு³ன்யௌ, (இருமை): கத3ா பூர்வா:

ப²ல்கு³ன்ய:

கதா³ பூர்வே ப்ரோஷ்டபதௌ: கதா பூர்வா ப்ரோஷ்டபதா

இரட்டை நக்ஷத்திரங்கள் பொதுவாக இருமையில்தான் காணப்படு ம். இந்த விதி அவைகளைப் பன்மையிலும் விருப்பாகப் பயன்படுத்தலாம் என்று கூறுகிறது. ஆனால், இவைகள் நக்ஷத்திரத்தைக் குறிக்கும் போதுதான் இந்த ப²ல்கு³ன்யௌ மாணிவிகே–ப²ல்கு³னி நக்ஷத்திரத்தில் பிறந்த இரண் டு மாணவிகள் (இருமை)

**1.2.56** ப்ரதா⁴ன ப்ரத்யயார்த² வசனம் அர்த²ஸ்ய அன்யப்ரமாணத்வாத்

தருவிக்கப்பட்ட சொல்லின் பொருளை அதன் முக்கிய உறுப்பினரோ அல்லது ஒரு ஒட்டோ உணர்த்தும் என்ற கோட்பாட்டை கற்பிக்க வேண்டிய தேவை இல்லை. ஏனென்றால், அவைகளின் பொருள் வேறு ஒன்றை (அதாவது

வழக்(கு)ச் சார்ந்திருக்கிறது.
காட்டாக, இலக்கணம் என்ற பெயரைக்கூட கேள்விப்பட்டிருக்காத மனிதர்களிடம், 'ராஜ புருஷம் ஆநய' என்று சொன்னால், அவன், இச்சொற்றொடரின் பொருளை உணர்ந்து கொண்டு, அரசனிடம் பணியாற்றுகிறவனைத்தான் அழைத்துக் கொண்டு வருவான். அரசனையோ அல்லது வேறு ஒரு மனிதனையோ அல்ல; இதிலிருந்து சொற்களின் பொருள், வழக்கிலிருந்து அறிந்து கொள்ள வேண்டியது என்ற உண்மை தெளிவாகிறது.

**1.2.57** கால உபஸர்ஜனே துல்யம்
காலம் உபஸ்ர்ஜனங்களின் பொருளைக் குறிப்பிட ஒரு விதியமைப்பதும் தேவைபற்ற ஒன்று. இலக்கணமே யறியாதவர்கள் கூட. இச்செயல் இன்று செய்ய வேண்டும் (இச்செயல்) நேற்றச் செய்தேன் என்றுதான் கூறுவான். அதனால், இதற்காகத் தனி விதி அமைக்க வேண்டிய தேவையில்லை.
பாணினி மேலே குறிப்பிட்டவைகளை வரையறுக்க வில்லையென்று இங்கு குறிப்பிடத்தக்கது.

**1.2.58** ஜாதி ஆக்²யாயாம் எகஸ்மின் பஹு வசனம் அன்யகரஸ்யாம
ஒரு வகுப்பைக் குறிப்பிடும் பொதுப்பெயர் ஒருமையைக் குறிக்க விருப்பாக பன்மையையும் பயன்படுத்தப்படும்.
எ–டு ஸம்பன்ன: யவ/ஸம்பன்னா யவா:
நன்றாக விளைந்த பார்லி
வா. ஸம்க்² யா ப்ரயோகே³ ப்ரதிஷேதோ⁴வக்தவ்ய:
மேற்சூத்திரத்தில் கூறப்பட்ட சொற்களுடன் எண்ணுப் பெயரைச் சேர்த்து வரும்போது இவ்விதியை பயன்படுத்த முடியாது.
ஏகோ வ்ரீஹி ஸம்பன்ன: ஸுபி4க்ஷம் கரோதி.

**1.2.61** ச²ந்த³ஸி புனர் வஸோர் ஏகவசனம்
வேத மொழியில் இரட்டை நக்ஷத்திரமான புனர் வஸூ விருப்பாக ஒருமையில் பயன்படுத்தலாம் ஆனால் அது இருமையைத்தான் குறிக்கும்.
புனர் வஸு: நக்ஷத்திரம் அதி³தி: தே³வதா/புனாவஸூ
நக்ஷத்ரம் அதி³தி: தே³வதா.

**1.2.62** விஸா¹க²யோஸ்¹ ச
இரட்டை நக்ஷத்திரமான, விஸ¹ாக²மும், வேதமொழியில் ஒருமையில், இருமையை உணர்த்த விருப்பாகப் பயன்படுத்தியுள்ளது.
விஸா¹கா² நக்ஷத்ரம் இந்த்ராக்³நீ தே³வதா.
விஸ¹ாகே² நக்ஷத்ரம் இந்த்ராக்³நீ தே³வதா.

**1.2.63** திஷ்ய புனர்வஸ்வோ: நஷத்ரத்³வந்த்³வே பஹூவசனஸ்ய

த்3வி வசனம் நித்யம்
திஷ்யநக்ஷத்திரம் (ஒற்றை நக்ஷத்திரம்), புனர்வஸூ
நக்ஷத்திரம் (இரட்டை நக்ஷத்திரம்) ஆகிய இரண்டு நக்ஷத்திரங்க ளையும் சேர்த்து ஆக்கியது துவந்துவ ஸமாஸம், பன்மைக்குப் பதிலா க, கட்டாயமான (நித்யம்) இருமையில் அமையும் உதி2தௌ திஷ்ய புனர் வஸூ த்3ருஸ்1யேதே. ஆனால் விஸா1கா2நுராதா4: (பன்மை)

**1.2.64** ஸருபாணாம் ஏக ஸேஷ ஏகவிப4க்தௌ
ஒரே வேற்றுமை உருபுகளைக் கொண்டு முடியும் ஒரே ஒரு அடிச் சொல் திரும்பத் திரும்ப வரும்போது ஒரே ஒரு அடிச் சொல் தான் பயன்படுத்த வேண்டும்.
வ1ருக்ஷ: வ1ருக்ஷ: வ1ருக்ஷ: வ1ருக்ஷா:

**1.2.65** வ்ருத்3தோ4 யூனா தல்லக்ஷண சேத் ஏ்வ விஸேஷ:
வ்ருத்3த4 (ஒரு கோத்திரத்தின் வழித் தோன்றல்) குறிக்கும் ஒரு தருவிக்கப்பட்ட சொல்லோடு யுவன் என்ற வழித்தோன்றலைக் குறிக்கும் சொல்லோடு சேர்ந்து வரும்போது, முதலில் குறிப்பிட்ட சொல் மாத்திரந்தான் நிலைபெற்றிருக்கும். இவ்விரண்டு சொற்களுக்கு மிடையேயுள்ள ஒரே ஒரு வேற்றுமை, அவைகளின் ஒட்டுக்கள்.
க3ார்க்3யஸ்1 ச க3ார்க்3யாயணஸ்1ச க3ார்க்3யௌ – க3ர்க3 + யஸ் + ஸூ + க3ர்க3 யண் + ப2க் + ஸு +க3ர்க3 + யண் + ஸு + க3ார்க்3யௌ.

**1.2.66** ஸ்த்ரீ பும்வத் ச
வ்ருத்3த4 ஒட்டில் முடியும் ஒரு பெண்பாற் சொல், யுவன் ஒட்டில் முடியும் ஒரு சொல்லோடு வரும்போது அதோடு ஒத்திருக்கிற ஆண்பாற் சொல்லாகக் கருதப்படும்.
க3ார்க்3க சக3ார்க்3யாயணஸ்1ச
க3ர்க3 + யண் + ஙிப் + ஸூ + க3ர்க3 + யண் + ப2க் + ஸு
க3ர்க்3 யண் ணீப் ஔ க3ர்க3 யண் θ ஔ
க3ார்க்3யௌ.

**1.2.67** புமான் ஸ்த்ரியா
ஒரே மாதிரியான உருவத்தைக் கொண்ட ஒரு ஆண்பாற் சொல்லும் பெண்பாற் சொல்லும் சேரும்போது ஆண்பால்தான் தொடர்ந்து நீடிக்கும்.
ப்3ராஹ்மணஸ்1ச ப்3ராஹ்மணீ ச ப்3ராஹ்மணௌ.

**1.2.68** ப்4ராத்ரு புத்ரௌ ஸ்வஸ்ரு து3ஹித்ராயாம்
ப்ராத்ரு (ஸஹோதரன்) புத்ர (மகன்) என்ற சொற்கள் முறையே ஸ்வஸ்ரு (ஸஹோதரி) து3ஹித்ரு (மகள்) என்ற சொற்களோடு சேரும் போது முதலில் குறிப்பிட்ட சொற்கள் தொடர்ந்து நீடிக்கும்.

ப்[4]ராதாச ஸ்வஸா ச ப்[4]ராதரௌ
புத்ரஸ்[1] ச து[3]ஹிதா ச புத்ரௌ

**1.2.69** நபும்ஸகம் அநபும்ஸகேனவத் ச அஸ்ய அன்யத ரஸ்யாம்
ஒரு அஃ றிணைப் பெயர்ச் சொல், அஃறிணையல்லாத அதே உருவத்தைக் கொண்ட மற்றொரு பெயர்ச் சொல்லோடு சேர்ந்து வரும்போது அஃறிணை ஒருமையாகும். ஸு[1]க்லம் ச ஸு[1]க்லாஸ்[1] ச ஸுக்லம்/ஸுக்லே

**1.2.70** பிதா மாத்ரா
பித்ரு (தகப்பன்) மாத்ரு (தாய்) என்ற சொல்லோடு சேர்ந்து வரும்போது விருப்பாக 'பித்ரு' தொடர்ந்து நிற்கும். மாதா ச பிதா ச பிதரௌ/மாதா பிரரௌ.

**1.2.71** ஸ்[1]வஸுர ஸ்[1]வஸ்[1]ரூ வா
ஸ்[1]வஸு[1]ர (மாமனார்) ஸ்[1]வஸ்[1]ரூ (மாமியார்) ஆகிய இரண்டு சொற்களும் சேர்ந்து வரும்போது ஸ்1வஸு1ர மாத்திரம் விருப்பாக நிலைபெற்றிருக்கும். ஸ்[1]வஸூ[1]ரஸ் ச ஸ்[1]வஸ்[1]ரூஸ்[1] ச ஸ்[1]வஸு[1]ரௌ/ஸ்வஸ் ரூஸ்[1]வஸு[1] ரௌ.

**1.2.72** ஆதீ[3]னி. ஸர்வைர் நித்யம்
'த்யத்' முதலிய மாற்றுப் பெயர்களின் வகுப்பைச் சார்ந்த சொற்கள், எல்லாவிதமான பெயர்ச் சொற்களுடன் சேரும்போது 'த்யத்' மாத்திரம் நீடித்து நிற்கும். ஸ ஸ தே[3]வத[3]த்தஸ் ச தௌ.
ய: ச தே[3]வத[3]த்தஸ் ச யௌ.
வா: த்யத் ஆதீ[3]னாம் மித[2] : யத்[3]யத்[3] பரம் தத்தத் ஸிஷ்யதே
த்யத் கணத்தைச் சேர்ந்த மாற்றுப் பெயர்கள் ஒன்றோடொன்று சேர்ந்து வரும்போது, கணபாடத்தில் எந்தச் சொல் கடைசியாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறதோ அச்சொல் நிலைத்து நிற்கும்.
ஸ ச ய: ச யௌ
யஸ்[1]ச கஸ் ச கௌ

**1.2.73** க்[3]ராம்ய பஸு ஸங்கே 4 ஷூ அதருணேஷு ஸ்த்ரீ
பயிற்றுவிக்கப்பட்ட விலங்குகளை ஒரு கூட்டாகக் குறிப்பிடும் போது, சிறிய என்பதைத் தவிர்த்து மற்ற இடங்களில் பெண்பால்தான் நிலைத்துநிற்கும்.
க[3]ாசவ: இமா: இவைகள் பசுக்கள் (க்[3]ராம்ய)
ஆனால், ருரவ: இமே இவைகள்மறிமான்.

**1.3.1** பூ[4]வாத[3]யோ தா[4]தவ.
பூ[4] ஆகு என்ற சொல்லை முதலாகக் கொண்ட (ஒரு) வகுப்பைச் சேர்ந்த சொற்கள் தாது (வினையடிச் சொல்) வேர் எனப்படும்.

தாது பாடம் என்ற துணை நூலில், ஸம்ஸ்க்ருதத்தின் தாதுக்களையெல்லாம் பத்து முக்கிய பிரிவாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஏறக்குறைய 2000 தாதுக்கள் இங்கே கூறப்பட்டிருக்கின்றன.

இவைகள் :

| | | | |
|---|---|---|---|
| 1. | பூ[4] | வகுப்பு | 1059 |
| 2. | அத்[3] | வகுப்பு | 72 |
| 3. | ஹு | வகுப்பு | 25 |
| 4. | திவ் | வகுப்பு | 137 |
| 5. | ஸு | வகுப்பு | 34 |
| 6. | துத்[3] | வகுப்பு | 143 |
| 7. | ருத்[4] | வகுப்பு | 25 |
| 8. | தன் | வகுப்பு | 10 |
| 9. | க்ரீ | வகுப்பு | 61 |
| 10. | சுர் | வகுப்பு | 395 |

**1.3.2** உபதே[3]ஸே[1] அச் அனுநாஸிக இத்

இலக்கண பாடத்தில் (உபதே[3]ஸே[1]) முதல் முதலில் அறிமுகப்படுத்தப்பட்ட (மூக்கொலியுடன் (அனுநாஸிக) கூடிய உயிர் 'இத்' என்ற பெயர் பெறும்.

எ–டு கித், இதில், 'இ' ஒரு 'இத்'
அச்–'ச்' ஒரு இத்

**1.3.3** ஹல் அந்த்யம்

மேலே குறிப்பிட்ட சூழலில் இறுதி மெய்கள் (ஹல் அந்த்யம்) 'இத்' எனப்படும்

எ–டு 'ஹல்' என்ற ப்ரத்யாஹாரத்தின் இறுதி 'ல்' ஒரு 'இத்'

**1.3.4** நவிப[4]க் தெள துஸ்மா:

விபக்தி (வேற்றுமை, வினை) உருபுகளின் இறுதி. 'து' (அதாவது பல்லொலி)வும் இறுதி 'ஸ்' 'ம்' ஆகிய எழுத்துக்களும் 'இத்' அல்ல இது 2–ம் சூத்திரத்தின் புறனடை.

எ–டு ஙஸுக்குப் பதிலியாக வரும் ஆத் இன் இறுதி த் ஒரு இத் அல்ல. இதே போல் ஜஸ், ஙஸ், அம், ஆம் ஆகியவைகளின் இறுதி ஸ், ம், ஆகியவை இத் அல்ல. அதனால் இவைகள் கெடா.

**1.3.5** ஆதி[3]ர் ஞி டு[1]ட[3]வ:

ஞி, டு[1], டு[3] ஆகியவைகள் ஒரு தாதுவின் முதல் எழுத்தாக அமைந்தால், அவைகள் 'இத்' ஆகும்.

எ–டு ஞிமிதா (தாதுபாடம் 1.779) அன்பாக இரு
டு[1]னதி[1] (தா.பா. 1.67) வளர், செழி)

டு$^{3}$ க்ருஞ் (தா.ப.8.16) (செய்)

இவைகளி ல், ஞி, டு$^{1}$, டு$^{2}$ ஆகியவைகள் 'இத்'

'க்த' (Part participle/present)participle ஐ குறிக்கும் என்று 'ஞி' என்ற 'இத்' உணர்த்தும் (3.2.187)

மித்$^{3}$+க்த=மின்ன: (அவன் பருமன்)

'க்ருத்' ஒட்டு 'அது$^{2}$ச்' ஐ, டு வோடு சேர்ந்து வரும்

தாதுக்கள் எடுக்கும் (3.3.89) அது ஒரு செயலைக் குறிக்கும்

டுவேப்–வேபது$^{2}$ (ஆட்டம்)

டு$^{3}$–க்ரு+(க்)த்ரி+மப் (3.3.88 4.4.20)

க்ருத்ரிம–செயற்கையான (பெயரடை)

**1.3.6** ஷ: ப்ரத்யயஸ்ய

ஒரு ஒட்டின் முதல் எழுத்து ஷ ஆனால் அந்த ஷ் ஒரு இத் ஷ வை முதலாகக் கொண்ட ஒட்டுக்கள் ஷ, ஷச், ஷாகன், ஷ்கன், ஷ்டரச், ஷட$^{2}$ச், ஷ்ட$^{2}$ன், ஷ்ட$^{2}$ல், ஷ்ப$^{2}$, ஷ்ப$^{2}$க், ஷ்யங், ஷ்யஞ், ஷ்லஞ், ஷ்வுன்.

ந்ருத்+ஷ்வுன்=(3.1.145)=நர்த்+அக் (7.1.1)

நர்தக்க: (ஒரு தொழில்)

**1.3.7** சுடு$^{1}$

ஒரு ஒட்டின், முதல் எழுத்து, பல்லொலி (சு)(அ) வளை நாவொலி (டு) ஆனால், இந்த 'சு'வும் 'டு'வும் இத்

அ) பல்லொலி முதலில் வரும் ஒட்டுக்கள்

ச்: சங், சானஸ், சாப், சிண், ச்ப$^{2}$ஞ், ச்லி, ச்வி – ஜ்: ஜஸ், ஜஸி.

ஆ) வளை நாவொலி முதலாக வரும் ஒட்டுக்கள்

ட்:, ட, டக். டச், டா, டாப், டெண்யண், ட்யண், ட்யு, ட்யுல்.

ட்$^{3}$ ட$^{3}$, ட$^{3}$ச், ட$^{3}$ட்$^{1}$, ட$^{3}$ண், ட$^{3}$தமச், ட$^{3}$தரச், ட$^{3}$தி, ட$^{3}$ா, ட$^{3}$ாச், ட$^{3}$ாப், டு$^{3}$, டு$^{3}$பச், ட்$^{3}$மதுப், ட்$^{3}$ய, ட்$^{3}$யண், ட்$^{3}$யட்$^{1}$, ட்$^{3}$யா ட்$^{3}$வலச், ட்$^{3}$வுன்.

ஜஸ், முதல் வேற்றுமைப் பன்மை உருபு:

ராம + ஜஸ் – ராமா: இங்கு ஜ, ஒரு' இத்' அதனால் அது கெடும்(9)

**1.3.8** ல, ஸ$^{1}$, கு$^{1}$ அதத்$^{3}$தி$^{4}$தே

தத்தி$^{3}$த$^{4}$ ஒட்டுக்களைத்தவிர மற்ற ஒட்டுக்களின் முதல், ல,ஸ,கு$^{1}$ (பின்னண்ண எழுத்துக்கள்) 'இத்' ஆகும்.

1. ல்: ல்யப், ல்யு, ல்யுட்

2. ஸ்: ஸ்$^{1}$, ஸ$^{1}$த்ரு, ஸ$^{1}$த்$^{4}$யை, ஸ$^{1}$த்$^{4}$யைன், ஸ$^{1}$ப், ஸ$^{1}$ானச், ஸா$^{1}$னன், ஸ$^{1}$ாயச், ஸ்$^{1}$னம், ஸ$^{1}$னா, ஸ்$^{1}$னு, ஸ்$^{1}$யன், ஸ்$^{1}$லு

3. க்: க, கந்த, கத்[4]யை, கத்[4]யைந், கப், கமுல் கஸின், கஸேந், கானச், சி, கின், குரச், கேந், கேந்ய, க்த, க்தவது, க்திச், க்திந், க்த்ரி, க்த்வா, க்ரு, க்யங், க்யச், க்யஷ், க்லுகந், க்வநிப், க்வரச், க்வஸு, க்வி, க்வின், க்விப், க்ஸ, க்ஸே, க்ஸ்நு

க்[2]: க[2]ச்,க[2]ல், க்[2] முஞ், க[2]ல், க[2]ஸ்[1], கி[2]ஷ்ணுச், கு[2]கஞ், க்[2]யுந்,

க[4]: க[4], க[4]ஞ், கி[4]நுண், கு[4]ரச்,

ங: ஙீ, ஙீந், ஙீப், ஙீஷ், ஙஸ், ஙஸி, ஙி, ஙே, ங்வநிப்

எ–டு சி+ல்யுட்(3.3.115)=சயனம் (7: 1.1) சேர்த்தல்

**1.3.9** தஸ்ய லோப:

அது மறையும்/கெடும் (லோப்)

அதாவது, மேலே கூறப்பட்ட 'இத்' எழுத்துக்கள் கெடும்.

எ–டு ராம+ஜஸ்=ராமா:

இங்கு 'ஸ்' ஒரு 'இத்' அது கெடுகிறது.

**1.3.10** யதா[2]ஸங்க்[2]யம் அனுதே[3]ஸ[1]: ஸமானாம்

ஒரு சூத்திரத்தில் பல சொற்களும், அவைகளின் பதிலீடுகளும் சமமான எண்ணிக்கையில் அமைந்திருந்தால் முதலில் குறிப்பிட்ட சொற்கள் ஒணன்றொன்றுக்கும் பின்னால் கொடுக்கப்பட் ட பதிலீடுகள் ஆகும் என்று பொருள்.

எ–டு தூதி[3] ஸ[1]லாதுர வர்மதீ கூசவாராத்

ட[4]க்–ச[2]ண்–ட[4]ஞ்–யக: (4.3.94)

தூதி[3]+ட[4]க்=தௌதே[3]ய:

ஸ[1]லாதுர+ச[2]ண்=ஸா[1]லாதுரீய:

வர்மதீ+ட[4]ஞ்=வார்மதேய:

கூசவார+யக்=கௌசவார்ய:

ஆனால், முதல் பகுதியில் கொடுக்கப்பட்ட சொற்களும் 2வது பகுதி யில் உள்ள சொற்களும் எண்ணிக்கை ஒன்றாக, இல்லாமலிருந்தால் , இந்த விதி செயற்படாது.

காட்டாக, 1.4.90லக்ஷண இத்த[2]ம்பூ[4]த ஆக்[2]யான

பா[4]க வீப்ஸாஸு ப்ரதி பரி அனவ:

இங்கு லக்ஷண–முதலியவைகள்4. 'ப்ரதி' முதலியவைகள்–3, அதனால், இதன் விளக்கம் வேறாகும் (பார்க்க 1.4.90)

**1.3.11** ஸ்வரிதேன அதி[4]கார:

இந்நூலின் சூத்திரங்களில் ஸ்வரிதத்தில் அமையும் சொற்கள், அதிகார சூத்திரங்களைத் தொடங்குவதாகக் கருத வேண்டும். அதாவது, அச்சொற்கள் அப்பகுதியின் தலைப்பாக அமையும். காட்டாக ப்ரத்யய: (3.1.1.) இதைத் தொடர்ந்து வரும் சூத்திரங்கள் ப்ரத்யயங்களைப் பற்றிக் கூறும்.

அவ்வாறே தா4தோ: (3.1.91), அங்கஸ்ய (6.4.1) ஆகியவை.

**1.3.12** அனுதாத்த ஙித ஆத்மனேபதம்

ஆத்மனேபத ஒட்டுக்கள் அனுதாத்தத்தை 'இதி'ஆக கொண்ட தாதுக்களுக்குப் பின்னாலும் 'ங்' ஐ 'இத்'தாகக் கொண்ட தாதுக்களுக்குப் பிறகும் வரும்.

அனுதாத்த இத்–ஆஸ்–ஆஸ்தே

ஙித்–ஷுங்–ஸூதே

ஸீ'ங்–ஸே'தே

**1.3.13** பா[4]வ கர்மணோ:

பா[4]வ (Impersonal) கர்மன் (Passive) ஆகிய செயல்களைக் குறிப்பிட, வினையடிச் சொல்லுக்குப் பிறகு ஆத்மனேபத ஒட்டுக்கள் வரும்.

ஆஸ்யதே.

க்ரியதே கட: பானை செய்யப்பட்டது.

**1.3.14** கர்த்தரி கர்மவ்யதீஹாரே

ஒரு கர்த்தா மற்றொரு கர்த்தாவோடு கூட்டாகச் சேர்ந்து, ஒரு செயலைச் செய்தால் அதாவது இரு கர்த்தாக்களுக்கிடையே ஒரு செயலின் பரி மாற்றத்தைக் குறிக்கும்போது கர்த்தாவை குறிக்க, வினையடிச் சொல்லோடு ஆத்மனேபத ஒட்டுக்கள் வர வேண்டும்.

எ–டு வ்யதி பசந்தே. அவர்கள் ஒருவருக்காக ஒருவர் சமைக்கிறார்கள்.

**1.3.15** ந க[3]தி ஹிம் ஸார்த[2]யோ

கதி (இயக்கம்) ஹிம்ஸா (துன்புறுத்தல்)

ஆகிய பொருளை உணர்த்தும் வினைகளோடு (செயலின் பரிமாற்றத்தைக் குறிக்க) ஆத்மனே பத ஒட்டுக்கள் சேர்க்கப்படமாட்டாது.

எ–டு வ்யதி க[3]ச் ச[3]தி–அவர்கள் ஒருவர்க்கொருவர் பகையாகிறார்கள்.

வா. ப்ரதிஷேகே[4] ஹஸாதீனாம் உபஸம்க்[2]யானம்

ஹஸ் (சிரி)முதலியவைகளையும் மேலே சூத்திரத்தில் கூறியவற்றோடு சேர்க்க வேண்டும். வ்யதிஹஸந்தி

வா: ஹரதே: அப்ரதிஷேத[4]:

'ஹரதி' என்ற வினைக்கு இத்தடையில்லை

ஸ்ம்ப்ரஹரந்தே ராஜான: அரசர்கள் ஒருவரையொருவர் எதிர்த்துப் போரிடுகிறார்கள்.

**1.3.16** இதரேதர அன்யோன்ய

இதரேதர அன்யோன்ய உபபத[3]ாத்ச

இதரேதர (ஒருவர்க்கொருவர்) அன்யோன்ய என்ற உபபதங்களோடு வரும் வினைக்குப் பிறகு ஆத்மனேபத ஒட்டுக்கள் வராது. இதரேதரஸ்ய/

அன்யோன்யஸ்ய வ்யதிலுனந்தி.
ஒருவர்க்கொருவர் அறுவடை செய்கிறார்கள்.

வா: பரஸ்பர உபபதாத் ச இதி வக்தவ்யம்
பரஸ்பரம் என்ற சொல்லும் இத்துடன் சேர்க்க வேண்டும்.
பரஸ்பரஸ்ய வ்யதிலுனந்தி.

**1.3.17** நேர் விஸ'[1]:
நி என்ற முன்னொட்டோடு வரும் விஸ்'[1], நுழை என்ற வினைக்குப் பிறகு ஆத்மனேபத ஒட்டுக்கள் சேர்க்க வேண்டும். நிவிஸ'[1]தே. நுழைகிறான் ஆனால், ப்ரவிஸ'[1]தி

**1.3.18** பரி, வி, அவேப்[4]ய: க்ரிய:
க்ரீ வாங்கு என்ற தாது, பரி, வி, அவ ஆகிய முன்னொட்டுக்களோடு வரும்போது, ஆத்மனேபதமாகும். பரி/வி/அவ க்ரீணீதே. 'அவன் வாங்குகிறான்'

**1.3.19** விபராப்[4]யாம் ஜே:
ஜி 'வெல்' என்ற தாது வி, பர என்ற முன்னொட்டுகளோடு வரும்போது ஆத்மனேபத ஒட்டுக்களோடு வரும்.
விஜயதே/பராஜயதே வெல்கிறான், தோற்கடிக்கிறான்.

**1.3.20** ஆஙோ தோ[2] அனாஸ்ய விஹரணே
தா3 'கொடு' என்ற வினை ஆங் என்ற முன்னொட்டோடு, வாயைத் திறத்தல் என்ற பொருளை உணர்த்தாமல், வரும்போது, அதற்குப் பிறகு ஆத்மனேபத ஒட்டுக்கள் வரும்.

எ–டு வித்யாம் ஆத[3]த்தே (அவன்) படிப்பை அடைகிறான்
ஆனால் ஆஸ்யம் வ்யாத3த3ாதி (அவன்) அகலமாக வாயைத் திறக்கிறான்.

வா. ஆஸ்யவிஹரண ஸமானக்ரியாதபி ப்ரதிஷேதோ[4] வக்தவ்ய:
வாயைத்திறத்தல் போன்ற மற்ற செயல்களும் இத்துடன் சேர்க்க வேண்டும்.
விதி[3]காம் வ்யாத[3]தா[3]தி (அவன்) கட்டியைத் (Tumour) திறக்கிறான்.
கூலம் வ்யாத[3]த[3]ாதி–நதி கரையை உடைக்கிறது.

வா. ஸ்வாங்க கர்மகாத் ச இதி
'ஆங்'ஐ முன்னொட்டாகக் கொண்ட 'தா[3]' என்ற வினையின் செயல், கர்த்தாவின் அவயவம் என்ற பொருளைக் குறிப்பிடாமல்

அமையுமானால் ஆத்மனேபதமாகும்.
வ்யாத[3]த்[3]தே பிபீலிகா: பதங்க[3]ஸ்ய முக[2]ம்
எறும்புகள் வெட்டுக்கிளியின் வாயைத் திறக்கின்றன.

**1.3.21** க்ரீடோ[3] அனு ஸம் பரிப்[4]யஸ்[1]ச
க்ரீட்[3] (விளையாடு) என்ற வினை அனு/ஸம்/பரி/ஆங்/
ஆகியவைகளை முன்னொட்டாகக் கொண்டு வந்தால், ஆத்மனே பதமாகும்.
அனுக்ரீட[3]தே/ஸங்க்ரீட[3]தே/பரிக்ரீடதே/ஆக்ரீடதே விளையாடுகிறான்.

வா. ஸமோ அசுஜனே இதி வக்தவ்யம்.
'ஸம்' என்ற ஒட்டு க்ரீட்[3] என்ற வினைக்கு முன்னால் வரும்போது 'கடகடவென்று ஒலியெழுப்பு' என்ற பொருள்படும்.
இப்பொருளில், இந்த வினை பரஸ்மை பதமாகும். இந்த வார்த்திகம், இந்தப் பொருளை விலக்க வேண்டும் என்று கூறுகிறது.
ஸங் க்ரீட[3]ந்தி ஸ'க'ட[1]ாணி–வண்டிகள் கடகடவென்ற ஒலியை எழுப்புகின்றன.

வா. ஆக[3]மே: க்ஷமாயாம் ஆத்மனேபதம் வக்தவ்யம்
எதிர்பார்த்தல், காத்திருத்தல் (க்ஷமா) என்ற பொருளை உணர்த்தும்போது ஆக[3]ம் என்ற வினை ஆத்மனேபதமாகும்.
ஆக[3]மயஸ்வ தாவத் மாணவகம்
கொஞ்சம் நேரம் வரை மாணவனை எதிர் பார்.

வா. ஸி'க்ஷே: ஜிக்ஞாஸாயாம்
'ஸி'க்ஷ' தேர்ந்தாய்வு செய் என்ற பொருளில் ஆத்மனேபதமாகும்.
வித்யாஸு ஸி'க்ஷதே–அறிவு அடையவிரும்புகிறான்
(ஸ'க்+ஸன்–ஸி1க்ஷ)

வா. ஆஸி'ஷி நாத[2]:
நாத்[2] 'வாழ்த்துதல்' என்ற பொருளில் ஆத்மனேபதமாகும்.
ஸர்பிஷோ நாத[2]தே–நெய்யைக் கொண்டு வாழ்த்துகிறான்.
ஆனால் மாணவகம் அனுநாத[2]தி. மாணவனுக்கு விடுதலை வாங்கிக் கொடுக்கிறான்.

வா. ஹரதே: க[3]த தாச்சீ[3]ல்யே
ஹரதி ''பண்பொத்திருத்தல்'' என்ற பொருள் ஆத்மனேபதமாகும்.
பைத்ருகம் அஸ்'வா அனுஹரந்தே குதிரை தன் தகப்பனின் பண்பை ஒத்திருக்கிறது.

வா: கிரதே: ஹர்ஷ ஜீவிகா குலாய கரணேஷு இதி வக்தவ்யம்.
க்ரு, என்ற தாது உணவு(அல்லது) இருப்பிடத்துக்காக மகிழ்ச்சியோடு பிறாண்டுதல் என்ற பொருளில் ஆத்மனேபதமாகும்.
அபஸ்கிரதே வ்ருஷபோ[4] ஹ்ருஷ்ட:
காளை மகிழ்ச்சியோடு பிறாண்டுகிறது.
ஜீவிகா அபஸ்கிரதே குக்குடோ ப[4]க்ஷார்தீ[2]
கோழி உணவுக்காகப் பிறாண்டுகிறது.
குலாயகரணே–அபஸ்கிரதே ஸ்[1]வா ஆஸ்ரயார்தீ[2]
நாய் இருப்பிடத்துக்காகப் பிறாண்டுகிறது.

வா. ஆஙி நு ப்ரச[1]ச[2]யோர் உபஸம்க்[2]யானம்.
'ஆங்' என்ற முன்னொட்டோடு வரும் 'நு' (அழு)
ப்ருச்[1]ச[2](கேள்) ஆகிய வினைகளும் ஆத்மனேபதம்
அனுதே ஸ்[1]ருகா[3]ல: நரி ஊளையிடுகிறது.
ஆப்ருச்[1]ச[2]தே கு[3]ரும்–ஆசிரியரைக் கேட்கிறான்.

வா. ஸ[1]ப உபலம்ப[4]ன இதி வக்தவ்யம்
'ஸ' ப் 'வார்த்தையினால் உடம்பைத் தொடுதல்' என்ற பொருளில் ஆத்மனேபதமாகும்.
தேவதத்தாய ஸ[1]பதே தேவதத்தன் பேரில்/மேல் ஆணையிடு–கிறான்.
மற்ற இடங்களில் ஸ[1]பதி

**1.3.22** ஸம் அவ ப்ர விப்[4]ய: ஸ்த[2]:
ஸ்தா[2] 'நில்' என்ற வினை ஸம், அவ, ப்ர, வி
ஆகிய முன்னொட்டுகளோடு வரும்போது ஆத்மனேபதம் ஆகும்.
ஸந்திஷ்ட[1]தே அவன் உடன் தங்குகிறான்.
அவதிஷ்ட[1]தே பொறுமையோடு காத்திருக்கிறான்.
ப்ரதிஷ்ட[1]தே (அவன்) புறப்படுகிறான்.
விதிஷ்ட[1]தே தனியாக நிற்கிறான்.

வா. ஆங் ஸ்த[2] : ப்ரதிக்ஞானே இதிவக்தவ்யம்
ஸ்தா[2] என்ற வினை 'ஆங்' என்ற முன்னொட்டோடு. ப்ரதிக்ஞான அறிக்கை. என்ற பொருளில், ஆத்மனேபதமாகும்.
அஸ்தி ஸகார மாத்ராமாதிஷ்ட[2]தே. 'அஸ்' தாதுவின் 'ஸ்' மாத்திரம் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.
ஆக[3]மௌ குண வ்ருத்தௌ ஆதிஷ்ட[2]தே.
குணம், வ்ருத்தி ஆகிய ஆகமங்களில் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

**1.3.23** ப்ராகாஸ'ன ஸ்தே²யாக்²ய யோஸ்'ச
ஸ்தா², 'ஒருவரின் எண்ணங்களை வெளிப்படையாகத் தெரிவித்தல்' அல்லது நடுவரின் தீர்ப்புக்கு விடுதல் என்ற பொருளில் ஆத்மனேபதமாகும்
திஷ்ட²தே கன்யா சா²த்ரேப்⁴ய: பெண் தன் எண்ணத்தை மாணவர்களுக்கு வெளியிடுகிறாள்.
த்வயிதிஷ்ட⁴தே அவன் உன்னை நடுவராகத் தேர்ந்தெடுத்திருக்கிறான்.

**1.3.24** உதோ³ அநூர்த்⁴ச கர்மணி 'ஸ்தா²' என்ற தாது 'உத்' என்ற முன்னொட்டோடு வந்து, அவன் 'எழுந்திருத்தல்' என்ற பொருளைக் குறிக்காமல் இருந்தால், அத்துடன் ஆத்மனேபத ஒட்டுக்களை இணைக்க வேண்டும்.

ஏ–டு கே³ஹே உத்திஷ்ட⁴தே. வீட்டில் உழைக்கிறான். ஆனால் ஆஸனாத் உத்திஷ்டதி–அவன் இருக்கையிலிருந்து எழுந்திருக்கிறான்.

வா. உத்³ ஈஹாயாம் இதி வக்தவ்யம்
'உத்' முயற்சித்தல், விரும்புதல், வியர்க வைத்தல், மேம்படுதல் ஆகிய பொருட்களை ஸ்தா²வுடன் வரும்போது குறிக்காமலிருந்தால் பரஸ்மை பதமாகும். ஆனால் மேலே குறிப்பிட்ட பொருளை உணர்த்தும்போது, அது ஆத்மனேபதமாகும். அஸ்மாத்³ க்³ராமாத் ஸ'தமுத்திஷ்டதி இந்தக் கிராமத்திலிருந்து 100 கிடைக்கிறது.

**1.3.25** உபான் மந்த்ர கரணே
'உப', ஸ்தா² என்ற வினைக்கு முன் அமைந்து அதன் பொருள் வேத மந்திரங்களினால் பூஜை செய்தல் என்று இருந்தால், அது ஆத்மனேபதமாகும்.
ஐந்த்ர்யா கார்ஹ பத்யமுபதிஷ்ட²தே
அவன் ஐந்த்ர மந்திரங்களினால் கா3ர்ஹ பத்யமென்கிற நெருப்பைப் பூஜிக்கிறான்.

வா. உபாத் ³ தேவ பூஜா ஸங்க³திகரண மித்ர கரண பதி²ஷு இதி வாச்யம்.

'ஸ்தா²', 'உப' என்ற முன்னொட்டோடு விக்³ரஹ பூஜை சந்தித்தல், நட்பு கொள்ளல், சாலை ஆகிய பொருட்களை குறிக்கும்போது ஆத்மனேபதமாகும்.
ஆதி³த்யம் உபதிஷ்ட²தே சூரியனைப் பூஜிக்கிறான்.
ரதி²கான் உபதிஷ்ட²தே தேரோட்டுபவர்களைச் சந்திக்கிறான்.
மஹாமாத்ரான், உபதிஷ்ட²தே மஹாமாத்திரர்களுடன் நட்பு கொள்கிறான்.
அயம் பந்தா² ஸ்ருக்⁴னம் உபதிஷ்ட²தே இது ஸ்ருக்⁴னத்துக்குப் போகும் வழி.
ஸங்கதிகரணம் ஸங்கதி கரணம் இந்த இரண்டுக்குமுள்ள வேறுபாடு என்னவெனில், முதல் சொல் உடல் தொடர்பு, அல்லது வெகு பக்கத்தில் வருதல் (கலக்கல்) என்ற பொருளும், இரண்டாவது அப்பொருளைக்

குறிக்காமலும் அமையும். கங்கா யமுனாம் உபதிஷ்டதே கங்கை, யமுனையோடு கலக்கிறது.
வா. வாலிப்ஸாயாமிதி வக்தவ்யம்
உப+ஸ்தா. 'ஒரு பொருளை அடைய வேண்டுமென்ற விருப்பம்' என்ற பொருளில் ஆத்மநேபதம் விருப்பமாக வரும்.
பி[4]க்ஷு கோ ப்[3]ராஹ்மணம் உபதிஷ்ட[2]தே/உபதிஷ்டதி வா.
பிச்சைக்காரன் தனக்கு (ஏதாவது) கிடைக்கும் என்ற விருப்பத்தோடு பிராமணன் வீட்டில் காத்துக் கொண்டிருக்கிறான்.

**1.3.26** அகர்மகாத் ச
உப+ஸ்தா[2], செயப்படுபொருள் குன்றிய விளையாகப் பயன்படுத்து ம்போது ஆத்மனேபத மாகும்.
யாவத் பு[4]க்தம் உபதிஷ்ட[2]தே. அவன் சாப்பிடும் வேளையில் எப் போதும் வருகிறான்.

**1.3.27** உத்[3]விப்[4]யாம் தப:
'தப' (ஒளிவிடு) என்ற தாது 'உத்' அல்லது 'வி'யுடன் செயப்படு பொருள்குன்றிய வினையாகப் பயன்படுத்தும்போது ஆத்மனேபதமாகும்.
உத்தபதே/விதபதே வித்[3]யாய வித்யார்தீ[2]
படிப்பாளி தன் கல்வியினால் ஒளிவிடுகிறான்.
ஆனால் உத்தபதி ஸுவர்ணம் ஸவர்ணகார: தட்டான் தங்கத்தை சூடாக்குகிறான் (உருக்குகிறான்)
வா. ஸ்வாங்க கர்மாச்ச இதி வக்தவ்ய:
தன் உடலின் ஒரு அவயவத்தைக் குறிப்பிடும்போது
உத்/வி+தப், செயப்படுபொருள் குன்றாவினையாக இருந்தாலும் ஆத்மனேபதமாகும் என்று கூறவேண்டும்.
உத்தபதி பாணிம் கையைச் சூடாக்குகிறான்.

**1.3.28** ஆஙோ யம ஹன:
யம்(நிறுத்து) ஹன்(கொல்) என்ற வினைகளுக்கு முன்னால் 'ஆங்' சேர்ந்து, இவைகள் செயப்படுபொருள் குன்றிய வினையாகப் பயன்படுத்தும்போது பொருள் ஆத்மனேபதமாகும்.
எ–டு ஆயச்ச[2]தே விரிக்கிறான்.
ஆஹதே தீங்கு செய்கிறான்.
இவ்விரண்டு வினைகளும் பரஸ்மைபத வகுப்பைச் சேர்ந்தன.
யம்+ஸப்+திப்=யச்[1]ச[2]தி, ஹந்தி ஆனால் இவைகள் செயப்படுபொருள் குன்றா வினையாக வரும்போது ஆயச்[1]சதி கூபாத்[3] ரஜ்ஜும்–கிணற்றிலிருந்து கயிற்றை இழுக்கிறான்.
ஆஹந்தி வ்ருஷலம் பாதே[3]ன– திருடனைக் காலால் உதைக்கிறான்.
வா. ஸ்வாங்க[3] கர்மகாத் ச இதி வக்தவ்யம்

தனது உடலில் ஒரு அவயம் செயப்படுபொருளாக அமையும்போது, இவைகள் ஆத்மனேபதமாகும்.
ஆயச்சதே பாணிம். தன் கையை நீட்டுகிறான்.
ஆஹதே ஸிர–தன் தலைக் காயப்படுத்திக் கொள்கிறான்.

**1.3.29** ஸமோ க³மிருச்¹சி² ப்ரச்¹சி² ஸ்வரதி–அர்தி, ஸ்1ரு விதி³ப்ய:

க³ம்(போ) ருச்²(போ, கெட்டியாகு) ப்ரச்³ (கேள்) ஸ்வ்ரு (ஓசைபடுத்து) ரு(போ) ஸ்¹ரு (கேள்) (Listen)வித் (அறிந்து கொள்) ஆகிய வினைகள் 'ஸம்' என்ற முன்னொட்டோடு செய்ப்படுபொருள் குன்றிய வினையாகப் பயன்படுத்தும்போது ஆத்மனேபதமாகும்.

| | | |
|---|---|---|
| ஸம்க³ச்ச²தே | – | அவன் சேர்கிறான். ஒன்றாகப் போகிறான். |
| ஸம்ருச்¹ச²தே | – | அவன் போகிறான் |
| ஸம்ஸ்வரதே | – | ஓசைப்படுத்துகிறான். |
| ஸம்ப்ரச்¹ச²தே | – | நன்றாகக் கேட்கிறான் (கேள்) |
| ஸங்கல்பா அஸ்ய ஸமரந்த | – | அவனுடைய தீர்மானங்கள் ஒன்றாகின்றன. |
| ஸம்ஸ்ருணுதே | – | நன்றாகக் கேட்கிறான் (Listen) |
| ஸம்விததே | – | நன்றாகப்புரிந்து கொள்கிறான். |

வா: த்³ரு ஸே¹ச்ச இதி வக்தவ்யம்

த்ருஸ் (பார்) என்ற தாது ஸம் என்ற முன்னொட்டோடு, செயப்படு பொருள் குன்றிய வினையாகப் பயன்படுத்தும்போது ஆத்மனேபதம ாகும். ஸம்பஸ்1யதே அவன் பார்க்கிறான். ஆனால் க்ராமம் ஸம்பஸ்1யதி அவன், கிராமத்தைப் பார்க்கிறான்.

**1.3.30** நி ஸம் உப விப்⁴யோ ஹ்வ:

ஹ்வே (கூப்பிடு) என்ற வினை, நி,ஸம், உப, வி ஆகிய இடைச் சொற்களுடன் (Partiele) வரும்போது (செயலின் பயன் கர்த்தாவையடையாமலிருந்தாலும்) ஆத்மனேபதமாகும்.

'ங்' ஐ இத்தாகக் கொண்ட வினைச் சொல் கர்த்தாவுக்காகச் செய்யப்படும் செயல் என்ற பொருளைக் குறிக்கும்போது அவ்வினைக்குப் பின்னால் ஆத்மனேபத ஒட்டுக்கள் வரும் (பார்க்க–72) ஆனால், ஒரு செயல் செய்வதின் நோக்கம். கர்த்தாவுக்காக என்று இல்லாமலிருந்தாலும் மேலே கூறப்பட்ட வினைகள் ஆத்மனே பதமாகவே இருக்கும் என்று இச்சூத்திரம் குறிப்பிடுகிறது.

நிஹ்வயதே
ஸம்ஹ்வயதே
உபஹ்வயதே
விஹ்வயதே

வா: உபஸர்காத் அஸ்யதி ஊஹ்யோர்வா வசனம்

'அஸ்' 'எறி' ஊஹ் 'அனுமானி' என்ற வினைகள்

உபஸர்க[3]ங்களுடன் வரும்போது, விருப்பாக ஆத்மனேபதமாகும்.

| | | |
|---|---|---|
| நிரஸ்யதி/நிரஸ்யதே | – | அவன் எறிகிறான் |
| ஸமூஹதி/ஸமூஹதே | – | அவன் சேர்கிறான். |

**1.3.31** ஸ்பர்த்[3]தா[4]யாம் ஆங்

ஆங்+ஹ்வே போரிட அழைத்தல் என்ற பொருளில் வரும்போது (செயலின் பயன் கர்த்தாவையடையாமலிருந்தாலும்) ஆத்மனே பதமாகும்.

மல்ல: மல்லம் ஆஹ்வயதே

மல்லர் மல்லரைப் போருக்கு அழைக்கிறான்.

அனால் க[3]ாம் ஆஹ்வயதி கே[3]ா பால:

இடையன் பசுவைக் கூப்பிடுகிறான்.

**1.3.32** க[3]ந்தன அவக்ஷேபண ஸேபன ஸாஹஸிக்ய

ப்ரதியத்ன ப்ரகத[2]ன உபயோகே[3]ஷு க்ருஞ:

'க்ருஞ்' என்ற வினை, (ஒரு செயலின் பயன் கர்த்தாவையடையாது என்ற போதிலும்) கீழ்க்கண்ட பொருட்களைக் குறிக்கும்போது ஆத்மனேபதமாகும்.

1. க[3]ந்த[4]னம் பழிவாங்கும் எண்ணத்துடன் மற்றவர்க்கு விரோதமாகப் பலரறியக் கூறல்

| | | |
|---|---|---|
| 2. அவக்ஷேபணம் | – | திட்டுதல் |
| 3. ஸேவனம் | – | பணி செய்தல் |
| 4. ஸாஹஸிகம் | – | மனத்துணிவுடன் வேலை செய்தல் |
| 5. ப்ரதியத்னம் | – | மாற்றம் |
| 6. ப்ரகத[2]னம் | – | ஒப்புவித்தல் |
| 7. உபயோகம் | – | மதசம்பந்தமான பூஜை செய்வது 'மற்றவர்க்கு' |

| | | |
|---|---|---|
| 1. உத்குருதே | – | விரோதமாகக் கூறுகிறான் |
| 2. ஸ்யேனவர்திகம் உத[3]ா குருதே | – | 'கழுகு கவுதாரியை வெல்கிறது. |
| 3. உபாத்[4]யாயம் உபகுருதே | – | 'ஆசிரியருக்குப் பணி செய்கிறான்.' |
| 4. பரதா[3]ரான் ப்ரகுருதே | – | மற்றவனின் மனைவியைக் கற்பழிக்கிறான். |
| 5. ஏத[4]: உத3கஸ்ய உபகுருதே | – | எரிபொருள்தண்ணீரின் தன்மையை மாற்றுகிறது. |
| 6. க[3]ாதா[2] ப்ரகுருதே | – | கதைகளைப் பாடுகிறான் |
| 7. ஸ[1]தம் ப்ரகுருதே | – | "மயச் சார்ப்புள்ள பயன்களை |

(அடைவதற்காக) (அவன்) நூறு
(நாணயங்கள்) கொடையாகக்
கொடுக்கிறான்.''

**1.3.33** அதே[4]: ப்ரஸஹனே
'அதி[4]' என்ற முன்னொட்டுடன் 'க்ருஞ்' என்ற வினை 'வெல்லுதல்' என்ற பொருளில் ஆத்மனேபதமாகும் (செயலின் பயன் கர்த்தாவை சேராமலிருந்த போதிலும்)
தம் அதி[4] சக்ரே அவனை வெல்கிறான்
ஆனால், அர்த[2]ம் அதி[4] கரோதி – பொருளை சம்பாதிக்கிறான்.

**1.3.34** வே: ஸப்[3]த[3] கர்மண:
'வி' க்ருஞ் 'ஸப்தம்' என்ற சொல்லை செயப்படுபொருளாகக் கொள்தல் என்ற பொருளில் (அதாவது ஸப்தம் ஓடு) ஆத்மனே பதமாகும் (கர்த்தாவுக்குச் செயல் செய்யப்படுகிறது என்றில்லாவிட்டாலும்)
க்ரோஷ்டா விகுருதே ஸ்வரான்
நரிகள் ஊளையிடுகின்றன.
ஆனால் விகரோதி பய: 'பால் (தயிராக) மாறுகிறது.'

**1.3.35** அகர்மகாத் ச
வி க்ருஞ் செயப்படுபொருள் குன்றிய வினையாக அமைந்தபோதிலும், ஆத்மனேபதமாகும் (செயல் கர்த்தாவுக்காக என்றில்லாவிட்டாலும்) ஸைந்த[4]வா: விகுர்வதே 'ஸிந்து தேசத்துக்குதிரைகள் நேர்த்தியாக ஓடுகின்றன.'

**1.3.36** ஸம்மானன உத்ஸஞ்ஜன ஆசார்ய கரண க்ஞான ப்[4]ருதி விக்[4]ணன வ்யயேஷு நிய: நி என்ற வினை கீழ்க்கண்ட பொருளை உணர்த்தும்போது
(கர்த்தாவுக்காகச் செய்யும் செயல் என்றில்லாவிட்டாலும்)
ஆத்மனேபதமாகும்.
நயதி/–தே
1) நயதே சார்வீம் லோகாயதே–"சார்வீ லோகாயதத்தைக் கற்பிக்கிறான்."
2) த[3]ண்ட[3]ம் உந்நயதே–"தடியைத் தூக்குகிறான்"
3) மாணவகம் உபநயதே–"மாணவனுக்குப் பாடம் தொடங்கி வைக்கிறான்"
4) தத்வம் நயதே–"உண்மையைப் புரிந்து கொள்கிறான்"
5) கர்மகாரம் நயதே–"வேலைக்காரனை வேலைக்கு அமர்த்துகிறான்"
6) கரம்விநயதே–"வரி கொடுக்கிறான்"
7) ஸ'தம்விநயதே–100 (நாணயம்) தானமாகக் கொடுக்கிறான்.

**1.3.37** கர்த்ருஸ்தே[2] ச அஸ'ரீரே கர்மணி
கர்த்தாவின் உடல் அல்லாமல், கர்த்தாவினிடம் உள்ள (ஒன்று) செயப்படுபொருளாக அமையும்போது 'நீ' என்ற வினை ஆத்மனேபதமாகும்.

க்ரோ[4]ம் வினயதே–"கோபத்தை அடக்குகிறான்."
ஆனால் யக்ஞத[3]த்தஸ்ய க்ரோத[4]ம் தேவதத்த:
வினயதி
"தேவதத்தன் யக்ஞதத்தனுடைய கோபத்தைத் தணிக்கிறான்"

**1.3.38** வ்ருத்தி ஸர்க[3] தாயனேஷு க்ரம:
'க்ரம்' என்ற வினை தொடர்ச்சி, ஆர்வம், வளர்ச்சி' என்ற பொருட்களைக் குறிக்கும்போது ஆத்மனேபதமாக வரும்.
துகூஅஸ்ய க்ரமதே புத்[3]தி[4] அவனுடைய மூளை ருக்வேதத்தில் தொடர்ந்து ஈடுபடுகிறது.
வ்யாகரண அத்[4]யயனஸ்ய க்ரமதே–இலக்கணம் படிப்பதில் ஆர்வம் காட்டுகிறான்.
அஸ்மின் ஸ'ாஸ்த்ராணி உப/க்ரமந்தே

**1.3.39** உபபராப்[4]யாம்
க்ரம் என்ற வினை, உப(அ) பர என்ற முன்னொட்டுகளோடு மேலே கூறப்பட்ட (அதாவது சூ.38) பொருட்களைக் குறிக்கும் போது ஆத்மனேபதமாகும்.
ருக்ஷு உப/பராக்ரமதே
வ்யாகரண அத்யயனஸ்ய உப/பராக்ரமதே
அஸ்மின் ஸ'ாஸத்ராணி உப/பராக்ரமந்தே

**1.3.40** ஆங் உத்[3] க[3]மனே
ஆங்+க்ரம், ஒரு ஒளிபரப்பும் பொருளின் உதயத்தைக் குறிப்பதாக அமைந்தால் ஆத்மனேபதமாகும்.
ஆக்ரமதே ஆதி[3]த்ய: "சூரியன் உதிக்கிறான்"
ஆக்ரமதே சந்த்ரமா:
வா. ஜ்மோதி: உத்[3]கமனே இதி வக்தவ்யம்
வானத்தில் உதயமாகும் பொருளைக் குறிக்கும்போதுதான் ஆத்ம னேபதம் ஆகும்.
ஆக்ராமதி து[4]ம: ஹர்ம்யதலாத் மேல்தளத்திலிருந்து புகை கிளம்புகிறது.

**1.3.41** வே: பாத[3]விஹரணே
வி + க்ரம் 'அடி எடுத்துவை' என்ற பொருளில் ஆத்மனேபதமாகப் பயன்படுத்தப்படும்.
அஸ்'வ: ஸாது[4] விக்ரமதே குதிரை நல்ல வேகமாகச் செல்கிறது.

**1.3.42** ப்ர உபாப்[4]யாம் ஸம் அர்த[2]ாப்யாம்
ப்ர, உப என்ற இடைச் சொற்களுடன் 'க்ரம்' என்ற வினை வரும்போது இவ்விரண்டுமே ஒரே பொருளைக் கொண்டதாக அமைந்தால் (அதாவது ஒரு செயலின் தொடக்கம்) அவை ஆத்மனேபதமாகும்.

பா⁴க்தும் உப/ப்ரக்ரமதே சாப்பிடத் தொடங்குகிறான்.
ஆனால் பூர்வேத்³யு: உபக்ராமதி ப்ரக்ராமதி அபரேக்த்³யு:
முற்பகலில் போகிறான் பிற்பகலில் திரும்பி வருகிறான்.

**1.3.43** அனுபஸர்க³ாத்³வா
உபசர்கமில்லாமல் க்ரம் வரும்போது விருப்பாக ஆத்மனேபதமாகும்.
க்ரமதே/க்ரமதி அவன் போகிறான்.
இந்தச் சூத்திரத்தில் குறிப்பிடப்படும் விருப்பு (optionly) அப்ராப்தவிபா⁴ஷா, எனப்படும். இது, பொதுப்படையாக ஏற்கனவே அறிந்த ஒரு விதிக்கு மாற்றுவிதி அல்ல.

**1.3.44** அபஹ்னவே க்³ஞ:
''க்³ஞா'' என்ற வினை மறுத்தல் என்ற பொருளைக் குறிக்கும் போது ஆத்மனேபதமாகும்.
ஜானாதி ''அவனுக்குத் தெரியும்''
ஆனால் அபஜானீதே ''அவன் மறுக்கிறான்''
ஹைஸ்ரம் அபஜானீதே (அவன்) ஆயிரம் (கடன் வாங்கியதை) மறுக்கிறான்.
ஆனால், நத்வம் கிம்பி ஜானாஸி ''உனக்கு ஒன்றும் தெரியாது''

**1.3.45** அகர்மகாத் ச
செயப்படுபொருள் குன்றிய வினையாக 'க்³ஞா' வரும்போது ஆத்மனேபதமாகும் (செயலின் பயன் கர்த்தாவைச் சேராமலிருந்த போதிலும்)
ஸர்பிஷே ஜானீதே – ''நெய்யைக் கொண்டு ஒரு வேள்வி நடத்துக்கிறான்.''

**1.3.46** ஸம் ப்ரதி ப்⁴யாம் அனாத்⁴யானே.
'ஸம் ப்ரதி' ஆகிய முன்னொட்டுகளோடு, உணர்ச்சியோடு நினைத்தல் என்ற பொருளில் அல்லாமல், 'க்³ஞா' என்ற வினையைப் பயன்படுத்தும்போது அது ஆத்மனேபதமாகும். ஸ'தம் ஸம்ஜானீதே/ப்ரதிஜானீதே
100 (ரூபாய்) கொடுப்பதாக உறுதியளிக்கிறான்.
ஆனால் மாது: ஸம்ஜானாதி
"அவன் தாயை உணர்ச்சியோடு நினைக்கிறான்"

**1.3.47** பா⁴ஸன உபஸம்பா⁴ஷா க்ஞான யத்ன விமதி உபமந்த்ரணேஷு வத³:
வத் (பேசு) என்ற வினைக்குப் பிறகு கீழ்க்கண்ட பொருட்களைக் குறிக்கும்போது ஆத்மனேபதமாகும்.

1. வல்லுநர் தேர்ந்தவர்
வத்³தே சார்வீ லோகாயதே. ''சார் வீ லோகாயத ஸாஸ்த்திர த்தில் தேர்ந்தவர்

2. இணங்கச் செய்தல்

கர்மகரான் உபவத[3]தே. வேலைக்காரனை இணங்கச் செய்கிறான்.

3. அறிதல்வத[3]தே

வத்தே சார்வீ லோகாயதே லோகாயதத்தைப் பற்றிப்
பேச சார்வீக்குத் தெரியும்.

4. முயற்சி செய்தல் வேலைசெய்தல்

க்ஷேத்ரே வத[3]தே – வயலில் உழைக்கிறான்

5. உடன்பாடின்மை

க்ஷேத்ரே விவத[3]ந்தே வயலைப்பற்றி அவர்கள் வாதாடுகிறார்கள்

6. மயக்கிச் சிக்கவை

பரதா[3]ரான் உபவத[3]தே. அடுத்தவரின் மனைவியை மயக்குகிறான்
ஆனால் யத்கிஞ்சித் வத[3]தி – அவன் எதையெதையோ சொல்கிறான்.

**1.3.48** வ்யக்த வாசாம் ஸமுச்சாரணே

'வத்[3] என்ற வினை, மனிதர்கள் சேர்ந்தாற்போல் ஒன்றாக (ஸமுச்சாரணே) பேசுவதை (வ்யக்த வாசாம்) உணர்த்தும்போது ஆத்மனேபதமாக வரும்.
ஸம்ப்ரவத[3]ந்தே ப்[3]ராஷ்மணா: பிராமணர்கள் சேர்ந்தாற் போல் ஒன்றாக பேசுகிறார்கள்.
மனிதர்கள்தான் பேச முடியும். ஒரே நேரத்தில் சில மனிதர்கள் சேர்ந்தாற்போல் பேசுவதைக் குறிக்க, இந்த வினை ஆத்மனேபதத்தில் பயன்படுத்த வேண்டும். ஆனால் விலங்குகளோ, பறவைகளோ சேர்ந்தாற்போல் ஒரே நேரத்தில் கத்தும்போது இந்த வினை பரஸ்மைபதமாக வரும்.
குக்குடா: ஸம்ப்ரவதந்தி
கோழிகள் கூவுகின்றன

**1.3.49** அனோ: அகர்மாத்

'அனு' என்ற முன்னொட்டுன் வத்[3] என்ற வினை செயப்படுபொருள் குன்றிய வினையாக மனிதர்கள் ஒரே நேரத்தில் சேர்ந்தாற்போல் பேசுவதை குறிப்பிடுவதாக அமையும்போது ஆத்மனேபதமாகும்.
அனுவத[3]தே கட[4] : கலாபஸ்ய கட வல்லுநர்கள், கலாப வல்லுநர்களுடன் வேதத்தின் இப்பிரிவுகளை ஒன்றாகச் சேர்ந்து ஒப்பிக்கிறார்கள்.
ஆனால் பூர்வமேவ யஜு :உதி[3]கம் அனுவத[3]தி
முன்னால் ஒதிய யஜீர் வேதத்தை (அவன்) திருப்பிச் சொல்கிறான்.
ஆனால் அனுவத[3]திவீணா. "வீணா எதிரொலிக்கிறது."

**1.3.50** விபா⁴ஷா விப்ரலாபே

'வத்³' மறுத்தல், எதிராகப் பேசுதல் என்ற பொருளைக் குறிக்கும்போது விருப்பாக ஆத்மனேபதமாகும்.

விப்ரவத³ந்தே/விப்ரவதந்தி வைத்³யா:

மருத்துவர்கள் ஒரே நேரத்தில் தங்களுக்குள் மாறுபடுகிறார்கள் ஒரே நேரத்தில் என்று இலலாமலிருந்தால்

க்ரமேண வைத்³யா: வைத்யேன ஸஹ விப்ர வதந்தி மருத்துவர்கள் முறையாக ஒருவருடன் ஒருவர் மாறுபட்டுப் பேசுகிறார்கள்.

**1.3.51** அவாத்³க்³ர:

க்³ரு (விழுங்கு) 'அவ' என்ற உபஸர்கத்துடன் வரும்போது ஆத்மனேபதமாகும்.

அவகி³ரதே விழுங்குகிறான். ஆனால் கி³ரதி

**1.3.52** ஸம :ப்ரதிக³ஞானே

'ஸம' என்ற உபஸர்கத்துடன் க்³ரு என்ற வினை வாக்களித்தல் என்ற பொருளைக் குறிக்கும்போது ஆத்மனேபதமாகும்.

ஸ¹தம்ஸங்கி³ரதே (அவன்) 100 நாணயங்கள் கொடுப்பதாக வாக் களிக்கிறான்.

ஆனால் ஸங்கி³ரதி க்³ராஸம் ஒரு வாய் விழுங்குகிறான்.

**1.3.53** உத³ஸ்சர: ஸகர்மகாத்

'சர்' என்ற வினை உத் என்ற உபஸர்கத்துடன் செயப்படுபொருள் குன்றாவினையாக வரும்போது ஆத்மனேபதம் ஆகும்.

குடும்ப³ம் உச்சரதே–குடும்பத்தைத் துறந்து விடுகிறான்.

ஆனால் ப³ஷ்பம் உச்சாதி–கண்ணீர் வெளிவருகிறது.

**1.3.54** ஸமஸ்த்ருதீயா யுக்தாத்

3ம் வேற்றுமைப் பெயர்ச் சொல்லுடன் 'ஸம்' என்ற உபஸர்கத்துடன் சேர்ந்து வரும் வினை 'சர்' ஆத்மனேபதமாகும்.

ரதே²ன ஸ்ஞ்சரதே: ரதத்தில் சவாரி செய்கிறான்.

ஆனால் உபௌ⁴ லோகௌ ஸஞ்சரதி இரண்டு உலகங்களிலும் சுற்றிக் கொண்டிருக்கிறான்."

**1.3.55** தா³ணஸ்¹ ச ஸா சேத் சதுர்த்²யர்தே²

தா²ண் 'கொடு' என்ற வினை, 'ஸம்' என்ற முன்னொட்டோடு, மூன்றாம் வேற்றுமைப் பெயர் சொல்லுடன் வரும்போது ஆத்மனேபதமாகும். மூன்றாம்

வேற்றுமைப் பெயர்ச் சொல் 4ம் வேற்றுமைப் பொருளைக் கொடுக்கும்.
'தாஸ்யா' (மாலாம்) ஸம்ப்ரயச்ச$^2$தே–(அவன்) வேலைக்காரிக்கு மாலை கொடுக்கிறான் (தன்வசம் பண்ணுவதற்காக)

இங்கு தாஸ்யா என்ற சொல், 4ம் வேற்றுமையில் அமைய வேண்டும். ஆனால் 3ம் வேற்றுமையில் அமைந்திருக்கிறது. மேலே கொடுக்கப்பட்ட பொருளில் மட்டும் இவ்வாறு அமையும்.

ஆனால் பாணினா ஸம்ப்ரயச்ச$^2$தி கையினால் கொடுக்கிறான். இங்கு பாணினா, 3ம் வேற்றுமையில் அ மைந்து கருவிப் பொருளை உணர்த்துகிறது.

வா. அஸிஷ்ட வ்யவஹாரே த்ருதீயா சதுர்தி அர்தே$^2$ ப$^4$வதீதி வக்தவ்யம்.

நெறியற்ற நடத்தையைக் குறிக்க 3ம் வேற்றுமைச் சொல், 4ம் வேற்றுமைப் பொருளைக் கொண்டதாக அமையும் என்று கூற வேண்டும்.

**1.3.56** உபாத் யம: ஸ்வகரணே

'உப' என்ற உபஸர்கத்துடன் 'யம்' என்ற வினை 'மணம் செய்து கொள்' என்ற பொருளில் (ஸ்வகரணே) ஆத்மனேபதமாக வரும். பா$^4$ர்யாம் உபயச்ச$^2$தே. அவன் மனைவியை மணந்து கொண்டான். ஆனால் தேவதத்த: யக்ஞ தத்தஸ்ய பா$^4$ர்யாம் உபயச்ச$^2$தி: 'யக்ஞ தத்தனுடைய மனைவியுடன் தேவதத்தன் கள்ளத்தனமாக தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறான்.'

**1.3.57** க்$^2$ஞா, ஸ்$^1$ரு ஸ்ம்ரு, த்$^3$ருஸ$^1$ாம் ஸன:

க்$^3$ஞா (அறி), ஸ்$^1$ரு(கேள்), ஸ்ம்ரு(நினை)

த்$^3$ருஸ் (பார்) ஆகிய வினைகள் "ஸன்" (விருப்பம் குறிக்கிற) (desiderative) ஒட்டுடன் வரும்போது ஆத்மனேபதமாகும்.

1) தர்மம் ஜிக்ஞாஸதே "தர்மத்தைப் பற்றி அறிய விரும்புகிறான்" (ஜானாதி வேறிடத்தில்)

2) கு$^3$ரும் ஸு$^1$ஸ்$^1$ருஷதே (அவன்) ஆசிரியர்க்குப் பணி செய்ய விரும்புகிறான். ஆனால் ஸ்ருணோதி கேட்கிறான். (Listen)

3) நஷ்டம் ஸுஸ்மரதே "இழப்பை நினைக்க விரும்புகிறான்" ஆனால் ஸ்மரதி–நினைக்கிறான்

4) ந்ருபம் தி$^3$த்$^3$ருஷதே (அவன்) அரசனைப் பார்க்க விரும்புகிறான் ஆனால் பஸ்$^1$யதி "பார்க்கிறான்"

**1.3.58** ந அனோர் க்$^3$ஞ

அனு என்ற உபஸர்கத்துடன் வரும் க்$^3$ஞா

"ஸன்"னந்தமாக வரும்போது (desidrative)

ஆத்மனேபதமாகாது

புத்ரம் அனஜிக்[2]ஞாஸதி "பிள்ளையைப் பற்றி கேட்க விரும்புகிறான்" ஆனால் த[4]ர்மம் ஜிக் ஞாஸதே

**1.3.59** ப்ரதி ஆங்ப்[4]யாம் ஸ்'ருவ:
ஸ்'ரு என்ற வினை ப்ரதி, ஆங் இவைகளை முன்னொட்டாகக் கொண் டு ஸன்னந்தமாக வரும்போது ஆத்மனேபதம் ஆகாது.
ப்ரதிஸுஂஸ்'ரூஷதி/ஆஸுஂஸ்ரூஷதி–வாக்குறுதியளிக்கிறான்.
ப்ரதி ஆங் கர்மப்ரவசனீயமானால் இந்தப்புறனடை இல்லை.
தேவதத்தம் ப்ரதிஸுஂஸ்'ரூஷதே பார்க்க (1.4.84.86,92)

**1.3.60** ஸ'தே[3] : ஸி1த:
'ஸ்' ஐ இத்தாகக் கொண்ட ஒட்டோடு வரும் ஸ'த் "அழி" என்ற வினை ஆத்மனேபதமாகும் ஸீ1யதே அவன் அழிகிறான்.

**1.3.61** ம்ரியதே: 'லுங்' லிஙோஸ்'[1] ச
ம்ருங் 'இறத்தல்' என்ற வினை 'ஸ்'ஐ இத்தாக் கொண்ட ஒரு ஒட்டோடு வரும்போது லுங் (acrist 3.2.110), (லிங் 3.3.159) (Benedictive)ஆகிய வைகளிலும் ஆத்மனேபதமாகும்.

1. ம்ரியதே (ம்ரு+ஸ'+தே) அவன் இறக்கிறான்.
2. அம்ருத (acrist)அவன் இறந்தான்
3. ம்ருஷீஷ்ட (லிங்) அவன் இறக்கட்டும்

**1.3.62** பூர்வவத் ஸன:
ஸன் (desidrative) ஒட்டுக்களைச் சேர்ப்பதற்கு முன் ஆத்மனேபதமாக இருக்கும் வினை 'ஸன்' சேர்த்த பிறகும் ஆத்மனேபதமாகவே இருக்கும்.
ஆஸ்தே உட்கார்கிறான்.
ஆஸிஷதே (Desidrative) உட்கார விரும்புகிறான்
பசதி–சமைக்கிறான், பிபக்ஷதி–சமைக்க விரும்புகிறான்.
இது எல்லா தாதுக்களுக்கும் பொதுவான ஒரு விதி. இந்த விதிக்குப் புறனடையாக அமைந்துள்ள வினைகளைத் தனித் தனி விதிகளில் கூறுகிறார் பாணினி.

**1.3.63** ஆம் ப்ரத்யயவத் க்ருஞோ அனுப்ரயோக[3]ஸ்ய
க்ருஞ் ஒரு துணை வினையாகப் பயன்படுத்தும்போது (அனுப்ரயோகம்) ஆம் என்ற ஒட்டைச் சேர்த்து பயன்படுத்தும்போது ஆத்மனேபதமாகச் செயற்படுவது போல், இங்கும் செயலாற்றும் (செயலின் பயன் கர்த்தாவையடையாமலிருந்தாலும்)

எ–டு ஈக்ஷாம் சக்ரே:

ஸம்ஸ்கிருதத்தில் லிட் (Perfeet) இரண்டு வகையில் உருவாக்கலாம்.

1. பொதுவான வகையில் வினையடியை (Reet) இரட்டித்து அத்தோடு இடவிகுதி (personel termination) இணைப்பது.

2. தாதுவோடு ஆம் என்ற ஒட்டை இணைத்து அதற்குப்பின்னால் க்ரு (செய்) (அ) பூ[4] (இரு) (ஆ) அஸ் (இரு) ஆகிய வினைகளின் 'லிட்' பதிலிகளைச் சேர்க்க வேண்டும். இங்கு, 'க்ரு', 'பூ', 'அஸ்' ஆகியவைகள் துணை வினை எனப்படும். இவைகளோடு பரஸ்மைபத ஒட்டுக்களால் அல்லது ஆத்மனேபத ஒட்டுக்களா இணைக்கப்படும் என்ற குழப்பம் எழலாம் இதை விளக்கத்தான் இந்தச் சூத்திரம்.

ஏத[4]தே ஏத்[4]/ஆம்+க்ரு+லிட்=ஏதா4ம்சக்ரே

ஆனால் ஓஷதே, ஓஷாம் சகார

ஆனால் மற்ற துணை வினைகள் (பூ[4]வும் அஸ் உம) இதனால் பாதிக்கப்படுவதில்லை. ஏதா[4]ம் ப[3]பூ[4]வ ஏதா[4] மாஸ

**1.3.64** ப்ர உபாப்[4]யாம் யுஜே: அயக்ஞ பாத்ரேஷு

யுஜ் (இணை) என்ற வினை ப்ர(அ) உப என்ற முன்னொட்டுக்கள் நின்று யக்ஞத்துக்குரிய பாத்திரங்கள் அல்லாமல் (அயக்ஞ பாத்ரேஷு) வரும்போது ஆத்மனேபதமாகும். (செயலின் பயன் கர்த்தாவை அடையமலிருத்போதிலும்)

ப்ரயுங்க்தே – இணைகிறான்

உபயுங்க்தே – பயன்படுத்துகிறான்

ஆனால்

யக்ஞபாத்ரம் உபயுனக்தி –அவன் யாகத்துக்கான பாத்திரங்களைப் பயன்படுத்துகிறான்.

வா. ஸ்வராத்யந்த உபஸ்ருஷ்டாவிதி வக்தவ்யம்

ஓர் உயிரை முதலாகவோ, ஈறாகவோ கொண்ட ஒரு முன்னொட்டோடு வரும் வினை ஆத்மனேபதமாகும்.

உத்யுங்க்தே/நியுங்க்தே

**1.3.65** ஸம: க்ஷ்ணுவ:

க்ஷ்ணு (தீட்டு) என்ற வினை ஸம என்ற முன்னொட்டோடு வந்தால், அந்த வினை ஆத்மனேபதமாகும். ஸம்க்ஷ்ணுதேஸ'ஸ்த்ரம் ஆயுதத் தைத் தீட்டுகிறான்.

**1.3.66** பு[4]ஜோ அனவனே

பு[4]ஜ் (காப்பாற்று, சாப்பிடு) என்ற வினை காப்பாற்றுதல் என்ற பொருளைக் குறிக்காமல் நிற்கும்போது (அனவேன,) ஆத்மனேபதமாகும்.

பு[4]ங்க்தே–சாப்பிடுகிறான் ஆனால் புத்ரான் பு[4]னக்தி பிதா 'தந்தை பிள்ளைகளைக் காப்பாற்றுகிறான்.'

**1.3.67** ணேர் அணௌ யக்கர்ம
ணௌ சேத் ஸ கர்தா அனாத்[4]யானே
அணின் (இயர்ருவினையல்லாத) கர்மன் (செயப்படுபொருள்)
'ணி'யின் இயக்குவினையின் கர்த்தாவாக நின்று, "வருத்தத்துடன் நினைத்தல்" என்ற பொருளை உணர்த்தாமல் அமைந்தால், அந்த ணி இயக்குவினை ஆத்மனேபதமாகும். (செயலின் பயன் கர்த்தாவைச் சேராமலிருந்தாலும்)

| | | |
|---|---|---|
| ஆரோஹந்தி | ஹஸ்தினம் | ஹஸ்திபகா: |
| ஏறுகிறார்கள் | யானை (செயப்படு பொருள்) | குதிரைக்காரர்கள் |

| | | |
|---|---|---|
| ஆரோஹயதே | ஹஸ்தி : | ஸ்வயமேவ |
| ஏற்றுகிறது | யானை (கர்த்தா) | தானாகவே |
| பஸ்யந்தி | ப்ருத்யா: | ராஜானம் |
| பார்க்கிறார்கள் | வேலைக்காரர்கள் | அரசனை |
| த[3]ர்ஸயதே | ராஜா | ஸ்வயமேவ |
| காண்பிக்கிறான் (காட்டுகிறான்) | அரசன் | தானாகவே |

**1.3.68** பீ[4]ஸ்ம்யோர் ஹேது ப[4]யே
பீ(பயப்படு) ஸ்மி(வியப்படை) என்ற வினாக்கள் ணியின் கர்த்தா (இயக்குவினை) பயத்துக்கோ, வியப்புக்கோ, காரணமாக நின்றால், அவைகள் ஆத்மனேபதமாகும்.

1) முண்ட[3]: பீஷயதே மொட்டைத்தலையன் பயமுறுத்துகிறான்
2) ஜடிலோ விஸ்மாபயதே, ஜடாதாரி வியப்புக்குள்ளாக்குகிறான்
3) முண்ட[3]: குஞ்சிகயா ப4ாயயதி மொட்டைத்தலையன் மூங்கில் குருத்தால் பயமுறுத்துகிறான்.
4) ஜடிலோ விஸ்மாபயதி ரூபேண
ஜடாதாரி தன் உருவத்தினால் (மற்றவர்களை) வியப்புக்குள்ளாக்குகிறான்.

1.2. முண்ட, ஜடில. காரணம்
3.4. குஞ்சிகா ரூபம் காரணம்

**1.3.69** க்[3]ருத்[4]ரி வஞ்ச்யோ: ப்ரலம்பனே
'க்[3]ருத்[4]ரி' 'வஞ்ச்' என்ற வினைகள் இயக்குவினையாகப் பயன்படுத்தும்போது ஏமாற்று என்ற பொருளில் ஆத்மனேபதமாகும் (செயலின் பயன் கர்த்தாவைச் சேராமல் இருந்தாலும்)

மாணவகம் க[3]ர்த[4]யதே/மாணவனை ஏமாற்றுகிறான்
வஞ்சயதே
ஆனால் ஸ்வானம் க[3]ர்த4யதி
அவன் நாயைக் குரைக்க வைக்கிறான்
அஹிம் வஞ்சயதி–பாம்பை விட்டு விலகுகிறான்.

**1.3.70** லிய: ஸம்மானன ஸாலினி கரணயோஸ் ஸ[1]ச
'லி' இயக்குவினை (Causal)யாக, மரியாதை காண்பித்தல் (ஸம்மானன), அடக்குதல் (ஸாலினி கரணம்) ஏமாற்றுதல், ஆகிய பொருட்களைக் குறிக்கும்போது ஆத்மனேபதமாகும் (செயலின் பயன் கர்த்தாவை அடையமலிருந்து போதிலும்)
ஜட[1]ாபி[4] : ஆலாபயதே ''ஜடையினால் மதிக்கப்படுகிறான்''
ஸ்யேன: வர்திகம் உல்லாபயதே
கழுகு கவுதாரியை அடக்குகிறது.
க: த்வாம் உல்லாபயதே யார் உன்னை ஏமாற்றுகிறார்கள்.

**1.3.71** மித்[2]யா உபபத[3]ாத் க்ருஞ: அப்[4]யாஸே
'மித்[2]யா' என்ற சொல் உபபதமாகக் கொண்ட க்ருஞ் என்ற வினை, தப்பாக ''மறுபடியும் மறுபடியும் உச்சரித்தல்'' என்ற பொருளில் ஆத்மனேபதமாகும் (செயலின் பயன் கர்த்தாவையடையாமலிருக்கும்போதும்)

பத[3]ம் மித்[2]யா காரயதே
"சொல்லைத் திரும்பத் திரும்பத் தப்பாக உச்சரிக்கிறான்'' ஆனால் பதம் ஸுஷ்டு காரயதி சொல்லை நன்றாக உச்சரிக்கிறான்.

**1.3.72** ஸ்வரிதோ ஞித: கர்த்ரபி[4]ப்ராயே க்ரியாப[2]லே
ஸ்வரிதத்தை 'இத்'தாகக் கொண்ட வினை 'ஞ்'ஐ இத்தாகக் கொண்ட வினை, ஆகியவை ஒரு செயலின் பயன், கர்த்தாவுக்காக என்ற பொருளில் வரும்போது, அவ்வினைகள், ஆத்மனேபதமாக அமையும்.
யஜதே (கர்த்தா தனக்காக) யாகம் பண்ணுகிறான்
பசதே (கர்த்தா தனக்காகச்) சமைக்கிறான்
இவ்விரண்டு வினைகளும் ஸ்வரிதம் இத்தாகக் கொண்டது,
ஞித் ஸுனுதே, குருதே (ஷுஞ், க்ருஞ்)
யஜதி :–கர்த்தா மற்றவர்களுக்காக யாகம் பண்ணுகிறான்
பசதி :– கர்த்தா மற்றவர்களுக்காக சமைக்கிறான்
சூ. 12. ஆத்மனேபத ஒட்டுக்களோடு வரும் வினையடிச் சொற்களை வரையறுக்கிறது.
இச்சூத்திரம் வினைகள் தத்தம் சூழலைப் பொறுத்து ஆத்மனேபதம ாகவோ பரஸ்மைபதமாகவோ வரலாம் என்று விளக்குகிறது. (அதாவது, கர்த்தாவை மனதில் கொண்டு ஒரு செயல் செய்யப்படுவது அல்லது மற்றவர்களுக்காக

ஒரு செயல் செய்யப்படுவது)

சூ. 78 பரஸ்மைபத ஒட்டுக்களை மாத்திரம் இணைக்கப்படும் வினையடிச் சொற்களை வரையறுக்கிறது.

சூ.72ம், 78ம், சூ13–71 வரையில் கூறப்பட்ட விதிகளுக்கு புறனடைச் சூத்திரங்கள்.

**1.3.73** அபாத்[3] வத[3]:

செயலின் பயன் கர்த்தாவை அடையும் என்று அமையும்போது, 'வத்' என்ற வினை 'அப' என்ற முன்னொட்டோடு வரும் போது ஆத்மனேபதமாகும். த4னகாம: ந்யாயம் அபவத[3]தே தனக்குப் பணம் சேர்க்க வேண்டும் என்று விரும்புபவன், சட்டத்தை அவமதிக்கிறான். ஆனால் அபவத[3]தி பொய் சொல்கிறான்.

**1.3.74** ணிசஸ்[1] ச

ஒரு செயலின் பயன் கர்த்தாவை அடையும் என்ற பொருளை உணர்த்தும் இயக்கு வினைக்குப்பின் ஆத்மனேபத ஒட்டுக்கள் இணைக்க வேண்டும். கடம் காரயதே (அவ்ன தனக்காகப்) பாயைச் செய்விக்கிறான்.

ஆனால் கடம் காரயதி (அவன் மற்றவனுக்காகப்) பாயைச் செய்விக்கிறான்.

**1.3.75** ஸம் உத் ஆங்ப்[4]யோ யமோ அக்[3]ரந்தே[2]

ஸம், உத், ஆங் ஆகிய உபஸர்க்கங்களுடன் வரும் 'யம்' (முயற்சி செய்) என்ற வினை, புத்தகம் என்ற பொருளில் அல்லாமல், அச்செயலின் பயன் கர்த்தாவையடையும் என்றமையும்போது ஆத்மனேபதமாகு ம்.

1. இந்த்[3]ரியாணி ஸம்யச்ச[2]தே: அவன் தன் புலனுணர்வுகளை அடக்கிக் கொள்கிறான்.
2. பா[4]ரம் உத்[3]யச்ச[2]தே சுமையைத் தூக்குகிறான்
3. வஸ்த்ரம் ஆயச்ச[2]தே தன் துணியை விரிக்கிறான்

ஆனால் உத்யச்ச[2]தி சிகித்ஸாம் வைத்[3]ய:

மருத்துவர் மருத்துவநூலை ஊக்கத்தோடு படிக்கிறார்

**1.3.76** அனுபஸர்க[3]ாத் க்[3]ஞ:

'க்[3]ஞா' உபஸர்கம் எதுமில்லாமல், செயலின் பயன் கர்த்தாவை அடையும் என்ற பொருளை உணர்த்தும்போது ஆத்மனேபதமாகும். கா[3]ம் ஜானீதே (தன்) பசுவை (அவன்) அடையாளம் கண்டு கொள்கிறான். ஆனால் தேவதத்தஸ்ய கா[3]ம் ஜானாதி தேவதத்தனுடைய பசுவை அடையாளம் கண்டு கொள்கிறான்.

**1.3.77** விபா[4]ஷா உபபதே[3]ன ப்ரதீயமானே

ஒரு வினையின் உபபதம், அவ்வினையால் செய்யப்படும் செயல்

கர்த்தாவையடையும் என்ற பொருளை உணர்த்தினால், அது விருப்பாக ஆத்மனேபதமாகும்.
ஸ்வம் யக்3ஞம் யஜதி/யஜதே (அவன்) தன் யாகத்தை நடத்துகிறான்
ஸ்வம் கடம் குருதே/கரோதி அவன் தன் பாயைச் செய்கிறான்

**1.3.78** ஸேஷாத் கர்தரி பரஸ்மைபதம்
மேலே குறிப்பிட்ட விதிகளுக்குள்ளடங்காத ஏனைய வினைகள் கர்த்தாவைக் குறிக்க பரஸ்மைபத ஒட்டுக்களோடு வரும் யாதி, ஆவிஸ்தி

**1.3.79** அனு ப்ராப்4யாம் க்ருஞ:
அனு, ப்ர, என்ற உபஸர்கத்தோடு 'க்ருஞ்' என்ற வினை, செயல் கர்த்தாவுக்காகச் செய்யப்படுகிறது என்ற பொருளில் அமைந்தாலும், பரஸ்மைபத ஒட்டுக்கள்தான், இவ்வினையோடு வரும்.
அனுகரோதி பின்பற்றுகிறான்/போல் செய்கிறான்
பராகரோதி–விஞ்சுகிறான்.

**1.3.80** அபி4ப்ரதி அதிப்4ய ஸக்ஷிப:
அபி4, ப்ரதி, அதி, ஆகியவைகளுக்குப்பின் 'க்ஷிப்' என்ற வினையமைந்து, செயலின் பயன் கர்த்தாவையடையும் என்ற பொருளைக் குறித்தாலும் வினைச் சொல் பரஸ்மைபதமாகும்.
அபிக்ஷிபதி–இங்கும் அங்கும் எறிகிறான்.
பிப்ரதிக்ஷுபதி 'திருப்பி எறிகிறான்.ங
அதிக்ஷிபதி 'வெகுதூரத்தில் எறிகிறான்'
இம்மூன்று உபசர்க்கங்கோடு 'க்ஷிப் 'வரும்போதுதான், இந்த விதிபயன்படும் மற்ற இடங்களில் ஆக்ஷிபதே
சூ. 14ல் கூறப்பட்ட இரண்டாவது கர்த்தாவையும் இங்கு குறிப்பிட வேண்டும்.
அபி4க்ஷிப்யதே ஸ்வயமேவ
தானாகவே எறியப்பட்டது.

**1.3.81** ப்ராத் வஹ:
'ப்ர' என்ற உபஸர்க3த்துடன் வரும் வஹ என்ற வினை பரஸ்மைபதமாகும் (செயலின் பயன் கர்த்தாவையடையும் என்ற பொருளில் அமைந்தாலும்)
ப்ரவஹதி–ஓடுகிறது (ஆறு)
ஆவஹதே–அவன் தனக்காகக் கொண்டு வருகிறான்.

**1.3.82** பரேர: ம்ருஹ:
'பரி' என்ற உபஸர்கத்தோடு வரும் ம்ருஷ என்ற வினை பரஸ்மைபதமாகும் (செயலின் பயன் கர்த்தாவை அடையும் என்ற பொருளில் வந்தாலும்)
'பரிம்ருஷ்யதி' எல்லா வகையிலும் ஸஹித்துக் கொள்கிறான்.

அந்த ஸம்க்$^3$ஞா இவ்விரண்டு நிபாதங்களுக்கும் அளிக்கப்பட்டதின் காரணம், இவைகள், உபசர்கமாகவோ, கதியாகவோ வரும்போது எந்த விதி பயன்படுத்தப்படுமோ அது இங்கு செயற்படாது என்று விளக்குவதற்காகத்தான் (பார்க்க 8.3.87; 8.1.70)

**1.4.94** ஸு: பூஜாயாம்

ஸு: என்ற நிபாதம் 'சிறந்தது, பாராட்டத்தக்கது' என்ற பொருளை உணர்த்தும்போது கர்மப்ரவசனீயமாகும்.

ஸு ஸிக்தம் ப$^4$வதா

நன்றாகத் தெளிக்கப்பட்டிருக்கிறது உன்னால்

ஸு ஸ்துதம் ப$^4$வதா

நன்றாகப் புகழப்பட்டது உன்னால்

இங்கு, ஸு உபஸர்கமாக அமைந்தால், வினையின் 'ஸ்' (முதல்) 'ஷ்' ஆகியிருக்கும் (8.3.65) ஸு, கர்மப்ரவசனியமாக இங்கு வருவதால் இந்த மாற்றம் நிகழவில்லை.

ஆனால்

ஸுஷிக்தம் கிம் தவாத்ர

உன்னுடைய இடம் நன்றாகத் தெளிக்கப்பட்டிருக்கிறதா?

இங்கு 'ஸ்' 'ஷ்' (ஸு இங்கு உபஸர்கம்)

**1.4.95** அதி: அதிக்ரமணே ச

'அதி' என்ற நிபாதம் 'மிகுதி, சிறப்பு' என்ற பொருட்களில் பயன்படுத்தும்போது கர்மப்ரவசனியமாகும்.

அதிஸிக்தம் ப$^4$வதா

மிகுதியாகத் தெளிக்கப்பட்டிருக்கிறது உன்னால்

அதிஸ்துதம் ப$^4$வதா

சிறப்பாகப் புகழப்பட்டது உன்னால்

**1.4.96** அபி: பத$^3$ார்த$^2$ ஸம்ப$^4$ாவன

அன்வஸர்க$^3$ க$^3$ர்ஹா ஸமுச்சயேஷு

'அபி' என்ற நிபாதம் கீழ்க்கண்ட பொருட்களைக் குறிக்கும்போது கர்மப்ரவசனியம் என்ற பெயர் பெறும்.

1. பதார்த$^2$: தொக்கி நிற்றல்

ஸர்பிஷோ அபி ஸ்யாத் – ஒரு துளி நெய்யாவது இருக்கும் இங்கு 'பி$^3$ந்து$^3$ துளி' தொக்கிநிற்கிறது.

2. ஸம்ப$^4$ாவனம் – முடியக்கூடிய செயல்

அபிஸிஞ்சேத் மூலக ஸஹஸ்ரம்

(அவன்) 1000 மரத்துக்கு கூட தண்ணீர் தெளிப்பான்

3. அனவவஸர்க³: அசட்டை மனப்பான்மை
அபிஸிஞ்ச வேணுமானால் தண்ணீர் தெளி

4. க³ர்ஹா இகழ்ச்சி, பழிப்பு
தி⁴க்³ ஜால்மம் தேவதத்தம் அபிஸ்துயாத் வ்ருஷலம்

5. ஸமுச்சய – கூட்டுதல்
அபி ஸிஞ்ச அபி ஸ்துஹி (ஸிஞ்ச ச ஸ்துஹி ச) தண்ணீர் தெளி; புகழ்

**1.4.97** அதி⁴: ஈஸ்வரே
'அதி⁴' ஆள்பவன் என்ற பொருளில் கர்மப்ரவசனீயமாகும்.
அதி⁴ பஞ்சாலேஷு ப்⁴ரஹ்மத³த்த:
ஆள்பவன் பஞ்சாலம் பிரமதத்தன்

**1.4.98** விப⁴ாஷா க்ருஞி
'அதி⁴, க்ரு' என்ற வினையோடு நிற்கும் போது விருப்பாக கர்மப்ரவசனீயமாகும்.
யத³ர மாமதி⁴கரிஷ்யதி
யார் என்னை இங்கு வேலைக்கமர்த்துக்கிறார்களோ
கர்மப்ரவசனீயமாக 'அதி⁴' இங்கு பயன்படுத்தப்படுவதால் இதன் ஒலியழுத்தம் () கெடவில்லை. 'க³தி' யாக நிற்கும்போது ஒலியழுத் தம் கெட்டிருக்கும் (8.1.71)

**1.4.99** ல: பரஸ்மைபத³ம்
'ல'வுக்குப் பதிலாக வருபவைகள் பரஸ்மைபதமெனப்பெயர் பெறு ம். 'ல' ஒரு பொதுப்படையானபெயர். எல்லாக் காலங்களையும் () வினை நோக்குகளையும் () குறிக்கப்பயன்படுத்தப்படும். பொதுப்படையான பெயர் அவைகள் வருமாறு.

1) லட்¹ நிகழ்காலம்
2) லிட் வினை முடிவுறுகாலம்()
3) லுட். சொற்புற எதிர்காலம் ()
4) ல்ருட். எதிர்காலம்
5) லேட். ()
6) லோட் ஏவல்()
7) லங். வினை முடிவுறா காலம்()
8) லிங். ஆற்றல் உணர்த்தும் வினைச் சொல்()
9) லுங். பொது இறந்த காலம்()
10) ல்ருங். சார்பு நிலை குறித்த வினைப்பாங்கு ()

'லிங்' இன் மற்றொரு வகை ஆஸிர்லிங் 'வாழ்த்தும் பாங்குள்ள வினை' 'ல'யின் அடிப்படையான ஆதேசங்கள் வறுமாறு (3.4.77) பரஸ்மைபதம்

ஒருமை இருமை பன்மை

தன்மை மிப் வஸ் மஸ்

முன்னிலை ஸிப் த$^2$ஸ் த

படர்க்கை திப் தஸ் ஜி$^2$

ஆத்மனேபதம்

தன்மை இட்$^1$ வஹி மஹிங்

முன்னிலை த$^2$ாஸ் ஆத$^2$ாம் த்$^4$வம்

படர்க்கைத ஆதாம் ஜ$^2$

இது ஒரு பொதுவான சூத்திரம் (உத்ஸர்க$^3$ம) இதன்படி மேலே குறிப்பிட்ட எல்லா ஒட்டுக்களும் பரஸ்மைபதம் என்ற ஸம்க$^3$ஞாவுள்ளடங்கும். இதற்கு அடுத்த சூத்திரம். இச்சூத்திரத்துக்கு புறனடை.

ஸத்ரு, க்வஸுவும் 'ல'வின் பதிலிகள் (3.2.107; 124; 3.4.78)

**1.4.100** தங் ஆளௌ ஆத்மனேபதம்

'தங்' என்ற ப்ரத்யாஹாரத்துள்ளடங்கிய ஒன்பது பதிலிகளும், 'ஆவ' (ஸானச், கானச்)வும் ஆத்மனேபதமெனப்படும். 'தங்' ப்ரத்யாஹாரத்துள்ளடங்கிய ஒட்டுக்கள் மேலே குறிப்பிட்ட, த, ஆதாம் மஹின் ஆகியவை.

ஸானச், கானச் (3.2.106)

**1.4.101** திஙோஸ் த்ரிணி த்ரீணி, ப்ரத$^2$ம

மத்யம உத்தமா:

'திங்' இனுடைய மும்மூனுறு ஒட்டுகள் முறையே, ப்ரதம (படர்க்கை), மத்யம (முன்னிலை) உத்தம (தன்மை) (பரஸ்மைபதமும், ஆத்மனேபதமும்) என்பதைக் குறிக்கும்.

**1.4.102** தானி ஏகவசன த்$^3$வி வசன பஹு வசனானி ஏகஸ$^1$:

இவைகள் தனித்தனியாக, ஏகவசனம் (ஒருமை) த்$^3$விவசனம் (இருமை பஹுவசனம் (பன்மை) என்ற எண்களைக் குறிக்கும்.

அதாவது திப் (ஒருமை) தஸ் (இருமை) ஜி$^2$ (பன்மை)

**1.4.103** ஸுப:

வேற்றுமையுருபுகளின் மூன்றன் தொகுதிகளையும் () இவ்வாறே ஏகவசனம், த்$^3$விவசனம், பஹுவசனங்களைக் குறிக்குப்பதாகக் கொள்ள வேண்டும் (4.1.2) ஸு ஒருமை, ஔ. இருமை. ஜஸ் பன்மை.

**1.4.104** விப$^4$க்திஸ்' ச

மூன்றன் தொகுதிகளைக் கொண்ட வினையோடு வரும்

ஒட்டுக்களும் (திங்) வேற்றுமையுருபுகளும் (ஸுப்) விப[4]க்தி எனப்படும்.

**1.4.105** யுஷ் மதி உபபதே[3] ஸமானாதி[4]கரணே
ஸ்தானினி அபி மத்[4]யம:
மாற்றுப் பெயர் 'யுஷ்மத்' (நீ) ஒரு வினையோடு உபபதமாக
வெளிப்படையாகவோ (ஸ்த[2]ானின்) அல்லது மறைமுகமாகவோ
குறிப்பிடப்படும்போது அந்த மாற்றுப் பெயருடன் வரும் வினைச் சொல்லுடன்
மத்[4]யம. அதாவது முன்னிலை ஒட்டுக்களை இணைக்க வேண்டும்.
த்வம் பசஸி (அ) பசஸி
யுவாம் பசத[2] (அ) ப[4]த[2]:
யூயம் பசத[2] (அ) பசத[2]

**1.4.106** ப்ரஹாஸே ச மன்யோபபதே
மன்யதே: உத்தம ஏகவச் ச
மன்ய (நினைத்தல்) என்ற வினை சார்ந்து நின்று ஒருவன் பசயலைக் குறித்து
வேடிக்கையாகப் பேசுவது போல் அமையும் ஒரு வாக்கியத்தில் தலைமை
வினைக்குப் பின் முன்னிலை ஒட்டுக்களையும் (மத்[4]யம) மன்ய வுக்குப்
பின்னால் கன்னம் (உத்தம) ஒட்டுக்களையும் இணைக்க வேண்டும்.

வா: ஏஹி மன்யே ஓத[3]னம் பே[4]ாக்ஷ்யஸே நான் நினைக்கிறேன் சோறு உண்பேன். பே[4]ாக்ஷ்யஸே முன்னிலை ஒருமை (மத்யம) மன்யே தன்மை ஒருமை (உத்தம)

வா: நீ சோறு உண்பேன் என்று நினைக்கிறாய் நீ உண்ணமாட்டாய். விருந்தாளிகள் அச்சோற்றை உண்டுவிட்டார்கள். அதனால் சோறு இல்லை. ஆனால் வேடிக்கையாக அமையாவிட்டால் ஏஹி மன்யஸே (முன்னிலை) ஓத[3]னம் பே[4]ாக்ஷ்யே (முன்னிலை) இதி.
ஏஹி மன்யே ஓத[3]னம் பே[4]ாக்ஷ்யஸே. இதி நஹி பே[4]ாக்ஷ்யஸே பு[4]க்த: ஸோ அதிதி[2]பி:
ஸாது[4] மன்யஸே
சரியாக நினைக்கிறாய்

**1.4.107** அஸ்மதி[3] உத்தம.
மாற்றுப்பெயர் 'அஸ்மத் ஒரு வினை உபபதமாக (சார்ந்து)
வெளிப்படையாகவோ அல்லது மறை முகமாகவோ குறிப்பிடப்படும் போது
அந்த மாற்றுப் பெயருடன் நிற்கும் வினைச் சொல்லோடு உத்தம (தன்மை)
ஒட்டுக்களை இணைக்க வேண்டும்.
அஹம் க[3]ச்ச[2]ாமி (அ) க[3]ச்சா[2]ாமி
ஆவாம் க[3]ச்ச[2]ாவ: (அ) க[3]ச்சாவ:
வயம் க[3]ச்ச[2]ாம: (அ) க[3]ச்சாம:

**1.4.108** ஸே'ஷே ப்ரத²ம:

மேலே குறிப்பிட்ட சூழல்களைத் தவிர்த்து மற்ற இடங்களில் (ஸே' ஷே) ப்ரத² 10 அல்லது படர்க்கை ஒட்டுக்களை வினையுடன் இணைக்க வேண்டும்.

ஒருமை

ஸ: க³ச்'ச²தி அவன் போகிறான் க³ச்'ச²தி

ஸா க³ச்'ச²தி அவன் போகிறான்

தத் க³ச்'ச²தி அது போகிறது

இருமை

தௌ க³ச்'ச²த: அவர்கள் போகிறார்கள் (2)

தே க³ச்'ச²த: அவர்கள் போகிறார்கள் (2)

தே க³ச்'ச²த: அவைகள் போகின்றன.

பன்மை

தே க³ச்'ச²ந்தி அவர்கள் போகிறார்கள்

தா: க³ச்'ச²ந்தி அவர்கள் போகிறார்கள் கச்சந்தி

தானி க³ச்'ச²ந்தி அவைகள் போகின்றன

அவஸானம் (8.4.57; 57; 56)

வ்ருக்ஷ; ப்லக்ஷ: விஸர்க³ம் அவஸானம் (8.3.15)

**1.4.109** பர: ஸம்நிகர்ஷ: ஸம்ஹிதா

எழுத்துக்கள் மிகவும் நெருங்கியமைந்திருக்கும்போது அவைகள் ஸம்ஹிதா எனப் பெயர் பெறும்.

இரண்டு எழுத்துக்களைத் தொடர்ந்து உச்சரிக்கும்போது அவ்விரண்டு எழுத்துக்களுக்குமிடையே அரைமாத்திரை கால இடைவெளி (உச்சரிப்பதற்காக) அமைந்து, அக்காலத்திற்கு மேற்படாமல் நெருங்கியமைந்திருக்கும் எழுத்துக்களுக்கு ஸம்ஹிதா என்று பெயர் த³த்⁴யத்ர த³தி⁴ அத்ர

**1.4.110** விராமோ அவஸானம்

அவஸானம் என்பது (உச்சரிப்பை) நிறுத்துதல்

த³தி⁴ம் மது⁴ம் ம். மூக்கினமாக்கம், இந்த 'ம்' அவஸானம்

**2.1.1** ஸமர்த²: பத³ விதி⁴

பொருண்மை (Senantics) தொடரியியல் (Syntax) இவ்விரண்டு வகையிலும் இணைந்து படும் சொற்கள் பற்றிய விதி.

இது ஒரு பரி பாஷா சூத்திரம். இச்சூத்திரத்தில் கூறப்பட்டிருக்கும் 'பதம்' என்ற சொல் முழுமையான சொல் என்ற பொருளைச் சுட் டுகிறது. முழுமையான

அதாவது (2)ஸமாஸம் (தொகை) பற்றிய விதி. (2) விபக்தி, (3) பராங்க வத்[3] ப[4]ாவ. ஒரு சொல் மற்றொரு சொல்லின் அவயமாகக் கருதப்படும்போது.
ஸமர்த[2] என்ற சொல்; பொருண்மையினாலும், தொடரியலினாலும் ஒன்றுக்கொன்று இணைந்து நிற்கும் சொற்கள் என்று பொருள்படும். இது (தொகை) ஸமாஸத்தைக் குறிக்கிறது.

**2.1.2** ஸுப் ஆமந்த்ரிதே பரஅங்கவத் ஸ்வரே

ஆமந்த்ரித (விளி வேற்றுமை)த்துக்கு முன் நிற்கும் வேற்றுமைச் சொல் (ஸுப்) (இவ்விரண்டும் பொருண்மையினாலும் தொடரியலினாலும் இணைந்து இருந்தால்), அவ்வேற்றுமைச் சொல் சுரத்தின் தொடர்பான விதியைப் பயன்படுத்தும்போது, அதைத் தொடர்ந்து வரும் விளி வேற்றுமைச் சொல்லின் ஒரு பகுதியாகக் (அங்கவத்) கருதப்படும்.
சூ. 6.1.198இன்படி விளி வேற்றுமைச் சொல்லின், முதல் அசை உதாத்தம் என்ற சுரத்தைப் பெறும்.
ஊர்ஜோ நபாத் ஸஹஸ்வஸ்.
இங்கு ஊர்ஜ:, நபாத் ஸஹஸ்வஸ் என்ற விளி வேற்றுமைச் சொற்களுக்கு முன் நிற்கிறது. அதனால், அதன் முதல் அசை (Syllable) உதாத்தமாகிறது.
குண்டேனாடன் என்ற தொடரின் அடன் விளிவேற்றுமைச் சொல்லின் பகுதியாக, (குண்டேன அடன் கிண்ணத்தை வைத்துக் கொண்டு அலைபவனே) குண்டேன நிற்கிறது. இச்சொல்லின் முதல் அசையான 'கு'வின் 'உ' உதாத்தமாகிறது.
விளி வேற்றுமைச் சொல்லுக்கு முன் நிற்கும் சொல், ஸுபந்தம் (வேற்றுமைச் சொல்) ஆக அமையும்போதுதான் இந்த விதி பயன்படுத்தப்படும். மற்ற இடங்களில் அல்ல. காட்டாக பீட்[3]யே பீட்[3]யமான. இங்கு பீட்யே ஒருவினை. அதனால் விளி வேற்றுமைச் சொல்லின் அங்கமாகாது.
கே[3]ஹே க[1]ார்க்[3]ய: விளிவேற்றுமைச் சொல் இங்கு தொடர்ந்து வரவில்லை.
தேவதத்த குண்டேனாடன். இங்கு இரண்டு சொற்களும் விளிவேற்றுமை. ஆனால் குண்டேன, 'தேவதத்த' என்ற சொல்லின் ஒரு பகுதியல்ல. அதனால், இங்கு இவ்விதி பயன்படுத்தப்படமாட்டாது.
இரண்டு சொற்களும் ஒன்றாகக் கருதப்படும் இடங்களில்தான் இவ்விதி பயன்படுத்தப்படும்.

வா: ஸுப[3]ந்தஸ்ய பராங்கவத் ப[4]ாவே
ஸமானாதி[4] கரணஸ்ய உபஸம்க்[2]யானம னந்தரத்வாத்.
வேற்றுமைச் சொல்லுக்கும் அதைத் தொடர்ந்து வரும் விளிவேற்றுமைக்குமிடையே, வேற்றுமைச் சொல்லுக்கு நேரியைபான (ஸமனாதி[4]கரண) பல சொற்கள் நின்றாலும், வேற்றுமைச் சொல், விளி வேற்றுமைச் சொல்லின் ஒரு பகுதியாகக் கருதப்படும்.
தீக்ஷ்ணயா ஸூச்யா ஸீவ்யன்
கூர்மையான ஊசியால் தைப்பவனே

இங்கு 'ஸூச்யா' என்ற சொல்லின் முதல் அசை உதாத்தஸ்வரம் பெறும். இவ்வார்த்திகன்படி தீக்ஷ்ண்யா என்ற சொல்லும் அதே போல் உதாத்தஸ்வரம் பெறும்.

வா: அவ்யயானாம் ப்ரதிஷேதே⁴ா வக்தவ்ய:

அதே சூழலில் அமையும் அவ்யயங்களுக்கு இவ்விதி பயன்படுத்தக் கூடாது.

உச்சைரதீ⁴யான

உரக்கப்படிப்பவனே

உச்சை; ஒரு அவ்யயம். இது விளி வேற்றுமைச் சொல்லான 'அதீ⁴யான' என்பதின் பகுதியாகாது அதனால், இவ்விரண்டு சொற்களும் தனித்தனி ஸ்வரம் பெறும்.

**2.1.3** ப்ராக் கட³ாராத் ஸமாஸ:

இச்சூத்திரத்திலிருந்து தொடங்கி 2.2.38 (கட³ாராத் கர்மத⁴ாரயம்) வரையில் கூறப்பட்டிருக்கும் விதிகளைப் பயன்படுத்தித்தருவிக்கப்படும் சொற்கள் ஸமாஸம் என்ற பெயர் பெறும். இது ஒரு அதி⁴கார சூத்திரம்.

**2.1.4** ஸஹ ஸுபா.

வேற்றுமை உருபுகளை ஈறாக் கொண்ட சொற்கள் (ஸுப்) மற்றொரு வேற்றுமைச் சொல்லோடு (ஸுபா) இணைந்து ஒரு ஸமாஸமாகும் (தொகை) இதுவும் ஒரு அதிகார சூத்திரம். ஸுப் (2) ஸஹஸுபா (4) என்ற சொற்கள் ஸமர்த²(1) ஸமாஸ (3)என்ற சொற்களோடு அனுவ்ருத்தி மூலம் இந்தப் பாதத்தின் எல்லா சூத்திரங்களிலும் தொடர்ந்து பயன்படுத்த வேண்டும்.

காட்டாக 2.1.14 த்³விதீயா ஸ்ரித – – – –என்ற சூத்திரத்தை த்³விதீயாந் தம் (11.1.72) ஸுபந்தம் (2.1.2), ஸ்1ரிதாதி3ப: ஸுபந்தை: (1.1.72) ஸ மர்தை²: (2.1.1) ஸ ஹ (2.1.3) ஸமஸ்யதே (3) என்று விளக்க வேண்டு ம்.

'ஸஹ' யோகவிபககமாகும். அதாவது 2 வெவ்வேறு சூத்திரங்களில் இதைப் பயன்படுத்தலாம். இதிலிருந்து, வினையோடு சேர்த்தும் தொகையாக்கலாமென்ற பொருளும் கிடைக்கும். அனுவ்யசலத், அனுப்ராவர்ஷீத் ஆகிய ஸமாஸங்கள் இவ்வாறு தருவிக்கப்பட்டவை.

**2.1.5** அவ்யயீ ப⁴ாவ:

இச்சூத்திரத்திலிருந்து சூ21 வரை கூறப்படும் விதிகளினால் தருவிக்கப்படும் தொகைகள் அவ்யயீ பாவம் எனப்பெயர் பெறும்.

இதுவும் ஒரு அதிகார சூத்திரம்.

இரு உறுப்பினர்களில் முதலுறுப்பினரின் பொருள் முதன்மையானது அவ்யயீ ப⁴ாவம்.

**2.1.6** அவ்யயம் விப⁴க்தி ஸமீப ஸம்ருத்³தி⁴
வ்ய்ருத்³தி⁴ அர்த² அப⁴ாவ அத்யய அஸம்ப்ரதி

ஸ'ப்'³த³ ப்ராது³ர்ப'³வ பஸ்'சாத் யத²ா அனுபூர்வ்ய யௌக³பத்³ய ஸாத்³ருஸ்'ய ஸம் பத்தி ஸாகல்யாந்த வசனேஷு

ஒரு அவ்யயம் விபக்தி முதலியவைகளின் பொருளைக் கொண்ட சொற்களுடன் (பொருண்மை தொடரியல் இவ்விரண்டு வகையிலும்) இணைந்து ஸமாஸமாகும். அது அவ்யயீபாவ ஸமாஸமெனப்படும்.

1. விப⁴க்திவசன ← அதி⁴ஸ்தீரி ஸ்த்ரீஷு அதி⁴க்ருத்ய பெண்களைப் பற்றி

2. ஸமீப வசனம் → உபகும்ப⁴ம் கும்ப⁴ஸ்ய ஸமீபம் "பானைக்கு அருகில்"

3. ஸம்ருத்³தி⁴ வசனம்←ஸுமத்³ரம் ஸம்ருத்³தி⁴ர் மத்³ராணாம்– "மத்ரர்களின் செழிப்பு"

4. வ்ய்ருத்³தி⁴←து³ர்யவனானாம் யவனானாம் வ்ய்ருத்³தி⁴ "யவனர்களின் நசிவு"

5. அர்த²ாபாவ← நிர்மக்ஷிகம் மக்ஷிகாணாமப⁴ாவ– "கொசுக்களில்லாமை"

6. அத்யய←நிர்ஹிமம் அதீதானிஹிமானி – குளிர்காலத்தைக் கடந்த

7. அஸம்ப்ரதி←அதிதைஸ்ருகம் தைஸ்ருகம் ஸம்ப்ரதி ந யுஜ்யதே–இப்போது கம்பளி பயன்படுத்தும் காலமல்ல.

8. ஸ'ப்'³த³ ப்ராது³ர் ப⁴ாவ–இதிபாணினி, தத்பாணினி. பாணினி ஸ'ப்'³த³: லோகே ப்ரகாஸ'த இத்யர்த²:
பாணினி என்ற சொல் உலகம் அறிந்தது.

9. பஸ்சாத்–அனுரத²ம் பாத³ாத²ம்
ரதானாம் பஸ்சாத் = அனுரத²ம்
ரதத்தைத் தொடர்ந்து பதாதி

10. யத²ார்த²ம்–
அ) யோக்³யதரா–அனுரூபம் ரூபஸ்ய யோக்யம் "ரூபத்துக்குத் தகுந்த"
ஆ) வீப்ஸா–ப்ரத்யர்த²ம்=அர்த²ம் அர்த²ம் ப்ரதி–ஒவ்வொரு பொருளுக்குத் தகுந்த
இ) பத³ார்த²ானதி வ்ருத்தௌ–யத²ாஸ'க்தி ஸக்திமனதிக்ரம்ய–தனது ஸ'க்திக்கு ஏற்றபடி

11. அனுபூர்வ்ய – அனுக்ரம;
அனுஜ்யேஷ்ட²ம் ப்ரவிஸ'ந்து ப⁴வந்த:
தாங்கள் தங்கள் வயதுக்கிரமப்படி உள்ளே வாருங்கள்

12. யௌக³பத்யம் – சக்ரம் தே⁴ஹி
சக்கரத்தோடு சேர்த்து பிடி

13. ஸாத்³ருஸ்'யம் – ஸகிகி = ஸத்ருஸ': கிக்யா

14. ஸம்பத்தி – ஸப்³ரஹ்ம ப³ாப்⁴ரவாணாம்
பாப்ரவர்களின் பிரமத்தோடு இயைந்த நிலை. அவர்களுக்கேற்றவாறு உள்ளது.

15. ஸாகல்யம்–ஸத்ருணமப்⁴யவஹரதி

புல்லைக்கூட விடாமல் சாப்பிடுகிறான்.

அதாவது சிறிதளவுகூட விடாமல் எல்லாவற்றையும் சாப்பிடுகிறான்.

16. அந்த–ஸாக்னி–''அக்னியைப்பற்றிய இயல்வரை''

**2.1.7** யத²ா அஸாத்³ருஸ்ய

யதா² என்ற அவ்யயம் 'ஒப்புமை' என்ற பொருளைக் குறிக்காமல் மற்றொரு வேற்றுமைச் சொல்லுடன் இணைந்து அவ்யயீபாவஸமாஸமாகும்.

யே யே வ்ருத்³த⁴ா: யத²ா வ்ருத்³த⁴ம்

யார் யார் வயதானவர்களோ அந்த பிராம்மணர்களை அழை.

**2.1.8** யாவதவத⁴ாரணே

யாவத் என்ற அவ்யயம் 'வரையில்' என்ற பொருளில் (அவத⁴ாரணே) மற்றொரு வேற்றுமைச் சொல்லோடு சேர்ந்து அவ்யயீபாவஸமாஸமாகும்.

யாவதமத்ரம் ப்3ராஹ்மணானாமந்த்ரயஸ்ய = யாவந்தி பாத்ராணி ஸம்ப⁴வந்தி பஞ்ச ஷட்¹ வா தாவத் ஆமந்த்ரயஸ்வ

எத்தனை பாத்திரங்கள் இருக்கிறதோ அத்தனை பிராம்மணர்களை அழை

**2.1.9** ஸுப் ப்ரதினா மாத்ரார்தே²

வேற்றுமையுருபுகளில் முடியும் சொற்கள் 'ப்ரதி' என்ற அவ்யயத்தோடு சேர்ந்து 'சிறிதளவு' என்ற பொருளில் அவ்யயீப⁴ாவஸமாஸமாகும்.

ஸ'ாகப்ரதி – 'சிறிது காய்கறி'

இங்கு 'ப்ரதி' உபஸர்ஜனமல்ல

**2.1.10** அக்ஷ ஸ'லாக ஸங்க்²யா: பரிணா.

'அக்ஷ' (பகடை) ஸ'லாக 'சூதாட்டத்தில் பயன்படுத்தப்படும் தந்தக்குச்சி' ஸங்க்²யா 'எண்ணுப் பெயர்' ஆகியவைகள் 'பரி' என்ற அவ்யயத்துடன் சேர்த்து அவ்யயீபாவஸமாஸமாகும். அக்ஷபரி 'தோல்வியளித்த பகடை' ஏகபரி ஸலாக பரி.

**2.1.11** விப⁴ாஷா

விருப்பம்

இது ஒரு அதிகார சூத்திரம். இதிலிருந்து 2.2.36 வரையிலுள்ள சூத்திரங்களை விளக்கும்போது 'விபா⁴ஷா' (விருப்பாக) என்ற சொல்லை அனுவ்ருத்தி மூலம் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

**2.1.12** அப பரி ப³ஹி: அஞ்சவ: பஞ்சம்யா

5ஆம் வேற்றுமைச் சொற்களுடன், அப, பரி, ப³ஹி, அஞ்சு ஆகியவைகள் விருப்பாகச் சேர்த்து அவ்யயீபாவமாகும்.

அபத்ரிக³ர்தம்/அபத்ரிக³ர்தேப்⁴ய:

வ்ருஷ்டோ தே[3]வ: "த்ரிகர்தத்தைத் தவிர்த்து ஏனைய இடங்களில் மழை பெய்தது.

**2.1.13** ஆங் மர்யாதா[3] அபி[4]வித்[4]யோ:

'ஆங்' என்ற அவ்யயம் விருப்பாக 5ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொல்லுடன் எல்லைப் பொருளில்–அபிவிதி[4] (உள்ளடங்கிய) (Inclusive) மர் யாதா (தவிர்த்து) (Exclusive) அவ்யயீமாவஸமாஸமாகும்.

ஆபாடலிபுத்ரம்/ஆபாடலிபுத்ராத்

(மர்யாதா) பாடலிபுத்திரம் வரை

ஆகுமாரம்/ஆகுமாரேப்[4]ய: யஸ[1]: பாணினி

(அபி[4]விதி[4]) பாணினியின் புகழ் சிறுவன்வரை பரவியுள்ளது.

**2.1.14** லக்ஷணேன அபி[4], ப்ரதீ, அபி[4]முக்[2]யே.

அபி[4], ப்ரதி 'திசையைக் குறித்து' என்ற பொருளை குறிப்பிடும்போது, எல்லையைக் குறிக்கும் 5ஆம் வேற்றுமைச் சொல்லுடன் விருப்பாக இணைந்து அவ்யயீபாவஸமாஸமாகும்.

அப்[4]யக்[3]னி ஸ'ல ப[4]ா: பதந்தி

நெருப்பைக் குறித்து விட்டில்கள் விழுகின்றன அல்லது அக்னிமபி[4]

**2.1.15** அனுர் யத் ஸமயா

அனு "பிறகு" எதற்குப் பக்கம்/அருகே என்று குறிக்கிறதோ அச்சொல்லோடு சேர்ந்து (விருப்பாக) அவ்யயீபாவமாகும்.

அனுவனம் அஸ'னிர்க[3]த:

காட்டிற்குப் பக்கத்தில் இடி சென்றது.

**2.1.16** யஸ்ய ச ஆயாம:

'அனு' என்ற அவ்யயம் எதனுடைய விஸ்தாரத்தையோ நீளத்தையோ குறிக்கிறதோ அச்சொல்லுடன் விருப்பாக இணைந்து, அவ்யயீபாவமாகும்.

அனுக[3]ங்கம் வாராஸஸீ

கங்கைக்கரை அருகாக வார்ராணஸி

**2.1.17** திஷ்ட[2]த்கு[3] ப்ரப்[4]ருதீ[3]னி ச

திஷ்ட[2]த்கு[3] முதலியவைகளும் அவ்யயீபாவமாகும்.

திஷ்ட[2]ந்தி க[3]ாவோ யஸ்மின் காலே

தே[3]ாஹனாய ஸ: திஷ்ட[2]த்கு[3] கால:

இவைகள் ஒரு கால அளவைக் குறிக்கும் ஸமாஸம்

பசுக்கள் பால் கறப்பதற்காக தத்தம் இடங்களில் எவ்வளவு நேரம் நிற்குமோ அவ்வளவு நேரம்.

**2.1.18** பாரே மத்$^4$யே ஷஷ்ட்$^2$யா வா

பாரே 'குறுக்காக, கடந்து' மத்$^4$யே 'நடுவில்' ஆகியவைகள் 6ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொல்லுடன் விருப்பாகச் சேர்ந்து அவ்யயீபாவமாகும்.

பாரம் க$^3$ங்கா$^3$யா: – பாரேகங்கம்–கங்கைக்கு அக்கரை

மத்$^4$யம் க$^3$ங்கா$^3$யா: – மத்$^4$யே க$^3$ங்க$^3$ம் கங்கையின் நடுவில்

க$^3$ங்க$^3$ா பாரம்

க$^3$ங்க$^3$ா மத்யம் தத்புருஷஸமாஸம்

**2.1.19** ஸங்க்$^2$யா வம்ஸ்$^1$யேன

எண்ணுப் பெயர், ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவன் என்ற பொருளைச் சுட்டும் மற்றொரு பெயர்ச் சொல்லோடு இணைந்து அவ்யயீபாவஸமாஸமாகும்.

த்$^3$வௌ முனௌ வ்யாகரணஸ்ய வம்ஸ்யௌ த்விமுனி

வ்யாகரணஸ்ய இலக்கணத்தின் இரு முனிகள்

ஆனால் த்விமுனி வ்யாகரணம்

**2.1.20** நதீபி$^4$ஸ்$^1$ ச

எண்ணுப்பெயர் நதியின் பெயரோடும் சேர்ந்து அவ்யயீ பாவஸமாஸம் ஆகும். இது ஒரு முழுமொத்தத்தைக் குறிக்கும் (Aggrogate) ஸப்தக$^3$ங்க$^3$ம் – ஸப்தானாம் க$^3$ங்க$^3$ானாம் ஸமாஹார:– 'ஏழு கங்கைகள்'

பஞ்சநதம் – பஞ்சானாம் நதீனாம் ஸமாஹார: "5 நதிகள்"

**2.1.21** அன்யபத$^3$ார்தே$^2$ ஸம்க்ஞாயாம்

நதியின் பெயரைக் குறிக்கும் பெயர்ச் சொல் மற்றொரு பெயர்ச் சொல்லுடன் இணைந்து அவ்விரண்டு உறுப்பினர்களின் பொருளைய ல்லாது வேறொரு பொருளை சுட்டுமாறு அமைந்து, அத்தொகை ஒரு ஸம்க்$^3$ஞா ('பெயர்'வாக வரும்போது, அவ்யயீப$^4$ாவமெனப்படும்.

உன்மத்தக$^3$ங்க$^3$ம் – ஒரு நாட்டின் பெயர்

உன்மத்தா க$^3$ங்க$^3$ா யஸ்மின் தே$^3$ஸே$^1$

ஆனால், க்ருஷ்ண வேண்ணா – க்ருஷ்யா ச

அஸௌ வேண்ணா. இது கர்மத$^4$ாரயம்

ஸீக்$^4$ர க$^3$ங்கா$^3$ யஸ்மின் தேஸே$^1$ஸ: பஹுவ்ரீஹி

**2.1.22** தத்புருஷ:

இச்சூத்திரத்திலிருந்து 2.2.23 வரையில் விளக்கப்பட்டிருக்கும் தொகைகள் தத்புருஷம் எனப்பெயர் பெறும். இது ஒரு அதிகார சூத்திரம்.

இறுதி உறுப்பினரின் பொருள் முதன்மையானது

(உத்தர பத$^3$ார்த$^2$ ப்ரத$^4$ான:) தத்புருஷம்

**2.1.23** த்[3]விகு[3]ஸ்' ச

த்[3]விகு[3]ஸமாஸமும் (எண்ணுத் தொகையும்) தத்புருஷமாகும். பஞ்சராஜம் (=பஞ்சானாம் ராக்[3]ஞாம் ஸமாஹார:) 'ஐந்து அரசர்கள்'

த்[3]வ்யஹ: (த்[3]வயோ: அஹ்னோ: ஸமாஹார:) 'இரண்டு நாட்கள்'

**2.1.24** த்[3]விதீயா ஸ்'ரித அதீத பதித க[3]த அத்யஸ்த ப்ராப்த ஆபன்னை:

2ஆம் வேற்றுமைச் சொற்கள், ஸ்'ரித (சேர்ந்த, அடைந்த) அதீத (கடந்த), பதித (விழுந்த), க[3]த (சென்ற) அத்யஸ்த (எறிந்த) ப்ராப்த, ஆபன்ன (சேர்ந்த, அடைந்த) ஆகியவைகளுடன் இணைந்து தத்புருஷமாகும்.

கஷ்டஸ்'ரித: (கஷ்டம்ஸ்'ரித:) 'கஷ்டத்தையடைந்தவன்'

காந்தாராதீத: (காந்தாரம் அதீத:) 'அடர்த்தியான காட்டைத் தாண்டியவன்'

நரக பதித: 'நரகத்தில் விழுந்தவன்'

க்[3]ராமக[3]த: 'கிராமத்தையடைந்தவன்'

தரங்க[3]த்யஸ்த: 'அலையில் எறியப்பட்டவன்'

ஸுகப்ராப்த: 'மகிழ்ச்சியடைந்தவன்'

து[3]க்காபன்ன: 'வருத்ததையடைந்தவன்'

இத்தொகைகளில் முதலுறுப்பினர் 2ஆம் வேற்றுமையிலமையும்.

வா: ஸ்'ரிதாதி[3]ஷு க[3]மிக[3]ாம்யாதீ[3]னாமுபஸங்க்[2]யானம்

க[3]மி, க[3]ாமி ஆகியவைகளையும் ஸ்'ரித முதலியவைகளுடன் சேர்த்துக் கூற வேண்டும்.

க்[3]ராமக[3]மீ (=க்[3]ராமம் க[3]மீ)

க்[3]ராமக[3]ாமீ (=க்[3]ராமம் க[3]ாமி)

ஓத[3]ன பு[3]பு[4]க்ஷு: (ஓத[3]னம் பு[3]பு[4]க்ஷு:)

**2.1.25** ஸ்வயம் க்தேன

ஸ்வயம் (தன்) என்ற அவ்யயம் 'க்த' என்ற ஒட்டை இறுதியாகக் கொண்ட சொற்களுடன் சேர்ந்து தத்புருஷமாகும்.

ஸ்வயம் தெ[4]ளதெள பாதெ[3]ள 'தானே அலம்பிக்கொண்ட கால்கள்'

வெளிப்படையாக மாறுதல் நிகழாவிட்டாலும் இவைகள் தொகையாவதால், ஒரே சொற்களாகின்றன. ஒரே ஒரு சுரத்தை (Accent)யும் கொண்டதாகின்றன.

**2.1.26** க[2]ட்'வா க்ஷேபே

இரண்டாம் வேற்றுமையிலமையும் க[2]ட்'வா என்ற சொல்லோடு 'க்த' ஒட்டில் முடியும் சொற்கள் சேர்ந்து, 'இகழ்தல்' க[2]ட்வாரூட[3] : (க[2]ட்'வாம் ஆரூட[3]:) 'முட்டாள்,

கெட்டவழியில் சென்றவன்'

ஆனால் க[2]ட்வாம் ஆரூட[3]: 'கட்டிலில் ஏறியவன்' இங்கு இகழ்ச்சியைக் குறிக்காததால், தொகையாகாது.

க[2]ட்'வாரூட[3]: ஒரு நித்யஸமாஸம். இது சூ. 11க்குப் புறனடை, மற்ற தொகைகள், ஒரு வாக்கியமாகவும் தொகையாகவும் வரமுடியும். நித்யஸமாஸம் தொகையாகமட்டுந்தானமையும் வாக்கியமாகாது.

**2.1.27** ஸாமி

'ஸாமி' என்ற அவ்யயத்துடன் 'க்த'வில் முடியும் சொற்கள் இணைந்து தத்புருஷமாகும்.

ஸாமிக்ருதம் – 'பாதி செய்த'

ஸாமி பீதம் – 'பாதி குடித்த'

ஸமாஸமானதால் ஒரே பதமும் ஒரே சுரமும் கொண்டது.

**2.1.28** காலா:

காலத்தைக் குறிக்கும் சொற்கள் 2ஆம் வேற்றுமையில் நின்று, அத்து டன் 'க்த'வில் முடியும் சொற்கள் சேர்ந்து உருவாக்கும் தொகை தத்புருஷமாகும். (விருப்பாக)

மாஸப்ரமிதஸ் சந்த்ரமா – 'அமாவாசை'

(மாஸம்ப்ரமித) அதாவது மாதத்தை அளக்கத் தொடங்கிய சந்தி ரன்

**2.1.29** அத்யந்தஸம்யோகே

காலத்தைக் குறிக்கும் சொற்கள் 2ஆம் வேற்றுமையிலமைந்து மற்றொரு பெயர்ச் சொல்லுடன் அது சேர்ந்து "இடைவிடாத தொடர்பு" என்ற பொருளைச்சுட்டும்போது (விருப்பாக) தத்புருஷமாகும்.

முஹூர்தஸுக[2]ம் (=முஹூர்தம் ஸுக[2]ம்)

'முகூர்த்த மகிழ்ச்சி'

**2.1.30** த்ருதீயா தத்க்ருதார்தே[2]ன குணவசனேன

3ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொல் குணத்தைக் குறிக்கும் சொல்லுடன் விருப்பாக இணைந்து தொகையாகும். இக்குணமானது அந்த 3ஆம் வேற்றுமைச் சொல்லால் (அதாவது அதை கருவியாகக் கொண்டது) ஆக்கப்பட்டது. மூன்றாம் வேற்றுமைச் சொல் அர்த[2] என்ற சொல்லுடனும் இணைந்து தொகையாகும். இத்தொகைகள் தத்புருஷம் எனப்படும்.

ஸ[1]ங்குலாக[2]ண்ட[3]: (ஸ[1]ங்குலயா க[2]ண்ட[3]:)

"இடுக்கியால் வெட்டப்பட்டது"

த[4]ான்யார்த[2]: (த[4]ான்யேன அர்த[2]:)

'தான்யத்தினால் கிடைத்த பணம்)

ஆனால் அக்ஷ்ணா காண: இது தொகையாகாது.

குருட்டுத்தன்மை.

3ஆம் வேற்றுமைச் சொல்லால் (அதாவது அக்ஷ்ணா 'கண்களால்') ஏற்படவில்லை.

**2.1.31** பூர்வ ஸத்ருஸ1 ஸம ஊனார்த2 கலஹ நிபுண மிஸ்'ர ஸ்லக்ஷ்ணை:

3ஆம் வேற்றுமைச் சொற்கள், பூர்வ (முன்பு) ஸத்3ருஸ1 (போன்றது), ஸம (போன்றது), ஊனார்த2 (குறைந்தது என்ற பொருளைக் கொடுக்கும் சொற்கள்), கலஹ (சண்டை), நிபுண (வல்லுநர்), மிஸ்'ர (கலந்தது), ஸ்லஷ்ண (பண்பட்ட) ஆகிய சொற்களுடன் சேர்ந்து விருப்பாகத் தொகையாகும். அத்தொகை தத்புருஷமாகும்.

மாஸபூர்வ:– (மாஸேனபூர்வ) "ஒரு மாதத்துக்கு முன்பிறந்தவன்"

மாத்ருஸத்3ருஸ1 (மாத்ரா ஸத்3ருஸ1:) "தாயைப் போன்றவன்"

பித்ருஸம: 'தந்தையைப் போன்றவன்"

கார்ஷாபணோனம் – "கார்ஷாபணத்தைவிடக் குறைந்தது"

வாக்கலஹ: "வாய்ச்சண்டை"

வாக்3நிபுண:– "பேச்சில் வல்லுநர்"

திலமிஸ்'ர:– "என்னில் கலந்தது"

ஆசாரஸ்லக்ஷ்ண:– பண்பட்ட நடத்தையுள்ளவன்

வா: பூர்வாதி3ஷு அவரஸ்ய உபஸம்க்2யானம்

'பூர்வ' முதலிய சொற்களுடன் அவர (பின்) என்ற சொல்லும் சேர்க்க வேண்டும்.

மாஸாவர: (மாஸேன அவர:)

ஒரு மாதத்திற்குப் பின் பிறந்தவன் அதாவது ஒரு மாதம் இளையவன்

**2.1.32** கர்த்ருகரணே க்ருதா ப3ஹுலம்

கர்த்தா அல்லது கருவியைக் குறிக்கும் 3ஆம் வேற்றுமைச் சொற்கள் விருப்பாக இணைந்து பலவகையாகத் தொகையாகும் அத்தொகை தத்புருஷம்

அஹிஹத: (=அஹினா ஹத:) (கர்த்தா)

"பாம்பினால் கொல்லப்பட்டவன்"

பரஸு1சி2ன்ன: (பரஸு1னா சி2ன்ன:)

(கருவி) "கோடரியால் வெட்டியது"

ஆனால்

பி4க்ஷாபி4: உஷித: 'பிச்சைக்காக வசித்தான்'

இங்கு 3ஆம் வேற்றுமைச் சொல், காரணத்தைச் சுட்டுகிறது. அதனால் தொகையாகாது.

த3ாத்ரேண த4ான்யம் லூனவான்

அரிவாளால் தான்யத்தை அரிந்தான்

இங்கும் தொகையாகாது (3ஆம் வேற்றுமையில் 'தாத்ர' என்ற சொல் அமைந்திருந்தாலும்)

**2.1.33** க்ருத்யை: அதி4கார்த2வசனே

கர்தாவையோ கருவியையோ சுட்டும் 3ஆம் வேற்றுமைச் சொல் விருப்பாக

'க்ருத்ய' ஒட்டை இறுதியாகக் கொண்ட சொல்லோடு இணைந்து 'மிகைபடப் பேசுதல்' என்ற பொருளில் (அதி[4]கார்த[2] வசனே) தத்புருஷமாகும்.
கர்த்தா
காகபேயா நதீ (=காகை: பேயா=பாதும் யோக்[3]யா)
காகம்கூட மேலிருந்து தண்ணீர் குடிக்கும் அளவுக்கு, அதிகத் தண்ணீர் ஓடும் ஆறு (புகழ்ச்சி)
காகம் மட்டும்தான் தண்ணீர் குடிக்கக் கூடிய அளவுக்குத் தண்ணீர் குறைவாக ஓடும் ஆறு (இகழ்ச்சி)
கரணம்
ப[3]ாஷ்பச்சே[2]த்யானி த்ருணானி ப[3]ாஷ்பேண சேத்[3]யானி = ப[3]ாஷ் பச்சே[2]த்[3]யானி
கண்ணீரினால் வெட்டக்கூடிய புற்கள்

வா: க்ருத்யக்[3]ரஹணே யத்வ்யதோ: க்[3]ரஹணம் கர்தவ்யம்
'யத்', 'வ்யத்' ஆகியவைகளை மட்டும்தான் இங்கு 'க்ருத்ய' ஒட்டு என்று குறிக்கப்பட்டிருக்கிறது.
காகை: பாதவ்யா, இங்கு 'தவ்ய' ஒட்டு வருவதால் தொகையாகாது.
க்ருத்ய ஒட்டுக்கள் – தவ்ய, அனீய (பார்க்க 3.1.95–132)

**2.1.34** அன்னேன வ்யஞ்ஜனம்
'சுவை தரும்' என்ற பொருளைக் குறிக்கும் 3ஆம் வேற்றுமைச் சொல் 'உணவு' என்ற பொருளைச் சுட்டும் மற்றொரு சொல்லோடு சேர்ந்து தொகையாகும் அது தத்புருஷம்.
த[3]த்[4]யோத[3]ன: (=த[3]த்[4]னா உபஸிக்த ஓத[3]ன:)
'தயிரால் சுவையாக்கப்பட்ட சோறு'

**2.1.35** ப[4]க்ஷ்யேண மிஸ்ரீ கரணம்
'கலத்தல்' என்ற பொருளைக் குறிக்கும் 3ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொல் உணவு (ப[4]க்ஷ்ய) என்ற பொருளைக் குறிக்கும் மற்றொரு பெயர்ச் சொல்லோடு விருப்பாகச் சேர்ந்து தொகையாகும். அது தத்புருஷமெனப்படும்.
கு[3]ட[3]த[4]ானா: (கு[3]டே[3]ன மிஸ்ரா த[4]ானா) "வெல்லத்தினால் தயாரிக்கப்பட்ட தான்யம்"

**2.1.36** சதுர்தீ[2] தத[3]ர்த[2] ப[3]லிஹித ஸுக[2] ரக்ஷிதை:
4ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொல் விருப்பாக, அதன் பொருட்டு (தத[3]ர்த[2]) பயன் (அர்த[2]), பலி, நல்லது (ஹித), மகிழ்ச்சி (ஸுக), காப்பாற்றுதல் (ரக்ஷித), ஆகியவைகளுடன் சேர்ந்து தொகையாகும் அத்தொகை தத்புருஷமாகும்.
யூபத[3]ாரு (யூபாய தாரு:) யூபம் செய்வதற்கான மரம்

முடியும் சொற்களோடு விருப்பாக இணைந்து தொகையாகும். அத்தொகை தத்புருஷம்
ஸ்தோகான் முக்த; 'சிறிது விடுபட்டவன்'
அந்திகாத³ாக³த: 'பக்கத்திலிருந்து வந்தவன்'
தூ³ராத³ா³கத: 'தொலைவிலிருந்து''
க்ருச் ச்²ராத் லப்³த⁴: 'கஷ்டப்பட்டு அடைந்தான்'
சூ. 6.3.2,படி 5ஆம் வேற்றுமை உருபு இங்கு கெடவில்லை.

வா: ஸதஸஹஸ்ரௌ பரேண இதி வக்தவ்யம்
ஸ¹த, ஸஹஸ்ர ஆகிய சொற்கள், பர என்ற சொல்லுடன் சேர்ந்து தத்புருஷமாகும்.
ஸ¹தாத்பரே – பரஸ்1ஸ1தம் – நூற்றுக்கு மேற்பட்டது. அதாவது அநேக நூறுகள்
ஸஹஸ்ராத்பரே
'பர' (2.2.31) நிபாதனமானதால், 'ஸ்' இடையில் வருகிறது.

**2.1.40** ஸப்தமீ ஸௌண்டை³:
7ஆம் வேற்றுமைச் சொற்களுடன் ஸௌண்ட முதலிய சொற்கள் இணைந்து தொகையாகும் (தத்புருஷம்)
அக்ஷஸௌண்ட: (அக்ஷேஷு ஸௌண்ட:)
"சூதாட்டத்தில் வல்லவன்"
அக்ஷ தூ⁴ர்த; அக்ஷகிதவ . . . .

**2.1.41** ஸித்³த⁴ ஸு¹ஷ்க பக்வ ப³ந்தை⁴ஸ் ச
7ஆம் வேற்றுமைச் சொற்கள் ஸித்³த⁴.
ஸுஷ்க, பக்வ, ப³ந்த⁴ ஆகிய சொற்களுடன் சேர்ந்து விருப்பாகத் தத்புருஷமாகும்.
ஸாங்காஸ்¹ய ஸித்³த⁴: (ஸாங்காஸ்¹யே ஸித்³த⁴)
ஆதபஸு¹ஷ்க: (ஆதபே ஸு¹ஷ்க:) 'வெய்யிலில் உலர்த்தியது'
ஸ்த²ாலிபக்வ: (பானையில் சமைத்தது)
சக்ரப³ந்த⁴: (சக்கரத்தில் கட்டியது)

**2.1.42** த்⁴வாங்க்ஷேண க்ஷேப:
7ஆம் வேற்றுமைச் சொல் த்⁴வாங்க்ஷ (காகம்) என்ற பொருளைச் சுட்டும் சொற்களுடன் சேர்ந்து 'இகழ்தல்' என்ற பொருளை மறை முகமாக உணர்த்தும்போது தத்புருஷமாகும்.

வா: அர்தே²ன நித்ய ஸமாஸ வசனம்
ஸர்வலிங்க³தா ச வக்தவ்யா.

கே3ாஹிதம் (கே3ாப்ய: ஹிதம்)
'பசுக்களுக்கு நல்லது'
அஸ்'வஸுக2ம் (அஸ்'வேப்4ய: ஸுக2ம்)
"குதிரைகளுக்கு மகிழ்ச்சி தரக்கூடியது"
கே3ாரக்ஷிதம் (கே3ாப்4ய: ரக்ஷிதம்)

**2.1.37** பஞ்சமீ ப4யேன
5ஆம் வேற்றுமைச் சொற்கள் 4பயம் (அச்சம்) என்ற பெயர்ச் சொல்லோடு விருப்பாகச் சேர்ந்து தொகையாகும் அத்தொகை தத்புருஷமெனப் பெயர் பெறும்.
வ்ருகேப்4ய: ப4யம்=வ்ருக ப4யம்
ஓநாயிடமிருந்து பயம்

வா: ப4ய பீ4த பீ4தி பீ4பி4ரிதி வக்தவ்யம்
ப4யம், பீ4த பீ4தி பீ4பி4 ஆகிய சொற்களுடன் என்று அமைய வேண்டும்.
வ்ருக பீ4த:, வ்ருக பி4தி, வ்ருக பீ4

**2.1.38** அபேதே அபோட4 முக்த பதித அபத் ரஸ்தை: அல்பஸ':
அபேத (விலக்கப்பட்ட) அபோட4 'இழுக்கப்பட்ட' முக்த (விடுவி), பதித (விழு), அபத்ரஸ்த (பயப்பட்டு) ஆகிய சொற்கள் சில இடங்களில் விருப்பாக 5ஆம் வேற்றுமைச் சொற்களுடன் இணைந்து தொகையாகும். அது தத்புருஷமெனப்படும்.
ஸுக2ாபேத (ஸுக2ாத் அபேத:) 'மகிழ்ச்சியில்லாத'
கல்பனாபோட4: (கல்பனாயா: அபோட4–'கற்பனையால் இழுக்கப்பட்ட' சக்ர முக்த: (சக்ராத் முக்த:)
'சக்கரத்திலிருந்து விடுதலையடைந்த'
ஸ்வர்க3 பதித: "சுவர்க்கத்திலிருந்து கீழே விழுந்த"
தரங்காபத்ரஸ்த: 'அலைகளால் எறியப்பட்ட' 'அல்பஸ1'
என்ற சொல் இத்தகையதொகை எல்லா இடங்களிலும் காணப்படாதது. ஒரு சில இடங்களில் மட்டுந்தான் இவ்வகையான தொகை உருவாகும் என்று சுட்டுகிறது. ப்ராஸாதாத் பதித; போ4ஜனாத் அபத்ரஸ்த; ஆகியவைகள் தொகையாகாது.

**2.1.39** ஸ்தோக அந்திக தூ3ரார்த2 க்ருச் ச்2ராணி க்தேன
ஸ்தோக (சிறிதளவு குறைவான) அந்திக (பக்கம்) தூ3ரார்த2 ('தொலைவு') என்ற பொருளை உணர்த்தும் சொற்கள் க்ருச்2.ச்2ர (கடினம்) ஆகியவைகள் 5ஆம் வேற்றுமையுருபுகளை இறுதியாகக் கொண்டு, 'க்த' என்ற ஒட்டில் 'அர்த2' என்ற சொல்லுடன் ஆக்கப்படும் தொகை நித்யஸமாஸமாகும். அது எல்லா பால்களிலும் அமையும்.
ப்ராஹ்மணார்த2ம் பய: (ப்3ராஹ்மாணாய இதம்)
"பிராமணனுக்காக (வைக்கப்பட்ட) பால்"

குபே³ரப³லி:-(குபே³ராய ப³லி)
'குபேரனுக்காக பலி'

தீர்த² த்⁴வாங்க்ஷ: (தீர்தே² த்⁴வாங்க்ஷ இவ)
குருகுலத்தில் தங்கிக் கொண்டு அத்யயனம் பண்ணாமல் அங்குமிங்கும் அலையும் மாணவனை இத்தொகையால் குறிப்பிடப்படும்.
தீர்த²காக:, தீர்த² வாயஸ:
ஆனால் தீர்தே² த்⁴வாங்க்ஷ: திஷ்டதி.
தீர்த்தத்தில் காகம் இருக்கிறது.

**2.1.43** க்ருத்யை: ருணே
7ஆம் வேற்றுமைச் சொற்கள் 'க்ருத்ய' ஒட்டைக் கொண்டு ஆக்கப்பட்ட சொற்களுடன் விருப்பாக இணைந்து 'கடன்' என்ற பொருளை மறைமுகமாகச் சுட்டும்போது தத்புருஷமாகும்.
மாஸதே³யம் (மாஸே தே³யம் ருணம்)
("ஒரு மாதத்தில் திருப்பிக் கொடுக்க வேண்டிய கடன்"
'ருணம்' என்ற சொல் கட்டாயமாக நிகழ வேண்டிய செயலைக் குறிக்கும். அதனால், இதே பொருளைச் சுட்டும் மற்ற சொற்களும் இவ்வாறே தொகையாகும்.
பூர்வாஹ்ண கே³யம் ஸாமம் (பூர்வாஹ்ணே கே3யம்)
"முற்பகலில் பாட வேண்டிய ஸாமம்"
ப்ராதரத்⁴யேயோ அனுவாக:
காலையில் படிக்க வேண்டிய அனுவாகம்
ஆனால் மாஸே தே³யா பி⁴க்ஷா.–இது தொகையாகாது.

**2.1.44** ஸம்க்³ஞாயாம்
7ஆம் வேற்றுமைச் சொல் மற்றொரு வேற்றுமைச் சொல்லுடன் கட்டாயமாக இணைந்து ஒரு பெயரைச் சுட்டுமாறு அமையும்போது தத்புருஷமாகும்.
அரண்யேதிலகா: 'காட்டுஎள்' அதாவது இந்த எள்ளிலிருந்து எண்ணெய் எடுக்க முடியாது என்று பொருள்.
அரண்யேமாஷா: வனேகிம்ஸுகா:
எதிர்பார்க்கும் பொருள் இதிலிருந்து கிடைக்காது என்ற பொருளில் இத்தகைய தொகைகள் அமைகிறது.
இத்தொகைகள் 'அலுக்ஸமாஸமாகும்' அதாவது, இத்தொகைகளில் வேற்றுமையுருபு 7ஆம் வேற்றுமையுருபு) கெடாது. (பார்க்க 6.3.9 ஹலதந்தாத் ஸப்தம்யா:ஸம்க்ஞாயாம்)

**2.1.45** க்தேன அஹோராத்ர அவயவா:
7ஆம் வேற்றுமையுருபுகளில் முடியும், பகல், இரவுகளின் பகுதியை (அஹோர

ராத்ராவயவா:)க்குறிக்கும் பெயர்ச் சொற்கள் 'க்த' ஒட்டில் முடியும் சொற்களுடன் சேர்ந்து தத்புருஷம் ஆகும்.
பூர்வாஹ்ணக்ருதம் (பூர்வாஹ்ணே க்ருதம்)
முற்பகலில் செய்தது.
அபராஹ்ணக்ருதம் பிற்பகலில் செய்தது பூர்வராத்ர க்ருதம் முன்னிரவில் செய்தது. ஆனால், அஹனி பு[4]க்தம் பகலில் உண்டது இங்கு தொகையாகாது ஏனென்றால், பகலின் ஒரு பகுதியை இது குறிப்பிடவில்லை. சூ. 2.1.32படி ராத்ரி வ்ருத்தம் (இரவில் நடந்தது) என்ற தொகையாக்க முடியும்.

**2.1.46** தத்ர:
தத்ர 'அங்கு' என்ற அவ்யயம் (5.3.10) 'க்த்'வில் முடியும் சொற்களுடன் சேர்ந்து தத்புருஷமாகும். தத்ரபு4க்தம் – 'உண்டது அங்கே'

**2.1.47** க்ஷேபே
7ஆம் வேற்றுமைச் சொல் 'க்த'ன்வ இறுதியாகக் கொண்ட சொல் லுடன் சேர்ந்து 'இகழ்தல்' என்ற பொருளில் தத்புருஷமாகும்.
அவதப்தே நகுலஸ்தி[2]தம் தவ ஏதத்
சூடான இடத்தில் நிற்கும் கீரியைப் போன்றது இந்த உனது செய்கை. அதாவது, கீரி, அத்தகைய இடத்தில் நிற்க இயலாமல் அங்குமிங்கும் ஓடுமோ அதே போன்று நீயும் திரிகிறாய் என்று பொருள். மன உறுதியின்மையைக் குறிக்க. இத்தொகை பயன்படுத்தப்படுகிறது.
ப[4]ஸ் மனி ஹுதம்–பயனற்ற செயலைச் செய்வதை குறிக்கிறது இத்தொடர். இத்தொகைகளில் வேற்றுமையுருபு கெடாது (6.3.14)

**2.1.48** பாத்ரே ஸமிதாத[3]யஸ்[1] ச
'பாத்ரேஸமித' முதலிய தொகைகளும் 'இகழ்தல்' என்ற பொருளில் தத்புருஷமாகும்.
பாத்ரேஸமித–"உண்ணும்போது மட்டும் ஒன்று சேரல்" அதாவது வேலை செய்வதில் அல்லாமல் உண்ணமட்டும் ஒன்று சேர்தல் என்ற பொருளைச் சுட்டுகிறது இத்தொகை. இவ்வகுப்பைச் சேர்ந்த சில தொகைகளை முந்திய சூத்திரத்தின் படியே தருவிக்கலாம். இதைத் தனியாகக் கூறியிருப்பது ஸ்வரத்திற்காக (Accentation) இவைகளின் முதல் உறுப்பினரின் முதல் அசை உதாத்தமாகும். இவைகள் 'யுக்தாரோஹ' வகுப்பைச் சேர்ந்தவை (பார்க்க (6.2.81)

**2.1.49** பூர்வகால ஏக ஸர்வஜரத் புராண நவகேவலா:
ஸமானாதி[4]கரணே
இரண்டு நிகழ்ச்சிகளைக் குறிக்கும் சொற்கள் சேர்ந்து தொகையாகும்போது, முன்னால் நிகழ்ந்ததைக் குறிக்கும் சொல், ஏக(ஒன்று), ஸர்வ(எல்லாம்), ஜரத்(வயதான), புராண(பழைய, நவ (புதிய), கேவலம்(மாத்திரம் ஒன்று)

ஆகியவைகள் மற்ற பெயர்ச் சொல்லுடன் இணைந்து, இரண்டு சொற்களும் நேரியைபு கொண்டதாக அமையும்போது தத்புருஷமாகும்.
ஸ்நானானுலிப்த:–'குளித்துவிட்டு சந்தனம் பூசிய'
ஏகபி'க்ஷா–ஒரு நாளைக்கு ஒரு தரம் பிட்சை வாங்குவது.
ஸர்வதே[3]வா–எல்லாக் கடவுளும்
ஜரத்[3]த[4]ஸ்தீ–'வயதான யானை'
புராணான்னம்–'பழைய உணவு'
நவாவஸத[2]ம்–புதிய வீடு
கேவலான்னம்–'சோறுமட்டும்'

**2.1.50** தி[3]க்ஸம்க்[2]யே ஸம்க்[3]ஞாயாம்
திசையைக் குறிக்கும் சொற்கள், எண்ணுப் பெயர்கள் ஆகியவை மற்றொரு பெயர்ச் சொல்லுடன் சேர்ந்து, ஒரு பெயரைச் சுட்டும்போது தத்புருஷமாகும்.
பூர்வேஷு காமஸ'மீ (பூர்வாச அஸௌ இஷுகாமஸ'மீ ச)
"இஷுகாமஸமீ என்ற நகரத்துக்குக் கிழக்கே"
ஸப்தர்ஷய: (ஸப்த ச தேருஷய)
'ஏழுரிஷிகள்' ஆனால் உத்தரா வ்ருக்ஷா; பஞ்சப்ராஹ்மணா; இவைகள் பெயர்களல்ல அதனால் தொகையாகா.

**2.1.51** தத்[3]தி[4]தார்தோ[2]த்தரபதஸமா ஹாரே ச
திசையைக் குறிக்கும் சொற்கள், எண்ணுப் பெயர்கள் மற்றொரு பெயர்ச் சொல்லுடன் கீழ்க்கண்ட பொருட்களில், தத்புருஷமாகும் .

அ) தத்[3]தி[4]தார்த[2], தத்தித ஒட்டின் பொருளை உணர்த்தும்போது,
பௌர்வஸ'ாலா (பூர்வஸ்யாம் ஸ'ாலாயாம் ப[4]வ)
பூர்வஸ'ாலா + அ (4.2.107)
கிழக்குப் பக்கத்து அறையில் உண்டான/இருக்கும்.

ஆ) உத்தரபதே–மற்றொரு உறுப்பினர் தொகைக்குப்பின் வரும்போது பூர்வஸாலாப்ரிய: (பூர்வாஸ'ாலா ப்ரியா யஸ்யஸ) கிழக்குப் பக்க அறையை விரும்புவன்) ஏற்கனவே தொகையாக அமைந்த 'பூ ர்வஸ்ாலா'வுடன், 'ப்ரிய': என்ற மற்றொரு உறுப்பினரும் சேர்கிறது.

இ) ஸமாஹார (கூட்டு)
திசையைக் குறிக்கும் சொற்களுடன் ஸமாஹாரம், தொகையாகாது.
தத்திதார்தே: பஞ்சநாபிதி: (பஞ்சானாம் நாபிதானசம் அபத்யம்)
"5 நாவிதர்களுடைய பிள்ளைகள்"
உத்தரப்தே–பஞ்சக[3]வத[3]ன: "5 பசுக்களைத் தானமாகக் கொண்டவன்"
ஸமாஹாரே: பஞ்சகுமாரி – '5 பெண்கள்' (இது நபும்ஸகம் 2.4.17)

**2.1.52** ஸம்க்2யா பூர்வோத்3விகு:

மேலே கூறப்பட்ட சூழலில் ஆக்கப்பட்ட தொகையின் முதலுறுப்பினர் எண்ணுப் பெயராக அமையும்போது த்3விகு என்ற பெயர் பெறும்.

தத்3தி4தார்த2–பஞ்சகபால: (பஞ்சஸு கபாலேஷு ஸம்ஸ்க்ருத:) (4.2.16; 88)

உத்தரபத – பஞ்சநாவப்ரிய: (5.4.99)

ஸமாஹார – பஞ்சமூலி (4.1.21)

**2.1.53** குத்ஸிதானி குத்ஸனை:

பழிப்பு, ஏளனம் ஆகியவைகளைக் குறிக்கும் சொற்கள், பழித்தல், வெறுத்தல் போன்ற சொற்களுடன் சேர்ந்து தத்புருஷம் ஆகும்.

யாக்ஞிக கிதவ:

**2.1.54** பாபாணகே குத்ஸிதை:

பாபு (கெட்ட), அணக (அற்பமான, வெறுக்கத்தக்க) என்ற பொருளை உணர்த்தும் சொற்கள் 'நிந்தித்தல்' போன்ற பொருளை உணர்த்தும் சொற்களோடு சேர்ந்து தத்புருஷமாகும். பாப நாபித: (பாபஸ்1 சாஸௌ நாபிதஸ்1ச) கெட்ட நாவிதன்

அணக குலால: 'நிந்திக்கத் தக்க குயவன்'

**2.1.55** உபமானானி ஸாமான்ய வசன:

உபமானமாக அமையும் சொற்களுடன் மற்றொரு பெயர்ச் சொல் (பொதுவான இரண்டு சொற்களுக்கும் பொதுவான கூறுகளை உணர்த்தும் சொல் (ஸாமான்யவசன:) சேர்ந்து தத்புருஷமாகும்.

ஸ1ஸ்த்ரீ ஸ்1யாமா தேவதத்தா (ஸஸ்த்ரீ இவஸ்1யாமா). இரும்பினாலாக்கப்பட்ட கத்தி (ஸ1ஸ்த்ரீ)யைப் போன்று கருப்பாக இருக்கும் தேவதத்தா.

குமுதஸ்1யேனீ–குமுதத்தைப் போன்ற வெள்ளையான.

**2.1.56** உபமிதம் வ்யாக்4ராதி3பி: ஸாமான்ய அபரயோகே3

உபமேயமாக அமையும் சொற்கள் வ்யாக்4ர (புலி) முதலிய பெயர்ச் சொற்களுடன் விருப்பாக இணைந்து, இரண்டுக்கும் பொதுவாக அமையும் குணத்தை மறைமுகமாக உணர்த்தாமல் இருந்தால், அத்தொகை தத்புருஷமாகும்.

புருஷோ அயம் வ்யாக்4ர: இவ = புருஷவ்யாக்4ர: ''புலியைப் போன்ற மனிதன்'' இங்கு உபமானம் (வ்யாக்4ர), உபமேயம் (புருஷ) ஆகிய இரண்டுக்கும் பொதுவான குணம் அதாவது 'ஸூரத்வம்' குறிப்பிடவில்லை. அதனால் இங்கு தொகையாகும்.

ஆனால், புருஷோ அயம் வ்யாக்4ர இவஸூர: என்று அமையும்போது இது தொகையாகாது.

முக2பத்மம்–தாமரை போன்ற முகமுடைய

**2.1.57** வி ஸேஷணம் விஸேஷ்யேண ப³ஹுலம்

விஸேஷணமாக நிற்கும் சொற்கள் (Qualifier) விஸேஷ்யமாக அமையு சொற்களுடன் (Qualified)இணைந்து பலவகைத் தொகையாகும் அது தத்புருஷமெனப்படும். நீலோத்பலம் (நீலம் ச தத் உத்பலம் ச)

'நீலத்தாமரை' 'அல்லி'

பலவகைகளில் (ப³ஹுலம்) என்ற சொல், நித்ய ஸமாஸம் போன்றவைகளைக் குறிக்கும்.

1) நித்யஸமாஸம்

க்ருஷ்ண ஸர்பம் – 'நல்ல பாம்பு'

இது தொகையாகமட்டுந்தான் அமையும். மற்ற தொகைகளைப் போல், இத்தகைய தொகைகளில் அதன் உறுப்பினர்களைத் தனித் தனியாகப் பிரித்துப் பொருள் கூற இயலாது. லோஹித ஸாலி: 'ஒரு வகை அரிசி'

2) நித்யவ்யாஸ:

சில தொடராகத்தான் நிற்கும், தொகையாகா. ராமோ ஜாமத³க்ன்ய– ''ஜமதக்னியின் பிள்ளையான ராமன்''

3)விகல்பம்

தொகையாகவும் தொடராகவும் சில அமையும் நீலோத்பலம்/நீலம் உத்பலம்

விஸேஷ்யம்–விஸேஷணம் கீழ்க்கண்டவாறு தொகையாகும்.

1)குணத்தைக் குறிக்கும் சொற்கள். செயலைச் சுட்டும் சொற்கள் ஆகியவைகளோடு சேரும் இனத்தைக் குறிக்கும் சொல், விஸேஷ்யமாகும். விஸேஷணமாக வராது.

நீலோத்பலம், பாசகப்³ராஹ்மண:

2) குணத்தைக் குறிக்கும் சொற்களோடு (அமையும் தொகையில்) விஸேஷ்ய விஸேஷணம் நிற்கும் இடத்தைப் பற்றிய கட்டாயமான விதி எதுவுமில்லை.

க²ஞ்சகுப்³ஜ:/குப்³ஜக²ஞ்ஜ:

3) செயலைக் குறிக்கும் சொற்களும் அவ்வாறே

பாசக பாடக:/ பாடக பாசக:

4) குணம் செயல் இவைகளைக் குறிக்கும் சொற்களும் அவ்வாறே அமையும்.

க²ஞ்ஜ பாசக:/பாசக க2ஞ்ஜ:

5)ஸாமான்ய, விஸேஷ ஜாதிகளைக் குறிக்கும் சொற்கள் சேர்ந்து அமையும் தொகைகளில்

விஸேஷ ஜாதி விஸேஷணமாகும்.

ஸிம்ஸபாவ்ருக்ஷ:

6) அயோத்யாநகரீ, காஸீபுரி ஆகிய தொகைகளில் பெயரைக் குறிக்கும் சொற்கள் விஸேஷணமாகும்.

**2.1.58** பூர்வ அபர ப்ரத²ம சரம ஜக⁴ன்ய ஸமான மத்⁴ய மத்⁴யம வீராஸ்' ச

பூர்வ (முதல்), அபர (மற்ற) ப்ரத²ம(முதல்) சரம(இறுதி) ஜக⁴ன்ய (பின்னால்),

கீழ்) ஸமான (ஈடான), மத்ய, மத்யம (நடு) வீர (வீர ன்) ஆகியவைகள் மற்ற சொற்களுடன் விருப்பாகச் சேர்ந்து தத்புருஷமாகும். பூர்வபுருஷ: (பூர்வஸ் ச அஸௌ புருஷஸ்'ச) முதல் மனிதன். முன்னோர் அதாவது, தகப்பன், பாட்டனார், கொள்ளுப்பாட்டனார். அபரபுருஷ:–'மரபில் பின் வருவோர்'

**2.1.59** ஸ்'ரேண்யாத³ய: க்ருதாதி³பி⁴:
ஸ்'ரேணி (வகுப்பு) முதலியவைகள் 'க்ருத' (உருவாக்கு) முதலியவைகளுடன் விருப்பாக இணைந்து தத்புருஷமாகும்.

வா: ஸ்ரேண்யாதி³ஷு ச்வ்யர்த² வசனம் கர்தவ்யம்
'ஸ்ரேணி' முதலியவைகள் 'ச்வி'யின் பொருளை உணர்த்தும்போது அமைய வேண்டும். 'ச்வி'யின் பொருள்–முதலில் இல்லாத ஒன்றை உருவாக்குவது. (அபூ⁴தப⁴ாவ)
ஸ்'ரேணிக்ருதா: (அஸ்'ரேணய: ஸ்'ரேணய: க்ருதா:) ஒரு வகுப்பில் (முதலில் இல்லாதது) அமைப்பது.

**2.1.60** க்தேன நஞ் விஸி'ஷ்டேன அநஞ்
'க்த' ஒட்டால் ஆக்கப்பட்ட சொற்கள் நஞ் (எதிர்மறை) உடன், அநஞ் (உடன்பாடு) சேர்ந்து விருப்பாகத் தொகுத்து தத்புருஷமாகும்.
க்ருதம் (அநஞ்) ச தத் அக்ருதம் (நஞ்) ச க்ருதாக்ருதம் செய்தது செய்யப்படாதது-செய்ததும் செய்யப்படாததும்.
பு⁴க்தா பு⁴க்தம் – உண்டதும் உண்ணாததும்.

வா: க்ருதாபக்ருதானாம் ச உபஸம்க்²யானம்
'க்ருதாபக்ருதம்' முதலியவைகளும் இத்துடன் சேர்க்கப்பட வேண்டும்.
க்ருதாப்க்ருதம் (க்ருதம் ச அபக்ருதம்)
பு⁴க்த விபு⁴க்தம் க³தப்ரத்யாக³தம்

வா: ஸமானாதி⁴கரணாதி⁴ காரே ஸாகபார்
தி²வாதீனாம் உபஸம்க்²யானம் உத்தரபத³லோபஸ்'ச
ஸமானாதிகரண அதிகாரத்தில் ஸ'ாக பார்தி²வ முதலியவைகளும் சேர்க்கப்பட வேண்டும். அவைகளின் இரண்டாவது உறுப்பினர் கெடும்.
ஸ'ாக பார்தி²வ: (ஸ'ாகப்ரதான: பார்தி²வ:)
"தன் உணவில் கறிகாய்ய முக்கியமாகக் கொண்ட அரசன்".
இத்தொகையில் ப்ரத⁴ான என்ற சொல் அதாவது 2வது உறுப்பினர் கெடுகிறது.
குதபஸௌஸ்'ருத: (குதபவாஸா ஸௌஸ்ருத:)
'வாஸஸ்' கெடுகிறது.
அஜாதௌல் ப³லி: (அஜாபண்ய: தௌல்ப³லி) பண்ய கெடுகிறது.

**2.1.61** ஸத் மஹத் பரம உத்தம உத்க்ருஷ்டா: பூஜ்யமானை:

ஸத் (நல்ல) மஹத் (பெரிய), பரம(உயர்ந்த) உத்தம(சிறந்த) உத்க்ருஷ்ட (மேம்பட்ட) ஆகிய சொற்கள் விருப்பாக 'மதிப்புக்குரிய' என்ற பொருளை உணர்த்தும் சொற்களுடன் சேர்த்து தத்புருஷமாகும்.

ஸத்புருஷ: (ஸத்ச அஸௌ புருஷன் ச)

'நல்ல மனிதன்', மஹாபுருஷ;

ஆனால்

உத்க்ருஷ்டா கெ³ள: கர்த்³த³மாத்

எழுந்த பசு சேற்றிலிருந்து

இங்கு 'பசு' பூஜனீய'மாக பயன்படுத்தவில்லை. அதாவது 'உத்க்ருஷ்ட' என்ற சொல்' மரியாதைக்குரிய' என்ற பொருளில் பயன்படுத்தப்படவில்லை. அதனால், இங்கு தொகையாகாது.

**2.1.62** வ்ருத்த³ாரக நாக³குஞ்ஜரை: பூஜ்யமானம்

வ்ருத்தாரக. 'மிகச் சிறந்த' நாக3குஞ்ஜர 'யானை' ஆகிய சொற்களுடன் 'மதிப்புக்குரிய' என்ற பொருளை உணர்த்தும் சொற்கள் சேர்ந்து தத்புருஷமாகும்.

கே³ாவ்ருந்தாரக (கே³ாஸ்¹ ச அஸௌ வ்ருத்தாரகஸ்'ச 'மிகச் சிறந்த பசு'

கே³ாநாக³: அஸ்'வகுஞ்ஜர:

ஆனால் ஸுஷுமோநாக: ஸுஷிம: என்பது யானையின் ஒரு வகை 'மதிப்புக்குரிய' என்ற பொருளை உணர்த்தாததால், இது தொகையாகாது.

**2.1.63** கதர கதமௌ ஜாதி பரிப்ரஸ'னே

ஒரு இனத்தின் (அ) வகுப்பின் (ஜாதிபரிப்ரஸ்1னே) இரண்டில் ஒன்று (கதர), பலவற்றில் ஒன்று (கதம) எது என்ற கேள்வி எழும்பும் வகையில் அமைந்து அத்துடன் மற்றொரு சொல் (ஜாதியைக் குறிக்கும் சொல்) விருப்பாகச் சேர்ந்தால் தத்புருஷமெனப்படும்.

கதரகட⁴: (கதர: கட⁴:) ''இவ்விரண்டு பேர்களில் கடப்பிரிவைச் சேர்ந்தவர் யார்?

கதமகலாப (கதம; கலாப:) இவர்களுள் கலாபப் பிரிவைச் சேர்ந்தவர் யார்?

ஆனால் கதரோ ப⁴வதோ: தே³வத³த்த:

உங்களிருவரில் யார் தேவதத்தன்

கதமோ ப⁴வதாம் தே³வத³த்த

உங்களில் யார் தேவதத்தன்

இவைகள் தொகையாகா தேவதத்த என்ற சொல் ஜாதியைக் குறிக்கும் சொல் அல்ல.

**2.1.64** கிம் க்ஷேபே.

கிம் ''யார், எது'' என்ற சொல், ''ஏளனம், இகழ்ச்சி'' என்ற பொருளில், வேறு வேற்றுமைச் சொற்களுடன் இணைந்து தத்புருஷமாகும்.

கிம்ராஜா (குத்ஸித: ராஜா) கெட்ட அரசன் கிம்ஸகா[2] கெட்ட நண்பன்
ஆனால் கோ ராஜா பாடலிபுத்ரே, பாடலிபுத்திரத்தில் யார் அரசன்
இங்கு 'ஏளனம், இகழ்ச்சி' என்ற பொருளைச் சுட்டாததால், இத்தொடர் தொகையாகாது.

**2.1.65** போட்'ா யுவதி ஸ்தோக கதிபய
க்[3]ருஷ்டி[1] தே[4]னு வஸ'ா வேஹத், ப[3]ஷ்கயணீ
ப்ரவக்த்ரு, ஸ்'ரோத்ரிய அத்[4]யாபக தூ[4]ர்தை: ஜாதி:
இனத்தைக் குறிக்கும் வேற்றுமைச் சொல் போட'ா (அலி), யுவதி (சிறிய பெண்பால் விலங்கு), ஸ்தோக (சிறிது), கதிபய (சில), க்[3]ருஷ்டி (ஒரே ஒரு கன்றைப் பெற்ற பசு), தே[4]னு (கறவைப் பசு), வஸ'ா (மலட்டுப் பசு), வேஹத் (க'ருச்சிறைவுறும் பசு), ப[3]ஷ்காயணி (முழு வளர்ச்சியடைந்த கன்றை உடைய பசு), ப்ரவக்த்ரு (பிரகடனம் பண்ணுபவன்), ஸ்'ரோத்ரிய (வேதம் படிக்கும் பிராம்மணன்), அத்[4]யாபக (ஆசிரியர்), தூ[4]ர்த(திறமையுள்ள), ஆகிய சொற்களுடன் சேர்ந்து தத்புருஷமாகும்.
இப[4]போடா (இப[4]ா ச அஸௌ சபோடா ச)
இப[4]யுவதி, அக்னி ஸ்தோக ''சிறு நெருப்பு'' .....
கடப்ரவக்தா/ஸ்ரோத்ரிய:/தூ[4]ர்த .....
ஆனால், தே[3]வத[3]த்த: ப்ரவக்தா: இங்கு ஜாதியைக் குறிக்காததால் தொகையாகாது.

**2.1.66** ப்ரஸ'ம்ஸா வசனைஸ்'ச
இனத்தைக் குறிக்கும் வேற்றுமைச் சொல் 'புகழ்தல்' என்ற பொருளைக் குறிக்கும் சொற்களுடன் இணைந்து தத்புருஷமாகும்.
ப்ரஸ'ம்ஸாவசனங்கள் (புகழ்தல்) மதல்லிகா போன்ற சொற்கள். இச்சொற்கள் ஏனைய பாற் சொற்களோடு இணைந்து பயன்படுத்தும்போதும், அச்சொற்கள் தனது பாலையே உணர்த்தும்.
கே[3]ாப்ரகாண்டம் (கோஸ்'ச அஸௌ ப்ரகாண்டம் ச) 'சிறந்த பசு'
அஸ்'வமதல்லிகா 'அழகிய குதிரை'

**2.1.67** யுவா க[2]லதி பலித ப[3]லின ஜரதீபி[4]:
யுவன், என்ற வேற்றுமைச் சொல் க[2]லதி 'வழுக்கை விழுந்த' பலித 'நரைத்த முடியுடைய', ப[3]லின 'சுருக்கம் விழுந்த' ஜரதி 'வ்யதான' ஆகிய சொற்களுடன் சேர்ந்து தத்புருஷமாகும்.
யுவக[2]லதி (யுவாக[2]லதி) ''வழுக்கை விழுந்த இளைஞன்''
யுவக[2]லதீ (யுவதி: க[2]லதி) ''வழுக்கை விழுந்த இளம்பெண்''
யுவபலித:, யுவபலிதா:
யுவப[3]லின:, யுவப[3]லினா
யுவஜரன், யுவஜரதீ

**2.1.68** க்ருத்ய துல்யாக்²யா அஜாத்யா
'க்ருத்ய' ஒட்டுக்களோடு ஆக்கிய சொற்கள் துல்ய (ஈடு)போன்ற சொற்கள் ஜாதியைக் குறிக்காத சொற்களுடன் சேர்ந்து தத்புருஷமாகும்.
பே⁴ாஜ்யோஷ்ணம் (போ⁴ஜ்யம் ச தத் ஷ்ணம் ச)
"உண்ணத் தகுந்த சூடுடைய உணவு"
துல்யஸ்'வேத: (துல்யஸ்'ச அஸௌ ஸ்'வேத:) தகுந்த/சரியான வெளுப்பு

**2.1.69** வர்ண: வர்ணேன
நிறத்தைக் குறிக்கும் வேற்றுமைச் சொல், நிறத்தைக் குறிக்கும் மற்றொரு சொல்லோடு சேர்ந்து தத்புருஷமாகும். க்ருஷ்ணஸாரங்க: (க்ருஷ்ணஸ்' ச அஸௌ ஸாரங்கஸ்' ச)
கருப்பு மான்

**2.1.70** குமார: ஸ்'ரமணாதி³பி:
குமார (இளைஞன்,) ஸ்'ரமண 'துறவி' முதலியவைகளுடன் சேர்ந்து தத்புருஷமாகும்.
குமாரஸ்'ரமணா (குமாரீ ச அஸௌ ஸ்'ரமணா ச) இளம் துறவி (பெண்பால்)
இவ்வகுப்பைச் சேர்ந்த அத்⁴யாபக முதலிய சொற்கள் ஆண்பால், பெண்பால் இரண்டுமாகும். ஸ்'ரமணா, ப்ரவ்ராஜிதா. முதலியவைகள் குமாரீயோடுதான் தொகையாகும்.

**2.1.71** சதுஷ்பாதே³ா க³ர்பி⁴ண்யா
நாலுகால் பிராணிகளைக் குறிக்கும் பெயர்ச் சொற்கள் க³ர்பி⁴ணி என்ற சொல்லுடன் சேர்ந்து தத்புருஷமாகும்.
அஜா க³ர் பி⁴ணீ (அஜா ச, அஸௌ க்³ர்பி⁴ணீ ச) 'சினையோடு'

வா: சதுஷ்பாத் ஜாதிரிதி வக்தவ்யம்
ஒரு வகுப்பைச் சேர்ந்த நாலுகால் பிராணிகள் என்று கூற வேண்டும்.
காலாக்ஷி க³ர்பி⁴ணி – தொகையாகாது
காலாக்ஷி ஜாதியைச் சேர்ந்த சொல் அல்ல.
அதனால் தொகையாகாது.
ப்³ராஹ்மணீ க³ர்பி⁴ணீ
'ப்³ராஹ்மணீ' நாலுகால் பிராணி யல்லாததால் தொகையாகாது.

**2.1.72** மயூரவ்யம்ஸகாத³யஸ்'ச
'மயூரவ்யம்ஸக' முதலியவைகளும் தத்புருஷமாகும் மயூரவ்யம்ஸக (மயூரஸ்'சாஸௌ. வ்யம்ஸக)
'வஞ்சகமான மயில்'

**2.2.1** பூர்வ அபர அத[4]ர உத்தரம் ஏகதே[3] ஸின'ா ஏகாதி[4]கரணே. பூர்வ (முன்), அபர(பின்), அத[4]ர (கீழ்), உத்தர ( மேல்) ஆகியவை; பல பகுதிகளைக் கொண்ட ஒரு பொருளைக் குறி க்கும் மற்றொரு சொல்லோடு இணைந்து தத்புருஷஸமாஸமாகும்.

அதாவது அவயவி (ஏகதே[3]ஸி'ன்) (அவயங்களைக் கொண்டது) உடல், வேற்றுமையுருபுகளுடன் சேர்த்து, பூர்வ, அவர. . . . ஆகிய சொற்களுடன் தத்புருஷ ஸமாஸத்தை உருவாக்கும்.

பூர்வம் + காயஸ்ய = பூர்வகாய: உடலில் முன்பகுதி அபரகாய; உத் தரகாய

**2.2.2** அர்த்[3]த[4]ம் நபும்ஸகம்

அர்த்[3]த[4]ம் (பாதி) என்ற சொல்லை அஃறிணையாக பயன்படுத்தும்போது, பல பகுதிகளைக் கொண்ட ஒரு பொருளைக் குறிக்கும் சொல்லுடன் சேர்ந்து தத்புருஷமாகும்.

அர்த்[3]த[4]ம் பிப்பல்யா:=அர்த்[3]த[4]பிப்பலி அரை பிப்பலி ஆனால் க்[3]ராமஸ்ய அர்த்[3]த[4]:=க்ராமார்த்[3]த: க்[3]ராம: ஆண்பால்

**2.2.3** த்[3]விதீய த்ருதீய சதுர்த[2] துர்யாணி அன்யதரஸ்யாம்

பல பகுதிகளைக் கொண்ட ஒரு பொருளைக் குறிக்கும் சொல்லுடன், 2, 3, 4 ஆம் வேற்றுமைச் சொற்கள் (விருப்பாக) இணைந்து தத்புருஷஸமாஸமாகும்.

த்[2]விதீயம் பி[4]க்ஷாயா:=த்[3]விதீய பி[4]க்ஷா 2வது பிட்சை அல்லது பி[4]க்ஷாத்[2]விதீயம் (ஷஷ்டீதத்புருஷம்)

வா: . துரீய ஸப்[3]த[3]ஸ்யாபி இஷ்யதே

துரீயம் என்ற சொல்லும் இதில் அடங்கும் துரீயம் பி[4]க்ஷாயா:=துரீய பி[4]க்ஷா/ பி[4]க்ஷாதுரீயம்

ஆனால் த்[3]விதீயம் பி[4]க்ஷாயா: பி[4]க்ஷுகஸ்ய

த்விதீயம் பி[4]க்ஷாணாம் ஆகியவைகளைத் தொகுக்க முடியாது.

**2.2.4** ப்ராப்த ஆபன்னே ச த்[3]விதீயா

ப்ராப்த, ஆபன்ன (அடைதல்) ஆகிய சொற்கள் 2ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொல்லுடன் இணைந்து விருப்பாக தத்புருஷஸமாஸமாகும்.

ப்ராப்த: ஜீவிகாம் = ப்ராப்த ஜீவிக:, பிழைக்க வழி அடைந்தவன் ஆபன்ன ஜீவிக:

**2.2.5** காலா: பரிமாணினா

காலத்தைக் குறிக்கும் சொற்கள், அவற்றின் அளவைக் குறிக்கும் சொற்களுடன் சேர்ந்து தத்புருஷஸமாஸமாகும்.

மாஸ ஜாத: = மாஸ: ஜாதஸ்ய = பிறந்து ஒரு மாதமாகிய

**2.2.6** நஞ்

எதிர்மறை உருபுடன் (நஞ்) பெயர்ச் சொல் தொகுக்கப்பட்டு தத்புருஷமாகும். அதாவது எதிர்மறை தத்புருஷமாகும்.

நப்$^{3}$ராஹ்மண:=அப்$^{3}$ராஹ்மண: 'பிராம்மணனல்லாதவன்' அஸத்யம்–உண்மையல்லாத

வா: நஞோ ந லோப: திஙி க்ஷேபே

க்ஷேப (பழித்தல், திட்டுதல்) என்ற பொருளைக் குறிக்கும் 'திங்' ஒ டு அதாவது வினைச் சொல்லோடு தொகும்போது 'நஞ்' என்ற ஒ ட்டின் 'ந' கெடும்.

அபசஸி த்வம் ஜால்ம

சரியாக நீ கெட்டவனே

சமைக்கவில்லை

அபசஸி = ந + பசஸி

ஓ கெட்டவனே நீ சரியாகச் சமைக்கவில்லை

**2.2.7** ஈஷத் அக்ருதா

ஈஷத் (கொஞ்சம், சிறிதளவு) என்ற அவ்யயம் 'க்ருத்' என்ற ஒட்டில் முடியாத பதத்தோடு தொகுக்கப்பட்டு தத்புருஷமாகும்.

வா: ஈஷத் குணவசனேன இதி வக்தவ்யம்

'ஈஷத்' குணத்தைக் குறிக்கும் சொல்லுடன் அதாவது அடைச்சொல் லுடன் என்று கூறவேண்டும்.

ஈஷத் கட$^{3}$ார:–சிறிது கர்வம் படைத்தவன்

ஆனால்

ஈஷத் க$^{3}$ார்க்$^{3}$ய: தொகையாகாது.

**2.2.8** ஷஷ்டீ

ஆறாம் வேற்றுமைப் பெயர்ச் சொல் மற்றொரு பதத்தோடு சேர்ந்து தத்புருஷமாகும்.

இத்தொகை ஷஷ்டீ தத்புருஷம் எனப்படும்.

ராக்ஞ: (6) புருஷ:=ராஜபுருஷ:

அரசனின் ஆள்

வா: க்ருத் யோக$^{3}$ா ச ஷஷ்டீ ஸமஸ்யத இதி வக்தவ்யம் 'க்ருத்' ஒட்டினால் ஆக்கப்பட்ட சொற்களும் 6ஆம் வேற்றுமைச் சொற்களுடன் தொகுமென்று கூற வேண்டும்.

இத்$^{4}$ம ப்ரவ்ரஸ்'சன:

ப்ரவ்ரஸ்ச்யதே அனேன=ப்ரவ்ரஸ்'சன; (2.3.65) 'விறகு வெட்டும் கோடாரி'

**2.2.9** யாஜகாதி³பி⁴ஸ்¹ ச

யாஜக முதலிய சொற்களுடன் ஆறாம் வேற்றுமைச் சொற்கள் சேர்த்து தத்புருஷ ஸமாஸமாகும்.

ப்³ராஹ்மண யாஜக:-ப்³ராஹ்மணஸ்ய யாஜக:

பிராம்மணனுக்கு யாகம் செய்விப்பவன் யாஜக/பூஜக/பரிசாரக/பரிஷேஷக/ ஸ்னாதக/அத்யாபக/உத்ஸாதக/உத்வர்தக/ஹோத்ரு/போத்ரு/ப⁴த்ரு/ ரத²க³ணக/பத்திகணக ஆகியவைகள். யாஜகாதி வகுப்பைச் சேர்ந்தவை.

இவைகள் 'த்ருச்' இல்லது 'அக' என்ற ஒட்டை இறுதியாகக் கொண்டவை. சூ. 16இன்படி 6ஆம் வேற்றுமைச் சொல் முதல் உறுப்பினராக அமைந்தால், இச்சொற்கள் அத்துடன் சேர்ந்து தொகையாகா. அதனால், இச்சூத்திரம், 16ஆம் சூத்திரத்துக்குப் புறனடையாக முதலிலேயே கூறப்பட்டிருக்கிறது.

வா: தத்ஸ்தை²ஸ்¹ ச கு³ணை; ஷஷ்டீ ஸமஸ்யத இதி வக்தவ்யம்.

ஒரு பொருளிடம் (இயற்கையாக) காணப்படும் குணத்தைக் குறிக்கும் சொல், 6ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொல் (அதாவது அப்பொருளைக் குறிக்கும் சொல்)லோடு தொகுக்கப்பட்டு ஷஷ்டீ தத்புருஷமாகும்.

சந்த³ன க³ந்த⁴:- சந்த³னஸ்ய க³ந்த⁴: சந்தனத்தின் மணம்

வா: கு³ணோத்தரேண தரலோபஸ்¹ச இதி வக்தவ்யம்

ஒப்பைக் குறிக்கும் சொல் ஒரு உறுப்பினராக நின்று அதன் ஒட்டு (அதாவது 'தர' ஒப்பை உணர்த்தும் ஒட்டு) கெட்டும், இத்தொகை ஆக்கப்படும் என்று கூறவேண்டும்.

ஸர்வேஷாம் ஸ்¹வேததர:-ஸர்வஸ்¹வேத:

எல்லாவற்றையும் காட்டிலும் வெள்ளையானது

இவ்வார்த்திகம், அடுத்த சூத்திரத்துக்கு புறனடையாக முதலிலேயே கூறப்பட்டிருக்கிறது. அடுத்த சூத்திரம் இவ்வகையான தொகை ஆக்குவதற்குத் தடை விதிக்கிறது.

**2.2.10** ந நிர்த்³த⁴ாரணே

தனியாகப் பிரித்துக் கூறும் (நிர்த்³த⁴ாரண) வகையில் அமைந்த 6ஆம் வேற்றுமைச் சொற்களோடு மற்றொரு பதம் சேர்ந்து தொகையாகாது.

ந்ருணாம் (6) ஸ்¹ரேஷ்ட:

மனிதர்களுள் சிறந்தவன்

க்ஷத்ரிய: மனுஷ்யாணாம் ஸூரதம:

க்ஷத்திரியன் மனிதர்களுள் சிறந்த ஸூரன்

வா: ப்ரதிபத³வித⁴ானா சஷஷ்டீ² ஸமஸ்யத இதி வக்தவ்யம்

சூ. 2.3.50இல் விதிக்கப்பட்ட 6ஆம் வேற்றுமைச் சொற்களைத் தவிர மற்ற சூத்திரங்களில் சிறப்பாகக் கூறப்பட்ட 6ஆம் வேற்றுமைச் சொற்கள் ப்ரதிபதவிதானமெனக் கருதப்படும். இத்தகைய சொற்கள் தொகையாகா. ஸர்பிஷோ க்[3]ஞானம் (2.3.51)படி இங்கு 6ஆம் வேற்றுமைச் சொல் கரணத்தின் பொருளைக் குறிக்கிறது. 'க்[3]ஞா' என்ற வினைக்குச் செயல் என்ற பொருள். இத்தொடரின் பொருள் "நெய்யைக் கருவியாகக் கொண்ட செயல்". இது தொகையாவதற்கு 2.3.51 தடை விதிக்கிறது.

**2.2.11** பூரண குண ஸுஹிதார்த[2] ஸத் அவ்யய தவ்ய, ஸமானாதி[4]கரணே. 6ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொல் கீழ்க்கண்ட சொற்களுடன் சேர்ந்து தத்புருஷ ஸமாஸமாகாது.

1. பூரண (முறைமை எண்)
ச[2]ாத்ராணாம் பஞ்சம:
மாணவர்களுன் ஐந்தாவது

2. கு[3]ணம் (இயல்புப் பண்பு, இயல்பு குணம்)
காகஸ்ய (6) கார்ஷ்ண்யம்
காகத்தின் கருப்பு

3. ஸுஹிதார்த[2] 'மனநிறைவு' என்ற பொருளை உணர்த்தும் சொற்கள்.
ப[2]லானாம்(6) ஸுஹித:–
பழங்கள் த்ருப்தியடைந்த
பழங்களினால் த்ருப்தியடைந்த

4. "ஸ'த்" தில் முடியும் இடைச் சொற்கள்
(ஸ'த்ரு, ஸ'ானச்)
ப்ராஹ்மணஸ்ய(6) குர்வன்/குர்வாண
பிராமணனுக்குச் செய்யும்

5. அவ்யயம்
ப்ராஹ்மணஸ்ய(6) க்ருத்வா
பிராமணனுக்குச் செய்துவிட்டு

6. 'தவ்ய'வில் முடியும் சொற்கள்
ராக்[3]ஞ:(6) கர்தவ்யம்
அரசனின் கடமை

7. ஸமானாதி[4]கரண
ஒரே மாதிரியான அமைப்பைக் கொண்ட தொடர்பு
பாணினே:(6) ஸூத்ர காரஸ்ய(6)

பாணினியின் சூத்திரம் படைத்தவரின்
சூத்திரம் படைத்த பாணினியின்

**2.2.12** க்தேன ச பூஜாயாம்

மதிப்பு, மரியாதை(பூஜா) என்ற பொருளை உணர்த்தும். 'க்த' ஒட்டினால் ஆக்கப்பட்ட சொற்கள். 6ஆம் வேற்றுமைச் சொற்களோடு சேர்ந்து தொகையாகா.

ராக$^{3}$ஞாம்(6) மத:/பு$^{3}$த்$^{3}$த$^{4}$:/பூஜித:
அரசனால் மதிக்கப்பட்டவன்
ஆனால்
ச$^{2}$ாத்ரஸ்ய ஹஸிதம் = ச$^{2}$ாத்ரஹஸிதம்

**2.2.13** அதி$^{4}$கரண வாசினஸ்$^{1}$ ச

ஒரு நிகழ்ச்சி நடக்கும் இடத்தைக் குறிக்கும் 'க்த' என்ற ஒட்டில் முடியும் சொற்கள் 6ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொல்லோடு சேர்ந்து தொகையாகாது.

இதம் ஏஷாம்(6) ஆஸிதம்
இது அவர்களுடைய உட்கார்ந்த இடம்

**2.2.14** கர்மணி ச

6ஆம் வேற்றுமைச் சொல் கர்மன். அதாவது செயப்படுபொருளாக அமைந்திருந்தால் தொகையாகாது.

2.3.8இன்படி கர்மன் 6ஆம் வேற்றுமையில் வரலாம். அவ்வாறு வரும் 6ஆம் வேற்றுமைச் சொல் தொகையாகாது என்று கூறுகிறது இச்சூத்திரம்.

விசித்ரா ஸூத்ரஸ்ய க்ருதி: பாணினினா
ஆஸ்$^{1}$சர்யோ க$^{3}$வாமதோ$^{3}$ஹோ அகோ$^{3}$ பாலகேன

**2.2.15** த்ருச் அகாப்$^{4}$யாம் கர்தரி

'த்ருச்', 'அக' ஆகிய ஒட்டுக்களை இறுதியாகக் கொண்ட சொற்கள். அவைகளின் கர்த்தாவைக் குறிக்கும் சொற்கள் 6ஆம் வேற்றுமையில் நிற்கும்போது இவையிரண்டும் தொகையாகாது.

ப$^{4}$வத: ஸாயிகா
உங்கள் உறங்கும்முறை

**2.2.16** கர்தரி ச

'த்ருச்', 'அக' ஆகிய ஒட்டுக்களை இறுதியாகக் கொண்ட சொற்கள் கர்த்தாவை உணர்த்தும்போதும் 6ஆம் வேற்றுமைச் சொல் அவைகளோடு தொகாது.

'த்ருச்' ஒட்டினால் ஆக்கப்படும் சொற்கள் கர்த்தாவாகத்தான் எவ்வோதுமே நிற்கும். அதாவது, 'த்ருச்' கர்த்தாவாக்கும் ஒட்டு (Agent Marker) அதனால் இச்சூத்திரம் 'அக' என்ற ஒட்டைத்தான் குறிப்பிடுகிறது.

அபாம்(6) ஸ்ரஷ்டா
தண்ணீரைப் படைத்தவன்
ஒதனஸ்ய(6) போஜக: சோறு சாப்பிடுபவன்

**2.2.17** நித்யம் க்ரீட³ாஜீவிகயோ:
"விளையாட்டு", 'பிழைப்பு' ஆகிய பொருட்களை உணர்த்தும் 'அக' என்ற ஒட்டில் முடியும் சொற்கள். 6ஆம் வேற்றுமைச் சொற்களோடு சேர்ந்து கட்டாயமாக தத்புருஷஸமாஸமாகும்.
உத்³த³ாலக புஷ்ப ப⁴ஞ்ஜிகா=புஷ்பாணாம் ப⁴ஞ்ஜிகா
புஷ்ப ப⁴ஞ்ஜிகா=உத்³த³ாலகானாம் புஷ்ப ப⁴ஞ்ஜிகா=உத்³த³ாலக புஷ்ப பஞ்ஜிகா.
ஒருவித விளையாட்டு. இதில் உத்தாலகம் என்ற பூக்கள் நசுக்கப்படும்.
பிழைப்பு–த³ந்தலேக²க: பல் வைத்தியர் ஆனால் ஒத³னஸ்ய பே⁴ாஜக:

**2.2.18** குக³தி ப்ராத³ய:
கு(அவ்யயம்) "கெட்ட,"
க³தி வகுப்பைச் சேர்ந்த சொற்கள், (இடைச் சொற்கள்), ப்ர (Prepositions) ஆகியவைகள் 6ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொற்களோடு சேர்ந்து கட்டாயமாகத் தத்புருஷஸமாஸமாகும்.
1. குத்ஸித: புருஷ:=குபுருஷ: கெட்ட மனிதன்
2. உரரீக்ருதம்–ஏற்றுக் கொள்ளப்பட்டது
3. ப்ராத³ய – து³ஷ்புருஷ: "கெட்ட மனிதன்"
ஸுபுருஷ: 'நல்ல மனிதன்', அதிப்³ராஹ்மண: 'சிறந்த பிராமணன்' . . . .

வா: ப்ராத³யோ க³தாத்³யர்தே² ப்ரத²மயா
'ப்ர' ஆகியவைகள் க³த 'கடந்த' என்ற பொருளை உணர்த்தும்போது முதல் வேற்றுமை பெயர்ச் சொல்லுடன் சேர்ந்து தொகையாகிறது.
ப்ரக³த: ஆசார்ய:=ப்ராசார்ய: 'சிறந்த ஆசிரியர்'

வா: அத்யாத³ய: க்ராந்தாத்³யர்தே² த்²விதீயயா
'அதி' முதலியவைகள் க்ராந்த 'மேற்பட்ட' போன்ற பொருளைக் குறிக்கும்போது 2ஆம் வேற்றுமைச் சொல்லோடு சேர்ந்து தொகையாகும்.
அதிக்ராந்த: க²ட்¹வாம்=அதிக²ட்வ:
கட்டிலுக்குத் தேவையில்லாமல்.

வா: அவாத³ய: க்ருஷ்டாத்³யர்தே² த்ருதீயயா.
'அவ' முதலிய சொற்கள் க்ருஷ்ட 'அழுதல்' போன்ற பொருட்களை உணர்த்தும்போது 3ஆம் வேற்றுமைச் சொற்களுடன் தொகுத்து ஒரு தொகையாகும்.
அவக்ருஷ்ட: கோகிலயா = அவ கோகில:
குயிலின் கூவுதலால் அறிவிக்கப்பட்டது. அதாவது வசந்தருது

வா: பர்யாத்[3]யோ க்[3]லானாத்[3]யர்தே[2] சதுர்தீ[2]

'பரி' முதலியவைகள் 'சோர்வுற்ற' முதலிய பொருட்களில் 4ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொல்லுடன் சேர்ந்து தொகையாகும்.

பரிக்[3]லான: அத்[4]யயனாய = பர்யத்[4]யயன:
படிப்பிலிருந்து களைப்புற்ற
அலம் குமார்யை=அலம்குமாரி:
பெண்ணுக்குப் பொருத்தமானவன்

வா: நிராத[3]ய: க்ராந்தாத்[3]யர்தே[2] பஞ்சம்யா

'நிர்' முதலிய சொற்கள் அப்பாற்பட்டன முதலிய பொருட்களை உணர்த்தும்போது 5ஆம் வேற்றுமைச் சொற்களுடன் சேர்ந்து தொகையாகும்.

நிஷ்க்ராந்த: கௌஸாம்ப்யா=நிஷ்கௌஸாம்பி:
"கௌஸாம்யியிலிருந்து வெளிக் கிளம்பியவன்"

வா: இவேனஸஹ விப[4]க்த்யலோப: பூர்வபத[3] ப்ரக்ருதிஸ்வரத்லம் ச வக்தவ்யம்

"இவ" போல 'போன்று' என்ற சொல்லுடன் தொகையாகும் போது, வேற்றுமையுருபுகள் கெடா. அத்தொகையின் முதல் உறுப்பினரின் ஒலியழுத்தமும் மாறாது. வாஸஸீ இவ "இரண்டு உடைகளைப் போல" முதல் உறுப்பினர் உதாத்தம் (6.1.197)

வா: ப்ராதிப்ரஸங்கே[3] கர்மப்ரவசனீயானாம் ப்ரதிஷேதே[4]ா வக்தவ்ய:

'ப்ர' முதலியவைகள் கர்மப்ரவசனீயமானால், தொகையாகாது வ்ருக்ஷம் ப்ரதி வித்[3]யோததே வித்[3]யுத்[3]ஸாது[4]: தேவத[3]த்த: மாதரம் ப்ரதி

**2.2.19** உபபதம் அதிங்

மூவிடப் பெயர்களின் உருபுகள் ஈறாக நிற்காத (அதிங்) உபபதங்களோடு பெயர் சொற்கள் கட்டாயமாக தொகுக்கப்பட்டு தத்புருஷஸமாஸமாகும்.

கும்ப[4]ம் + க்ரு + அ (3.2.1) = கும்ப[4]கார: 'குயவன்' ஆனால் .
ஏதா[4]ன் ஆஹாரக: வ்ரஜதி

'ஸுப்ஸுபா'வின்படி, வினைச் சொற்களுடன் தொகையாகும் வாய்ப்பு இல்லை. அப்படியானால், இந்தச் சூத்திரம் கூறும் 'அதிங்' என்பதைப் பற்றிய ப்ரச்னையேயில்லை. அதனால், இவ்விதியின் தேவையில்லையயென்ற வினா எழும்பலாம். இந்த விதிக்கும், இதற்கு முந்திய விதிக்கும் 'ஸுப்ஸுபா' விதி பயன்படுத்தப்படக்கூடாது என்பதுதான் விடை. இந்த விதியிலிருந்து, ஒரு பரிபாஷா சூத்திரம் எழுகிறது. 'அதாவது' வேற்றுமையுருபுகளோ, பெண்பாலாக்கும் ஒட்டுக்களோ. 'க்ருத்' ஒட்டினால் ஆக்கப்பட்ட சொற்களுடன் இணைக்காமலேயே (இணைப்பதற்கு முன்பே) க்ருத் ஒட்டுகளாலாக்கப்பட்ட அடிச் சொல் கதி, காரக, உபபதங்களோடு சேர்ந்து தொகையாகும் அதனால் 'ஸுப்ஸுபா'வின் தேவையேயில்லை.

க³மேம ஜானதோ க்³ருஹான்
க³ம் + லிங் = மஸ் = க³ம் – ம 0 (3.4.99), யாஸுட், 'ஸ்' கெடுதல், அங்,
யா → இய், குண, 'ய்' கெடுதல் = க³மேம.

வசி
மந்த்ரம் வோசேமாக்³னயே

வித்³
விதே³யம் ஏனாம் மனஸி ப்ரவிஷ்ட¹ாம்

ஸ்கி¹
வ்ரதம் சரிஷ்யாமி தச்¹ச²கே¹யம்
ருஹி
ஸ்வர்க³ம் லோகமாருஹேயம்
வா: த்³ருஸே¹ ரக்³ வக்தவ்ய
த்³ருஸ் உடனும் அக் சேர்க்க வேண்டும்.
பித¹ரம் த்³ரு¹ஸே¹யம் மாத¹ரம் ச

**3.1.87** கர்மவத் கர்மணா துல்யக்ரிய:
ஒருவினையின் செயலோடு கருத்தாவுக்கு எத்தகைய தொடர்பு உள்ளதோ அதற்குக் சமமான தொடர்பு, செயப்படு பொருளாக அது வரும்போதும் உணர்த்தினால், அது கர்மவத்கர்த்தா எனப்படும்.
இது தற்சுட்டு வினையைக் குறிக்கிறது.
தே³வத³த்த: க¹ாஷ்ட²ம் பி⁴னத்தி
தேவதத்தன் கட்டையைப் பிளக்கிறான்

இதில் க¹ாஷ்ட²ம் செயப்படுபொருள்
க¹ாஷ்ட²ம் ஸ்வயமேவ பி⁴த்³யதே
கட்டை தானாகவே உடைத்துக் கொள்கிறது.
இதற்கு முந்திய வாக்கியத்தில் செயப்படுபொருளாக நின்ற
க¹ாஷ்ட²ம் இந்த வாக்கியத்தில் கருத்தாவாக நிற்கிறது.
இதற்கு முந்திய வாக்கியத்தைச் (செய்வினை) செயப்பாட்டு வினை யாக மாற்றியமைக்கும்போது
தே³வத³த்¹தே¹ன க¹ாஷ்ட²ம் பி⁴த்³யதே
தேவதத்தனால் கட்டை உடைக்கப்பட்டது.
செயப்பாட்டு வாக்கியத்திலும், தற்கட்டு வாக்கியத்திலும் நிற்கும் வினை, ஒரே வகையைச் சேர்ந்தது. அதாவது தாது + ய + தே (ஆத்மனேபத ஒட்டு). அதாவது, க¹ாஷ்ட²ம் என்ற சொல், கருத்தாவாக நிற்கும்போதும், செயப்படுபொருளாக நிற்கும்போதும், அதன் வினைச் சொல் ஒன்றாகவே அமைகிறது.

இதைத்தான் கர்மவத் கருத்தா என்று குறிப்பிட்டிருக்கிறது.
இங்கு கருத்தாவே, செயப்படு பொருளாக (கர்மன்) ஆகிறது.
கீழ்க்கண்ட நான்கு இடங்களில் இம்மாதிரியாக காணலாம்.
1. யக்–பி[4]த்[3]யதே க்[1]ஷ்ட[2]ம் ஸ்வயமேவ பார்க்க (3.1.67)
2. ஆத்மனேபத : அபே[4]தி[3] (லுங்) க்[1]ஷ்ட[2]ம் ஸ்வயமேவ (பார்க்க 1.3.13)
3. சிண் – காரிஷ்யதே கட[2] : ஸ்வயமேவ
4. சிண்வத்[3]ப[4]ாவ –
சூத்திரத்தில் காணப்படும் 'வத்' (ஈடு, சமம்) என்ற சொல், செயப்படு பொருள் குன்றிய வினைகளுடன் வரும் Impersonal வாக்கியங்களையும் இத்துள் அடக்குவதற்குத்தான், பி[4]த்[3]யதே ஸ்லோகம்ஸலேன.
செயப்படுபொருளோடு
'கர்மணா' என்ற சொல், துல்யக்ரியா (ஒரே விதமான செயல்), செயப்படுபொருளோடு மட்டுந்தான், 'கர்மவத்[3] பா[4]வம்' ஆகும். மற்ற காரகங்களுடன் அல்ல என்பதைக் குறிக்கும். காட்டாக
ஸாது[4] அஸி : சி[3]னத்தி
கத்தி நன்றாக வெட்டுகிறது
தேவதத்த: அஸினா சினத்தி (அஸினா கரணம்)
அஸி: ஸ்வயமேவ சி[3]னத்தி
கத்தி தானாகவே வெட்டுகிறது.
இங்கு 'அஸி' என்ற சொல்லை கர்த்தாவாகப் பயன்படுத்தியிருந்தபோதிலும், இது கரணமாகவே நிற்கும். இதற்கு 'கர்மவத்[3] ப[4]ாவம்' கிடையாது.
ஸாது ஸ்த[2]ாலீ பசதி
நன்றாக பானை சமைக்கிறது.
இங்கு ஸ்த2ாலீ (அதி4கரணம்) கர்த்தாவின் இடத்தில் நின்றாலும், இது அதிகரணந்தான். இங்கும் கர்ம வத்[3] ப[4]ாவம் கிடையாது.
தேவத[3]த்த: ஸ்த[2]ால்யாம் (7) பசதி
தேவதத்தன் பானையில் சமைக்கிறான்

**3.1.88** தபஸ்தபக: கர்ம கஸ்யைவ
'தப்' (தவம் செய்) என்ற வினையின் செயப்படுபொருள் 'தபஸ்' என்ற சொல்லேயாகுமானால், அவ்வினையின் கருத்தாவும் செயப்படுபொருளும் ஒத்ததாகும்.
தப்யதே தபஸ் தாபஸ:
ஆனால் உத்தபதி ஸுவர்ணம் ஸுவர்ண கார:

**3.1.89** ந து[3]ஹ ஸ்னு நாமம் யக்சிணௌ
துஹ் (பால் கற) ஸ்னு நம் (வணங்கு) ஆகிய வினைகளைத் தற்சுட்டு வினையாகப் பயன்படுத்தும் போது; அவைகளுக்குப் பின் கர்மவத்[3] பாவம்தருவிக்கும், யக, சிண் ஒட்டுக்கள் இணைக்கப்படமாட்டா.
து[3]க்[3]தே[4] கெ[3]ள: ஸ்வயமேவ

அதே3ஹி கெ3ள: ஸ்வயமேவ
அது3க்3த4 கெ3ள: ஸ்வயமேவ
ப்ரஸ்னுதே கெ3ள: ஸ்வயமேவ
ப்ராஸ்னோஷ்ட1 கெ3ள: ஸ்வயமேவ
நமதே1 தண்ட: ஸ்வயமேவ
அநம்ஸ்தே த3ண்ட3 : ஸ்வயமேவ

வா: யக்1சிணோ ப்ரதிஷேதே4
ணி ஸ்ரந்தி2 க்3ரந்தி2 ப்3ரூஞாத்மனேபத3ா
அகர்மகாணாமுபஸம்க்2யானம்
'ணி'யை இறுதியாகக் கொண்ட தாதுக்கள் ஸ்1ரந்த2, க்3ரந்த்2, ப்3ரூ, செயப்படுபொருள் குன்றிய வினைகளின் ஆத்மனேபத சொற்கள் ஆகியவைகளிலும் 'யக்' 'சிண்'
ஒட்டுக்கள் இணைவதற்குக் தடை கூற வேண்டும்.

காரயதி க1ட1ம் தே3வத3த்த: செய்விக்கிறான் பாயை தேவதத்தன்

காரயதே க1ட1 : ஸ்வயமேவ: செய்து கொள்கிறது பாய் தானாகவே

அசீக1ரத் க1ட1ம் தேவத3த்த: செய்தான் பாய் தேவதத்தன்

அசீகரத க1ட1 : ஸ்வயமேவ: செய்து கொண்டது பாய் தானாகவே

உத்புச்1ச2யதே க3ாம் கே3ாப: வாலைத் தூக்குகிறான் பசு இடையன்

இடையன் பசுவின் வாலைத் தூக்குகிறான்

உத்புச்1ச2யதே கெ3ள: ஸ்வயமேவ : வாலைத் தூக்குகிறது பசு தானாகவே

உத்புபு1ச்1ச2த கெள: ஸ்வயமேவ : பசு தன் வாலை தானாகவே தூக்குகிற்று

ஸ்1ரத்2னாதி/ஸ்1ரத்2னீதே/அஸ்1ரந்தி2ஷ்ட1
க்3ரத்2னாதி/க்3ரத்2னீதே/அக்3ரந்தி2ஷ்ட1
ப்3ரவீதி/ப்3ரூதே/அவோசத்
ஆஹந்தி/ஆஹதே/ஆவதி4ஷ்ட1

**3.1.90** கு'ஷிரஜோ: ப்ராசாம் ஸ்'யன் பரஸ்மைபதம் ச

கு'ஷ (இழு), ரஜ்(சாயமேற்று) ஆகிய வினைகள், தற்சுட்டு வினையில் ஸ்' யன் ஒட்டோடு இணைக்க வேண்டும் என்பது கீழ்த்திசை நாட்டு இலக்கணகாரர்களின் கருத்து. இவ்வினைகள் பரஸ்மைபதமாக வரும்.

குஷ்யதி பாத[3] : ஸ்வபமேவ

இழுக்கிறது கால் தானாகவே

ரஜ்யதி வஸ்த்ரம் ஸ்வயமேவ

சாயமாகிறது துணி தானாகவே

இச்சூத்திரம் 'யக்' ஒட்டு, ஆத்மனேபத ஒட்டு ஆகியவற்றுக்குப் புறன டை. இது ஒரு சாராரின் கருத்தானபடியால் இவைகளுக்கு விருப்பாக அமையும் மாற்று வடிவங்களும் காணப்படுகின்றன.

குஷ்யதே, ரஜ்யதே

**3.1.91** த[4]ாதோ:

த[4]ாதுவுக்குப்பின் இது ஒரு அதிகார சூத்திரம். இதிலிருந்து 3ஆம் அத்தியாயத்தின் முடிவுவரை விளக்கப்படும் ஒட்டுக்கள் தாதுவுக்குப்பின் வர வேண்டும்.

**3.1.92** தத்ர உபதம் ஸப்த'மீஸ்த[2]ம்

இந்தப் பகுதியில் விளக்கப்பட்ட சூத்திரங்களில், ஏழாம் வேற்றுமையில் காணப்படும் சொல் 'உபபதம்' (சார்ந்த சொல்) எனப் பெயர் பெறும்.

காட்டாக 3.2.1 கர்மணி அண் என்ற சூத்திரத்தில் 'கர்மணி' என்ற சொல் 7ஆம் வேற்றுமையில் அமைகிறது. இச்சொல் உபபதமெனப்படும்.

கு'ம்ப[4]ம் + க்'ரு' + அண் = கு'ம்ப[4]க'ார:' குயவன்'

இங்கு கு'ம்ப[4]ம் 2ஆம் வேற்றுமைச் சொல் உபபதமாகிறது.

**3.1.93** க்'ரு'த் அதிங்

இந்த அத்தியாத்தில் கூறப்பட்டிருக்கும் 'தி'ங' ஒட்டுக்களைத் தவிர்த்த மற்ற எல்லா ஒட்டுக்களும் 'க்ருத்' என்ற பெயரால் குறிப்பிடப்படும்.

தவ்யம், அநீயம் க்ருத்'+ தவ்யம் – கர்தவ்யம்

க்ருத் + அநீயம் – கரணீயம்

**3.1.94** வா அஸரூபோ அஸ்த்ரியாம்

இந்த அத்தியாத்தில் கூறப்பட்டிருக்கும் ஒட்டுக்களில், பெண்பால் பெயற்சொற்களை யாக்கப்பயன்படுத்தும் ஒட்டுக்களைத் தவிர்த்து, மற்றவைகள், ஒரே சூழலில் இரண்டு வகையான ஒட்டுக்களை இணைக்கக் கூடிய வாய்ப்பு இருக்கும் நிலையில், இரண்டு ஒட்டுக்களும் உருவத்தில் ஒத்தவையாக அமையாமலிருந்தால், அப்போது, புறனடையாக வரும் விதி, விருப்பாக, பொது விதியைத் தடுக்கும்.

'க' ஒட்டை சில தாதுக்களோடு இணைத்து பெயர்ச் சொல் உருவாக்கலாமென்று 3.1.135 கூறுகிறது ண்வுல், த்ருச் என்ற ஒட்டுக்களைச் சேர்த்து பெயர்ச் சொல் உருவாக்கலாமென்று 3.1.133 விளக்குகிறது. இது ஒரு பொது விதி. 3.1.135 இப்போது விதியைத் தடை செய்யுவில்லை.
விக்ஷிப் + க + அ = விக்ஷிப: (3.1.135)
விக்ஷேபக: விக்ஷேப்தா (3.1.133)

**3.1.95** க்ருத்[1]யா: ப்ராங் ண்வுல:
இச்சூத்திரத்திலிருந்து 'ண்வுல்', த்[1]ரு[1]சௌ (3.1.133) என்ற சூத்திரம் வரையில் விளக்கப்பட்டிருக்கும் ஒட்டுக்களெல்லாம் 'க்[1]ரு[1]த்[1]ய' என்ற பெயர் பெறும்.

**3.1.96** தவ்யத் தவ்யாநீயர:
தவ்யத், தவ்ய, அநீயர் ஆகியவைகள் தாதுவுக்குப்பின் வரும்.
கர்தவ்யம் (க்[1]ரு[1]+ தவ்யத்)
கர்தவ்யம் (க்[1]ரு[1]+ தவ்ய)
கரணீயம் (க்[1]ரு[1]+ அநீயர்)
தகாரம், ரேப[2]மும் சுரத்திற்காக

வா: வஸேஸ் தவ்யத் கர்தரி ணிச்ச
'வஸ்' தாதுவுடன் இணையும் 'தவ்யத்' ஒட்டு 'கருத்தா' என்ற பொருளைக் கொடுக்கும் அது 'ணித்' ஆகும். வாஸ்தவ்ய: (வஸ் + தவ்யத் → வாஸ்தவ்ய (7.2.116) வசிப்பவன்

வா: கேலிமர் உபஸம்க்[2]யானம்
'கேலிமர்' என்ற ஒட்டும், இவைகளுடன் சேர்க்கப்படவேண்டும். பசேலிமா: மாஷா: சமைக்கக்கூடிய உளுந்து
பச் + கேலிம = ஏலிம = பசே லிம + ஜஸ் = அஸ்
பி[4]தே[3]லிமானி காஷ்ட[1]ானி
வெட்டக்கூடிய கட்டைகள்.

**3.1.97** அசோ யத்
ஓர் உயிரெழுத்தை ஈறாகக் கொண்ட தாதுவுக்குப்பின் யத் ஒட்டு இணைக்கப்படும்.
கே[3]யம் – கை[3] = க[3]ா + யத்
'பாடத் தகுதியுள்ள' அல்லது பாடவேண்டும்
கே[3]ய: பாட்டு
மெய்யெழுத்தை ஈறாகக் கொண்ட தாதுவுக்குப்பின் 'ண்யத்' வரும் (சூ.3.1.124) இச்சூத்திரம் 'யத்' ஒட்டு வருமிடத்தைக் குறிக்கிறது. இந்த இரண்டு சூத்திரங்களையும் சேர்த்து நோக்கும் போது, ஒரு தாது உயிரெழுத்தில் முடிந்தால் யத் என்ற ஒட்டை அத்துடன் இணைக்கவேண்டும்.

அத்துடன் வேறு ஒட்டுக்களைச் சேர்த்து, ஆக்கப்பட்ட தாது, மெய்யெழுத்தை இறுதியாகக் கொண்டாலும் அதன் மூல தாது உயிரெழுத்தை ஈறாகக் கொண்டதாக அமைந்தால் இதே விதியைப் பயன்படுத்த வேண்டும் ஆனால் மூல தாதுவே மெய்யெழுத்தை இறுதியாகக் கொண்டு அமைந்தால் அப்போது 'ண்யத்' தான் அத்துடன் வரவேண்டும்.

காட்டாக தி$^{3}$த்'ஸ்யம் (Desiderative) இதன் தாது தி$^{3}$த்ஸ

இது 'அ' உயிரெழுத்தை இறுதியாகக் கொண்டது. ஆனால் ஆர்த$^{4}$ தாதுக ஒட்டுக்கள் இதைத் தொடரும்போது இந்த 'அ' கெடும். அதனால், இதன் இறுதியெழுத்து 'மெய்'யாகிறது. ஆனாலும், இதன் மூலதாதுவின் ஈறு ஒரு உயிரெழுத்தானதால் (த$^{3}$ா) 'யத்' என்ற ஒட்டுத்தான் இணைக்க வேண்டும், 'ண்யத்' அல்ல என்பதைச் சுட்டுகிறது 'அசோ' என்ற சொல்.

வா : தகிஸ$^{1}$ ஸி சதி யதி ஜனீநாமுபஸம் க்$^{2}$யானம்

தக், ஸ'ஸ், சத், யத், ஜன் ஆகியவைகளும் இத்துடன் சேர்க்கப்பட வேண்டும். அதாவது, இந்தத் தாதுக்கள் மெய்யெழுத்தை இறுதியாகக் கொண்ட போதிலும், 'யத்' ஒட்டு இவைகளுக்குப்பின் வரும் 'ண்யத்' அல்ல.

தக்யம், ஸ'ஸ்யம், சத்யம், யத்யம், ஜன்யம்.

வா : ஹனோ வா வத$^{4}$ ச

'ஹன்' என்ற வேர்ச் சொல்லுக்குப்பின் 'யத்' ஒட்டு இணைக்கப்படும். விருப்பாக, 'ஹன்' உக்குப் பதிலியாக 'வத்$^{4}$'வரும். அதாவது, 'யத்' ஒட்டு இணைக்கும்போது 'வத்' ஆதேசம் வரும். இதன் மாற்றாக 'ண்யத்' ஒட்டு இணைக்கப்படும்.

வத்$^{4}$யம், க$^{4}$ாத்யம்

ஹன் + யத், வத் ஆதேசம் – வத்$^{4}$யம் – கொல்லத் தகுந்த

மாற்று வடிவம்

ஹன் + ண்யத் (3.1.14) = ஹன் + ய, உபத$^{4}$ா

வ்ருத்தி, ஹான் + ய = ஹாத் + ய (7.3.32) = க$^{4}$ாத் + ய (7.3.24) = க$^{4}$ாத்யம் – 'கொல்லத் தகுந்த'

**3.1.98** போர் அது$^{3}$ பத$^{4}$ாத்

உதட்டொலியை ஈறாகவும், அதன் ஈற்றயல் 'அ'வாகவும் கொண்ட தாதுவுக்குப்பின் 'யத்' ஒட்டு சேர்க்க வேண்டும். ஸப் – ஸப்யம்: லப$^{4}$ – லப்$^{4}$யம்.

ஆனால்

பாக்யம் (= பச் + ண்யத் = ய, ஈற்றயல் நீட்டித்தல், பாச் + ய = பாக்(7.3.52) + ய

வாக்யம் < வச் + ண்யத்

உதட்டொலியை இறுதியாகவும் ஈற்றயல் வேறு உயிரெழுத்தாகவும் கொண்ட தாதுவுக்குப்பின் 'ண்யத்' சேர்க்க வேண்டும்.

கு$^{1}$ப்$^{1}$ = ண்யத் = ய, உபதாகுண, கே$^{1}$ாப் + ய
கே$^{1}$ாப்$^{1}$யம்; கே$^{3}$ாப்$^{1}$யம் (< கு$^{3}$ப்$^{1}$)

**3.1.99** ஸ$^{1}$கி$^{1}$ ஸஹோஸ் ச
ஸ$^{1}$க்$^{1}$ (திறமைகொள்) ஸஹ் (பொறு) ஆகிய தாதுக்களுக்குப் பிறகும் 'யத்' இணைக்க வேண்டும்.
ஸ$^{1}$க்$^{1}$யம், ஸஹ்யம்

**3.1.100** க$^{3}$த$^{3}$ மத$^{3}$ சர யமண்$^{1}$ அனுப$^{1}$ஸர்கே$^{3}$
உபசர்க்கத்தோடு சேராமல், தனியாக வரும் க$^{3}$த்$^{3}$(கூறு), மத்$^{3}$(மகிழ்) சர்(போ) அல்லது ('உண்') யம்(கட்டுப்படுத்து) ஆகிய தாதுக்களுக்குப்பிறகும் யம் வரும்.
$^{3}$கத்$^{3}$யம், மத்$^{3}$யம், சர்யம், யம்யம்
ஆனால் ப்ரக$^{3}$ாத்$^{3}$யம் ( = ப்ர + க$^{3}$த்$^{3}$ + ண்யத்) ப்ரமாத்$^{3}$யம்,

வா: சரேராஙி சாகுரௌ
'சர்' தாது 'ஆ' என்ற உபசர்க்கத்துடன் 'ஆசிரியர்' என்ற பொருளை சுட்டாமல், அமையும்போது 'யத்' அத்துடன் இணைக்கப்படும்
ஆசார்ய: தே$^{1}$ஸ: "போகத் தகுந்த நாடு"
ஆனால், ஆசிரியர் என்ற பொருளில் 'ண்யத்' ஒட்டு இணைக்கப்படும்.
ஆசார்ய: (ஆசர் + ண்யத் = ய) உபநேதா(வழி காட்டுபவன்)

**3.1.101** அவத்$^{3}$ய பண்ய வர்யா க$^{3}$ர்ஹ்ய ப$^{1}$ணித்வய அநிரோதே$^{4}$ஷு
அவத்$^{3}$ய, பண்ய, வர்யா ஆகிய சொற்கள் முறையே நிந்தனைக்குரிய (அவத்$^{3}$ய), விற்க–வாங்கத் தகுந்த (பணிதவ்ய), தடுக்கப்படாத (அநிரோத) என்ற பொருட்களில், யத் என்ற ஒட்டோடு சேர்ந்து விதிக்குப்புறம்பாக ஆக்கப்பட்ட சொற்கள்.
அவத்$^{3}$யம் பாபம் – வெறுக்கத்தக்க பாபம்
பண்ய: க$^{1}$ம்ப$^{3}$ல: விற்க/வாங்கத் தகுந்த கம்பளி
ஸ$^{1}$தேன வர்யா நூறு மனிதர்களால் வரிக்கப்பட்டவன்

விதிமுறைப்படி அமைந்த சொற்கள்

| | | |
|---|---|---|
| அனுத்யம் | – | சொல்லக்கூடாத |
| பாண்யம் | – | புகழத்தகுந்த |
| வ்ருத்யா | – | மணக்கத் தகுந்தவன் |

'வர்யா' என்ற சொல் பெண்பால் சொல்லாக ஆக்கும் போதுதான், 'யத்' ஒட்டோடு இணைந்து விதிப்படி அமையாது. ஆனால் ஆண்பால் சொல்லாக ஆக்கும்போது 'ண்யத்' ஒட்டுச் சேர்க்கப்பட்டு, விதிப்படி அமையும்.

வ்ரு'ங் + ண்யத் = வார்யா வார்யா ரு'த்'விஜ:

**3.1.102** வஹ்யம் கரணம்

போக்கு வரத்துக்கு (வஹ்யம்)ப் பயன்படுத்தப்படும் கருவி என்ற பொருளைச் சுட்டும் சொல்லான வஹ்யம் விதிப்படியமையாதது.

வஹ்யம் ஸ'க'ட'ம் – 'இழுக்கும் வண்டி'

வஹ்+யத்=வஹ்யம்

ஆனால் வேறு பொருளைச் சுட்டும்போது வாஹ்ய என்று அமையும்.

வஹ்+ண்யத்=வாஹ்ய: 'எருது'

**3.1.103** அர்ய: ஸ்வாமி வைஸ்' யயோ;

'ரு'' (போ) என்ற தாது 'யத்' என்ற ஓட்டோடு சேர்ந்து 'சுவாமி', 'வைசியன்' என்ற பொருளைக் கொடுக்கும் 'அர்ய' என்ற சொல் ஆகுகிறது. இச்சொல் ஒரு நிபாதனமாகும்.

ரு' + யத் = அர் + ய = அர்ய:

சூ. 3.1.124 ரு' என்ற ஒட்டுக்குப்பின் 'ண்யத்' வரவேண்டும் என்ற விதி யமைக்கிறது. ஆனால், இச்சூத்திரத்தில் குறிப்பிட்ட பொருளைக் குறிக்கும்போது, 'யத்' ஒட்டு வரவேண்டும்.

வா: யதோ அனா வ (6.1.213) இத்யாத்³யுத³ாத் தத்வே ப்ராப்தே, ஸ்வாமின் யந்தோதாத்தத்வம் வக்தவ்யம்.

சூ. 6.1.213இன்படி 'அர்ய' என்ற சொல் முதல் அசையில் உதாத்த சுரம் பெறும். இச்சூத்திரத்தின்படி 'சுவாமி' என்ற பொருளைக் கொடுக்கும் 'அர்ய' என்ற சொல் இறுதியில் உதாத்த சுரம் பெறும். அதாவது 'அர்ய' என்ற சொல் 'சுவாமி' என்ற பொருளில் இறுதி அசையில் உதாத்தசுரம் பெறும். ஆனால் 'வைசியன்' என்ற பொருளைக் கொடுக்கும்

அதே சொல் முதலசையில் உதாத்தசுரம் பெறும்.

ஆனால்

ஆர்யோ ப்³ராஹ்மண – 'மதிப்புக்குரிய பிராமணன்'

ரு' + ண்யத் – வ்ருத்³தி⁴ – ஆர் + ய = ஆர்ய

**3.1.104** உபஸர்யா கால்யா ப்ரஜனே

உபஸர்யா என்ற சொல், பருவமெய்திய (கால்ய) அல்லது சினைப்படுத்தத் தகுந்த (ப்ரஜனே) என்ற பொருளை உணர்த்தும் போது 'யத்' என்ற ஒட்டுடன் சேர்ந்து விதிப்படியாக்கப்படாத சொல்லாகும்.

உப'ஸர்யா கெ³ள: பருவமெய்தி யபசு

உப' + ஸ்ரு' + யத் = உப' + ஸர் + ய = உப'ஸர்யா

உப'ஸர்யா பட³வா–பருவமெய்திய பெண் குதிரை.

ஆனால் உப'ஸார்யா ஸ'ரதி³ மது⁴ரா

மதுரை சரக்காலத்தில் அணுகத்தகுந்தது.

**3.1.105** அஜர்யம் ஸங்க³தம்

அஜர்யம் (அழியாத, நிலையான) என்ற சொல், ஸங்க³தம் (தோழமை, சந்திப்பு) என்ற பொருளைச் சுட்டுமானால், அது 'யத்' என்ற ஒட்டைச் சேர்த்து விதிப்படியாக்காத சொல்லாகும்.

அ + ஜ்ரு¹ + யத் = அ + ஜர் + ய = அஜர்ய

நம் தோழமை அழியாததாக/நிலையாக அமையட்டும்.

ஆனால்

அஜரிதாகம்ப³ல: 'பழையதாக ஆகாத கம்பளி'

இங்கு, தோழமையைக் குறிக்காததால், யத் ஒட்டு வராமல் த்ரு'ச் ஒட்டுச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

அ ஜ்ரு¹ + த்¹ரு¹ச் = அஜர் + த்ரு = அஜரிதா.

**3.1.106** வத³: ஸுபி¹ க்யப் ச

உபசர்க்கத்துடன் சேராமல் தனியாக நிற்கும் வத்³, (பேசு, கூறு) என்ற தாதுவுடன் ஒரு வேற்றுமைச் சொல் நிற்கும் போது அத்துடன் க்யப் என்ற ஒட்டும் இணைக்கப்படும். அதாவது இங்கு, க்யப் அல்லது யத் ஒட்டு இணைக்கலாம்.

ப்³ரஹ்ம + வத்³ + க்யப் = ய = ப்³ரஹ்ம + உத்³ய = ப்³ரஹ்மோத்³யம் 'பிராம்மணனால் கூறப்பட்டது'

அல்லது

ப்³ரஹ்ம + வத்³ + யத் = ய = ப்³ரஹ்மவத்³யம்

'பிராம்மணனால் கூறப்பட்டது'

ஆனால்

வாத்³யம் (வத்³ + ண்யத்=ய 'சங்கீதக் கருவி'

ப்'ரவாத³ம் (ப்'ர + வத் + ண்யத் = ய)

**3.1.107** பு⁴வோ ப⁴ாவே

(உபசர்க்கத்தோடு சேர்க்கப்படாத ஒரு வேற்றுமை சொல்லுடன் வரும்)'பூ⁴' என்ற தாதுவுடன் நிலைமை என்ற பொருளில் 'க்யப்' இணைக்கப்படும்.

ப்³ரஹ்ம + பூ⁴ + க்யப்¹ = ய = ப்³ரஹ்மபூ⁴ய

ப்³ரஹ்மபூ⁴யம் க³த: = 'பிரமனின் நிலையையடைந்தான்'

மற்ற சூழலில் 'கய்ப்' வராது.

ப⁴வ்யம் = பூ⁴ + யத் = ய = ப்³ஓ, உ ய = ப⁴வ்யம் (6.1.71)

ப்'ரப⁴வ்யம் = (ப்'ர + பூ⁴ + யத்)

**3.1.108** ஹனஸ்த்ச

(உபசர்க்கத்தோடு சேர்க்கப்படாத, வேற்றுமைச் சொல்லுடன் வரும்) ஹன் (கொல்) என்ற தாதுவுடனும், நிலைமை என்ற பொருளில், க்யப் ஒட்டு இணைக்கப்படும்.' ஹன்' தாதுவின் இறுதியான 'ன்'க்குப் பதிலாக த் வரும்.

ப்³ரஹ்ம + ஹன் + க்யப் = ய = ப³ரஹ்ம ஹத்ய + டாப் = ப்³ரஹ்ம

ஹத்யா – 'பிராமணனைக் கொல்லுதல்' மற்ற சூழலில்
க⁴ாத¹ ( = ஹன் + க⁴ஞ்) அடி
ப்¹ரக⁴ாத: வர்த¹தே¹ – சண்டை நடக்கிறது

**3.1.109** ஏதி ஸ்து ஸ¹ாஸ் வ்ரு¹த³ரு¹ஜுஷ: க்யப்
இ(போ), ஸ்து(புகழ்), ஸ¹ாஸ்(ஆள்) வ்ரு (தேர்ந்தெடு), த்³ரு¹(மதி), ஜுஷ் (மகிழ்வி) ஆகிய தாதுக்களுக்குப்பின் 'க்யப்' இணைக்க வேண்டும்.
இத்¹ய: 'போகக்கூடியது'
இ + க்யப் = ய – இ + துக் = த் (6.1.71) + ய = இத்ய:
ஸ்துத்¹ய: – புகழத் தகுந்த
ஸி¹ஷ்ய: (ஸ¹ாஸ் + க்யப் = ய) → ஸி¹ஸ் (6.4.34)
ய=ஸிஷ்ய: (8.3.60) கற்பிக்த் தகுந்த (அதாவது மாணவன்)
வ்ரு¹த்ய : –'தேர்ந்தெடுக்கத்தக்க'
ஆத்³ரு¹த்ய: –' மதிக்கத் தகுந்த'
ஜுஷ்ய: 'மகிழ்விக்கத் தகுந்த'
இதற்கு முந்திய சூத்திரத்திலிருந்து அனுவ்ருத்தி மூலம் 'க்யப்' ஒட்டு இச்சூத்திரத்திற்கும் வரும். இருந்தாலும். 'க்யப்' – ஐ இச்சூத்திரத்திலும் திருப்பிக் கூறியிருப்பதன் காரணம், சூ. 3.1.125ஐப் போன்றவை, இத்தாதுக்களுக்குப் பயன்படுத்தக்கூடாது என்பதைக் குறிப்பிடத்தான். 3.1.125இன் படி 'உ' – வை இறுதியாகக் கொண்ட தாதுக்களுக்குப்பின் கட்டாயமாக என்ற பொருளில் 'ண்யத்' இணைக்கப்பட வேண்டும் அதன்படி ஸ்து என்ற தாதுவுக்குப்பின் 'ண்யத்' வரவேண்டும். இச்சூத்திரம் ண்யத் ஒட்டு இணைப்பதற்குத் தடை விதிக்கிறது.
அவஸ்யஸ்துத்ய: (அவஸ்யம் + ஸ்து + க்யப் = ய)
'கட்டாயமாகப் புகழ்த்தகுந்த'

வா: ஸ¹ம்ஸி, து³ஹி கு³ஹிப்⁴யோவா இதி வக்தவ்யம்
ஸ¹ம்ஸ்(புகழ்), து³ஹ்(பால்கற), கு³ஹ்(மூடு, மறை) ஆகிய தாதுக்களுக்குப்பின் க்யப் விருப்பாக வரும்.
ஸ¹ஸ்யம் / ஸ¹ம்ஸ்யம்

ஸ¹ம்ஸ் + க்யப் = ய = ஸ¹ஸ்யம்
ஸ¹ம்ஸ் + ண்யத் = ய = ஸ¹ம்ஸ்யம்
து³ஹ்யம் / தே³ாஹ்யம்
து³ஹ் + க்யப் = ய = து³ஹ்யம்
து³ஹ் + ண்யத் = ய = தே³ாஹ்யம்
கு³ஹ்யம்/கே³ாஹ்யம்

வா: ஆங்பூர்வாத³ஞ்ஜே: ஸம்க்³ஞாயாமுப ஸம்க்³யானம் 'ஆ'வுடன் சேர்ந்து வரும் அஞ்ஜ் (பூசு, தடவு) தாது, பெயர்ச் சொல்லைக் கு றிக்கும்படி

வரும்போது 'க்யப்' அத்துடன் இணைக்கப்படும்.
ஆங் + அஞ்ஜ் + க்யப்
ஆ + அஸ் (6.4.24) + ய = ஆஜ்யம் 'நெய்'

**3.1.110** ரு$^{1}$து$^{3}$பத$^{4}$ச்சாக்ல்ரு$^{1}$பிச்ரு$^{1}$தே:
க்ல்ரு$^{1}$ப்(தகு$^{1}$) ச்ரு$^{1}$த்(காயப்படுத்து) ஆகிய தாதுக்களைத் தவிர, ஏனைய 'ரு' குறில்லை, ஈற்றயலாகக் கொண்ட தாதுக்களுக்குப் பின் 'க்யப்' ஒட்டு இணைக்க வேண்டும்.
வ்ரு$^{1}$த்$^{1}$ – வ்ரு$^{1}$த்$^{1}$யம் (வ்ரு$^{1}$த்$^{1}$ + க்யப்)
வ்ரு$^{1}$த்$^{4}$ – வ்ருத்$^{4}$யம் (வ்ரு$^{1}$த்$^{4}$ + க்யப்)
க்ல்ரு$^{1}$ப் – கல்ப்யம் – (க்ல்ரு$^{1}$ப் + ண்யத்)
ச்ரு$^{1}$த் – சர்த்யம் (ச்ரு$^{1}$த் + ண்யத்)
இந்த விதி 'ரு$^{1}$' குறிலாக அமையும்போதுதான் பயன்படுத்தப்படும். இது நெடிலாகும்போது 'ண்யத்' தான் தொடரும்.
க்ரு$^{1}$த் + ண்யத் = ய = கீர்த்யம்

வா: பாணௌ ஸ்ரு$^{1}$ஜே ண்யத் வக்தவ்ய:
'பாணி' என்ற சொல்லுடன் வரும் 'ஸ்ரு$^{1}$ஜ்' தாதுவுக்குப்பின் 'ண்யத்' வரும்.
பாணிஸர்க்$^{4}$யா ரஜ்ஜு:–
கையால் முறுக்க வேண்டிய கயிறு

வா: ஸமவபூர்வாச்ச
ஸ்ரு$^{1}$ஜ் தாதுவுக்குமுன் ஸம், அவ ஆகியவை நிற்கும்போதும் 'ண்யத்' வரவேண்டும்.
ஸம்/அவஸர்க்$^{3}$யா

**3.1.111** ஈ ச க$^{2}$ன:
'க$^{3}$ன்' (தோண்டு) தாதுவுக்குப்பின் 'க்யப்' ஒட்டுப் பயன்படுத்த வேண்டும். தாதுவின் இறுதி எழுத்துக்குப் பதிலாக 'ஈ' வரும்.
க$^{2}$ன் + க்யப் = க$^{2}$ + ஈ + ய = கே$^{2}$யம்
'தோண்ட வேண்டிய'

**3.1.112** ப்$^{4}$ரு$^{1}$ஞோ அஸம்க்$^{3}$ஞாயாம்
ப்$^{4}$ரு$^{1}$ (தாங்கு) தாது ஒரு பெயராகப் பயன்படுத்தாத போது அதற்குப்பின் 'க்யப்' வரும்.
ப்$^{4}$ரு$^{1}$ + க்யப் = ப்$^{4}$ரு$^{1}$த்ய: 'வேலைக்காரன்'
ஆனால் ப$^{4}$ார்ய: 'க்ஷத்திரியன்' இங்கு ஒரு பெயராவதால் ப்$^{4}$ரு$^{4}$ + ண்ய த்

வா: ஸம்பூர்வாத்$^{3}$விபா$^{4}$ஷா
'ஸம்' என்ற உபசர்க்கத்துடன் வரும் 'ப்$^{4}$ரு$^{1}$வுடன்' 'க்யப்' விருப்பாக வரும்

ஸம்ப்4ரு1த்யா:/ஸம்ப4ார்யா:

**3.1.113** ம்ரு1ஜே: விப4ாஷா

ம்ருஜ் (துப்புரவாக்கு) தாதுவுக்குப்பின் விருப்பாக 'க்யப்' வரும்

பரிம்ரு1ஜ்ய:/பரிமார்க்3ய:

இது ப்ராப்தவிப4ாஷாவுக்கு ஒரு எடுத்துக்காட்டு சூ.110இன்படி 'ம்ரு 'ஜ்'க்குப்பிறகு 'க்யப்' வரவேண்டும். இச்சூத்திரம் அதற்கு ஒரு விபா ஷாவைக் குறிப்பிடுகிறது.

பரிம்ரு1ஜ் + ண்யத் (3.1.124) = பரிம்ருஜ் + ய (7.3.52) = பரிமார்க்3ய: (7.2.114)

**3.1.114** ராஜஸூய ஸூர்ய ம்ரு1ஷோத்3ய

ரு1ச்ய கு1ப்ய க்ரு1ஷ்ட1 பச்ய அவ்யத்2யா:

ராஜசூய சூர்ய ம்ரு1ஷோர்3ய, ரு1ச்ய

கு1ப்ய க்1ரு1ஷ்ட1 பச்ய அவ்யத்2ய ஆகியவை 'க்யப்'

ஒட்டோடு சேர்ந்து விதிப்படி ஆக்கப்படாத சொற்கள் ராஜ + ஸூ + க்யப் =

ராஜஸூய:– ஒரு யாகத்தின் பெயர்

ஸ்1ரு1/ஸூ + க்யப் = ஸூர்ய: சூரியன்

ம்ரு1ஷ் + வத்3 + க்யப் = ம்ருஷாத்3யம்' பொய் வார்த்தை'

ரு1ச் + க்யப் = ரு1ச்ய: 'விரும்பத் தகுந்தவன்'

கு3ப் + க்யப் = கு1ப்யம் – 'விலை மதிப்புக் குறைந்த உலோகம்'

க்ருஷ்ட பச் + க்யப் = க்ருஷ்டபச்யம்

அவ்யத்2ய: 'பாம்பு'

**3.1.115** பி4த்3யோத்3த்4யௌ நதே3

பி4த்3ய, உத்3த்4ய ஆகிய சொற்கள், 'நதி' என்ற பொருளில் 'க்யப்' என்ற சேர்ந்து விதிக்குப் புறம்பாக ஆக்கப்பட்ட சொற்கள்.

பி4த்3 + க்யப் = பி4த்3ய எது (வேகமாக ஓடுவதால்)

கரையை உடைக்குமோ அதாவது ஆறு, பித்தியம் என்ற ஆறு

உத்3த்4 + க்யப் = உத்3த்4ய: எதில் தண்ணீர் கரை புரண்டு ஓடுகிறதோ அது உத்தியம் என்ற ஆறு.

ஆனால் பே4த்தா, உடைப்பவன்

உஜ்1ஜி2த்தா, உடைப்பவன்

**3.1.116** பு1ஷ்ய ஸித்3த்4யௌ நக்ஷத்ரே

பு1ஷ்ய, ஸித்3த்4ய என்ற சொற்கள் நக்ஷத்திரத்தின் பெயராக வரும்போது 'க்யப்' ஒட்டு இணைக்கப்பட்டு ஆக்கிய நிபாதனமாகும்.

பு1ஷ் + க்யப் = புஷ்ய:

ஸித்4 + க்யப் = ஸித்3த்4ய: நக்ஷத்திரங்களின் பெயர்கள்

வேறு பொருளில்

போஷணம் (புஷ் + ல்யுட்)

**3.1.117** விபூய விநீய ஜி'த்யா முஞ்ஜ' க'ல்க' ஹலிஷு

விபூய, விநீய ஜி'த்ய என்ற சொற்கள் முறையே முஞ்ஜ என்ற புல், வண்டல் (விநீய) ஏர் (ஹல) ஆகிய பொருட்களைச் சுட்டும்போது 'க்யப்' ஒட்டைச் சேர்த்து ஆக்கப்பட்ட நிபாதனமாகும்.

வி + பூ' + க்யப் = பிபூ'ய:

வி + நீ + க்யப் = விநீய:

ஜி + க்யப் = ஜித்ய:

விதிப்படி ஆக்கப்பட்ட சொற்கள்

விபாவ்யம் (வி + பூ' + யத்)

விநோயம் (வி + நீ + யத்)

ஜேயம் (ஜி + யத்)

**3.1.118** ப்'ரத்'ய பிப்⁴யாம் க்³ரஹேஸ்' ச²ந்த³ஸி

'க்³ரஹ' (பிடி) என்ற தாது, ப்ரதி, அபி, ஆகிய உபசர்க்கங்களுடன், வரும்போது வேதமொழியில், 'க்யப்' ஒட்டு அத்தாதுவைத் தொடர்ந்து வரும்.

மத்'தஸ்ய நப்'ரதி'க்³ரு'ஹ்யம் தஸ்மாந்

நாபிக்³ரு'ஹ்யம்

ப்ரதி + க்³ரஹ + க்யப் = ப்'ரதி'க்³ருஹ்யம்

வேறு கிளை மொழிகளில்

ப்ரதி'க்³ராஹ்யம், அபி'க்³ராஹ்யம்

**3.1.119** ப'த³ாஸ்வைரி ப³ாஹ்யா பக்ஷயேஷு ச

க்³ரஹ என்ற தாதுவுக்குப்பின் கீழ்க்கண்ட பொருட்களை உணர்த்த க்யப் ஒட்டு இணைக்கப்படும் (1) சொல் (ப'த³) (2)சார்ந்த (அஸ்வைரி) (3)வெளியே நிற்கும் (ப³ாஹ்யா) (4)ஒரு பக்கத்தைச் சார்ந்த (பக்ஷய)

ப்'ரக்³ரு'ஹ்யம் பத³ம் (பார்க்க 1.1.11)

அவக்³ரு'ஹ்யம் பத³ம்

க்³ரு'ஹ்யகா: ஸு'கா: 'சிறைப்படுத்தப்பட்ட கிளிகள்'

க்³ராமக்³ரு'ஹ்யா ஸேனா – 'கிராமத்துக்கு வெளியே நிற்கும் படை'

வாஸுதேவ க்³ரு'ஹ்யா – 'கிருஷ்ணன் பக்கம் உள்ளவர்கள்'

**3.1.120** விப⁴ாஷா க்ரு' வ்ரு'ஷோ:

க்'ரு' (செய்), வ்ரு'ஷ் (மழைபெய்) என்ற தாதுக்களுடன் 'க்யப்' ஒட்டு விருப்பாக வரும்.

க்'ரு'த்யம் = (க்'ரு' + க்யப்)

கார்யம் = (க்ரு + ண்யத்)

வ்ரு'ஷ்யம் = (வ்ரு'ஷ் + க்யப்) செய்யவேண்டியது

வர்ஷ்யம் (வ்ரு'ஷ் + ண்யத்)

**3.1.121** யுக்³யம் ச பத்ரே

வாகனம் (பத்ர்ரம்) என்ற பொருளைக் குறிக்கும் 'யுக்³யம்' நிபாதனமாகும். யுக்³யோ கெ³ள: வண்டியில் பூட்டப்பட்ட காளை யோக்³யம் (யுஜ்+ண்யத்) விதிப்படி ஆக்கப்பட்ட சொல்

**3.1.122** அமாவாஸ்யா³ன்யதரஸ்யாம்

அமாவாஸ்யா என்ற சொல் விருப்பாக நிபாதனமாகும்.

'வஸ்' என்ற தாதுவுடன் அமா (உடன்) என்ற சொல், காலத்தைக் குறிக்கும் வகையில் அமைந்தால், அத்தாதுவுக்குப் பின் 'ண்யத்' ஒட்டு இணைக்கப்படும் இங்கு 'வ்ரு'த்³தி' விருப்பாக வரும். அமாவஸ்யா அல்லது (விருத்தியுடன்) அமாவாஸ்யா

**3.1.123** ச²ந்த³ஸி நிஷ்ட'ர்க்ய தே³வஹூய

ப்ரணீய உன்னீய உச்'சி²ஷ்ய மர்ய

ஸ்த'ர்யாத்⁴வர்ய க²ன்ய க²ான்ய தே³வ யஜ்யா

ப்ரு'ச்'ச²ய, ப்ரதிஷீவ்ய ப்³ரஹ்ம, வாத்³ய

ப⁴ாவ்ய ஸ்தாவ்ய உபச'ாவ்ய ப்ரு'ட³ாணி

வேதமொழியில் கீழ்க்கண்ட சொற்கள் விதிப்படியமையாதவை

1) நிஷ்ட'ர்க்ய: (நிஸ் + க்ருத் + ண்யத்)
2) தே³வஹூய: (தே³வ + ஹ்வே + க்யப்) அல்லது (தே³வ + ஹூ + க்யப்) கடவுளை அழைத்தல்
3) ப்'ரணீய: (ப்ர + நீ + க்யப்)
4) உந்நீய: (உத்' + நீ + க்யப்)
5) உச்'சி²ஷ்ய: (உத்' + ஸி'ஷ் + க்யப்)
6) மர்ய: (ம்ரு' + யத்)
7) ஸ்த'ர்யா: (ஸ்த்'ரு' + யத் + ட'ாப்)
8) த்⁴வர்ய: (த்⁴வ்ரு' + யத்)
9) க²ன்யா: (க²ன் + யத்)
10) க²ான்ய: (க²ன் + ண்யத்)
11) தே³வயஜ்வா (தே³வ + யஜ் + யத் + ட'ாப்)
12) ஆப்ரு'ச்'ச²ய: (ஆங் + ப்ரச்'ச² + க்யப்)
13) ப்ரதிஷீவ்ய: (ப்ரதி – ஸீவ் + க்யப்)
14) ப்³ரஹ்மவாத்³ய: (ப்³ரஹ்ம – வத் + ண்யத்)
15) ப⁴வ்ய (பூ⁴ + ண்யத்)
16) ஸ்த'ாவ்ய: (ஸ்து' + ண்யத்)
17) உப'ச'ாம்ய ப்'ரு'ட³ம் (உப – சி' + ண்யத்)

உபச'ாம்ய + ப்'ரு'ட³ம் 'ப்'ருட³ம்' இரண்டாவது சொல்லாக நிற்கும் போது நிபாதனமாகும்.

வா: ஹிரண்ய இதி வக்தவ்யம்

'தங்கம்' என்ற பொருளில் உபசாம்ய ப்ருட[3]ம் நிபாதனமாகும் என்று கூற வேண்டும் வேறு பொருளில் உபசேயப்ருட[3]ம் – (உபசி + யத்)

**3.1.124** ரு'ஹலோர் ண்யத்

ரு'(குறில்/நெடில்)வை ஈறாக் கொண்ட தாதுக்களுக்கும் ஒரு மெய் யை ஈறாகக் கொண்ட தாதுக்களுக்கும் பின்னால் ண்யத் சேர்க்க வேண்டும்.

க்ரு'+ ண்யத் = கார்யம்

வச் + ண்யத் = வாக்யம்

**3.1.125** ஓர் ஆவஸ்'யகே

'உ' (குறில்/நெடில்)வை ஈறாகக் கொண்ட தாதுவுக்குப்பின் 'ண்யத்' அவசியம் என்ற பொருளை உணர்த்தும்போது இணைக்கப்படும்.

லாவ்யம் (லு + ண்யத்) 'கட்டாயமாக வெட்ட வேண்டும்'

ஆனால்

லவ்யம் (லு + யத்) 'வெட்டக் கூடியது'

**3.1.126** ஆஸுயுவபிரபிலபித்' ரபிசமஸ்ச

'ஆங்' உடன் சேர்ந்த ஸு (வடி), யு (இணை)வப் (விதையிடு), ரப், லப் (பேசு), த்ரப்(வெட்கப்படு), சம் (உண்/அருந்து) ஆகிய தாதுக்களுக்குப் பின் 'ண்யத்' சேர்க்கப்படும்.

| | | |
|---|---|---|
| ஆஸாவ்யம் | – | வடிக்கத் தகுந்த |
| யாவ்யம் | – | சேர்க்கத் தகுந்த |
| வாப்யம் | – | விதைக்கத் தகுந்த |
| ராப்யம்/லாப்யம் | – | கூறத் தகுந்த |
| த்ராப்யம் | – | நாணத்தகுந்த |
| ஆசாம்யம் | – | அருந்தத் தகுந்த |

மேலே கூறிய தாதுக்களைத் தவிர இதைப்போன்ற மற்ற தாதுக்களும் இத்துடன் சேர்க்க வேண்டுமென்பதை'ச' (சூத்திரத்தில்) உணர்த்துகிறது.

**3.1.127** ஆநாய்யோ அநித்யே

நிலையில்லாத (அநித்யே) என்ற பொருளைக் குறிக்கும் ஆநாய்ய என்ற சொல் நிபாதனமாகும்.

ஆங் + நீ + ண்யத் = ஆநாய்ய

ஆநாய்ய: த[3]க்ஷிணாக்னி:

இது ஒருவகையான தக்ஷிணாக்னி. இது க[3]ார்ஹபத்யாக்னியிலிருந்து எடுக்கப்பட்டது. இந்த நெருப்பு எப்போதுமே எரிந்து கொண்டிருப்பதல்ல. அதனால் இதை ஆநாய்ய என்று கூறப்படுகிறது. ஒரு செல்வந்தரான வைசியன் வீட்டிலிருந்தோ அல்லது எரியும் இடத் திலிருந்தோ, க[3]ார்ஹபத்யம் என்ற நெருப்பிலிருந்தோ தக்ஷிணாக்னி எடுத்துக் கொள்ளலாம். ஆனால்

க$^{3}$ார்ஹபத்தியாக்னியிலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டது மட்டும் ஆநாய்யதக்ஷிணாக்னி என்ற பெயர் பெறும்.
எல்லா நிலையற்ற பொருட்களும் ஆநாய்ய என்ற பெயரால் குறிக்கப்படுவதில்லை. மந்திரங்களால் ஏற்றப்பட்ட இத்தக்ஷிணாக்னி மட்டும் இப்பெயர் பெறும். மற்ற பொருளில் அதாவது கொண்டுவர வேண்டும் என்ற பொருளில் ஆநேயமாகும்.

**3.1.128** ப்'ரணாய்யோ அஸம்மதௌ'

'உடன்பாடின்மை கண்டனம் தெரிவி' என்ற பொருளை உணர்த்தும் ப்ரணாய்ய: ஒரு நிபாதனம்
ப்ர – ணீ + ண்யத் = ப்ரணாய்ய:
ப்ராணாய்ய: சோர: 'கண்டிக்கத்தகுந்தவன் திருடன்'
விதிப்படியமைந்த சொல் ப்ரணேய:

**3.1.129** பாய்ய ஸான்யாய்ய நிக'ாய்ய த$^{4}$ாய்யாமான உறவிர் நிவாஸ ஸாமிதே$^{4}$னீஷு

பாய்ய, ஸான்னாய்ய, நிகாய்ய, த$^{4}$ாயயா ஆகிய சொற்கள் முறையே அளவு (மான) அவிசு(உறவிர்), இருப்பிடம் (நிவாஸ) ஒரு ருக்வேத மந்திரம் (ஸாமிதே$^{4}$நீ) என்ற பொருட்களில் விதிக்குப் புறம்பாக ஆக்கப்பட்ட சொற்களாகும்.

1) மாங் + ண்யத் = பாய்யம்
2) ஸம் + நீ + ண்யத் – ஸான்னாய்யம்
3) நி + சி + ண்யத் = நிகாய்யம்
4) த$^{4}$ா + ண்யத் = த$^{4}$ாய்யா

விதிப்படியாக்கப்பட்ட சொற்கள் மேயம், ஸன்னேயம், நிசேயம், தே$^{4}$யம்

**3.1.130** க்ரதௌ கு'ண்ட$^{3}$பாய்ய ஸஞ்சாய்யௌ

'யாகம்' என்ற பொருளில் வரும் கு'ண்ட$^{3}$பாய்ய: ஸஞ்சாய்ய: என்ற சொற்கள் விதிப்படியமையாதவை கு'ண்ட$^{3}$ + பா + யத் = குண்ட$^{3}$பாய்ய: ஒரு யாகத்தின் பெயர் 'பானையால் சோமரஸம் பருகப்படும் இந்த வேள்வியில் என்ற பொருள்.
ஸம் + சி + ண்யத் = ஸஞ்சாய்ய: – ஒரு யாகத்தின்பெயர் இந்த யாகத்தில் ஸோமரஸம் சேர்க்கப்படுகிறது என்ற பொருள்.

**3.1.131** அக்$^{3}$னௌ பரி சாய்யோபசாய் யஸமூஹ்யா:

நெருப்பின் பெயரைக் குறிக்கும் பரிசாய்ய, உபசாய்ய, ஸமூஹ்ய, என்ற சொற்கள் விதிப்படியாக்கப்படாதவை.
பரி + சி + ண்யத் = பரி + சை + ய = பரி + சாய் + ய = பரிசாய்ய:
'ய' – வுக்கு முன் நிற்கும் 'ஐ', 'ஆய்' ஆக மாறுவது விதிப்படியல்ல.
பரிசாய்ய:– வட்டமாக அமைக்கப்பட்டிருக்கும் வேள்வித் 'தீ'
உபசாய்ய: ( = உப + சி + ண்யத்) ஒரு வகையான வேள்வித் 'தீ'

ஸமூஹ்ய: (சம் + வஹ் + ண்யத்) "ஒரு வேள்வித் தீயைக் குறிக்காமல் வரு ம்போது பரிசேயம், உபசேயம், ஸம்வாஹ்யம் முறையே குவிக்க வேண்டும், அதிகரிக்க வேண்டும், எடுத்துக் கொண்டு போகவேண்டும் என்ற பொருட்களை உணர்த்தும்.

**3.1.132** சித்1யாக்3னிசித்1யே ச

சித்1ய, அக்3னிசித்1யா என்ற சொற்களும், வேள்வித்தீ என்ற பொருளில் நிபாதனமாகும்.

சித்1யோ அக்னி: 'இறுதிச் சடங்குக்கான தீ'

அக்னிசித்யா 'அக்னிசயனம்'

**3.1.133** 'ண்வுல் த்1ரு1செள'

ண்வுல் ( =அக), த்1ரு1ச் (த்1ரு1) என்ற ஒட்டுக்கள் தாதுவுடன் இணைக்கப்படும் ண்வுல், த்ரு1ச் ஒட்டுக்கள் கர்த்தாவைக் குறிக்கும் ஒட்டுக்கள்

க்ரு1 + ண்வுல் = கார + உ (7.2.115)=

கார + அக (7.1.1) = காரக: 'செய்பவன்'

க்ரு1 + த்ரு1ச் = கர் + த்ரு1 (7.3.84) கர்த்ரு1 செய்பவன்.

**3.1.134** நந்தி3க்3ரஹி பசாதி3ப்4யோ ல்யுணின்யச:

நந்த்3, க்3ரஹ், பச், ஆகிய வகுப்புக்களைச் சேர்ந்த தாதுக்களுக்குப்பின், முறையே, 'ல்யு', 'ணினி', 'அச்' என்ற ஒட்டுக்களை கர்த்தாவைக் குறிக்கும் பெயர்ச் சொற்கள் ஆக்குவதற்கு இணைக்க வேண்டும்.

நந்த்3 + ல்யு = யு = நந்த்3 + அன (7.1.1) = நந்தன: மகன் (மகிழ்விப்பவன்)

வா: நந்தி3 வா1ஸி மதி3 தூ3ஷி ஸாதி4 வர்தி3தி4
ஸோ1பி4 ரோசிப்4யோ ண்யந்தேப்4ய: ஸம்க்3ஞாயாம்.

நந்த்3, வாஸி1 ஆகிய வார்த்திகத்தில் குறிப்பிட்ட தாதுக்கள் இயக்குவினையாக வரும்போது அவைகள், பெயர்ச் சொல்லைக் குறிப்பதாக அமைந்தால், அவைகளுக்குப் பின் ல்யுட் ஒட்டு இணைக்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| நந்த3ன: | – | மகிழ்விப்பவன் |
| வா1ஸன: | | |
| மத3ன: | – | மன்மதன் |
| தூ3ஷண: | – | ஒரு அசுரனின் பெயர் |
| ஸாத4ன: | | |
| வர்த்3த4ன: | | |
| ஸோ1ப4ன: | | |
| ரோசன: | | |

வா: ஸஹிதபிததமே ஸம்க்ஞாயாம்

இயக்குவினையல்லாதஸஹி,தபிததமிஆகியவைகளுக்குப்பின்னும்'ல்யுட்' ஒட்டு பெயர்ச் சொல்லைத் தருவிக்கஇணைக்க வேண்டும்.

ஸஹன:

தபன: முனிவர்

தமன:

க்ரஹ் + ணினி = இன் – க்ராஹி – பிடித்துக் கொள்பவன்

உத்ஸஹ் + ணினி = இன் = உத்ஸாஹி

வா: ரக்ஷ ஸ்ரு வஸ்பவஸாம் நௌ

'நி'யுடன் சேர்ந்து நிற்கும், ரக்ஷ, ஸ்ரு, வஸ் வப், ஸா ஆகிய தாதுக்களுக்குப்பின் 'ணினி' ஒட்டு வரும்.

நிரக்ஷீ

நிஸ்ரவீ

நிவாஸீ

நிவாபீ

நிஸாயீ

வா: யாசி வ்யாஹ்ரு ஸம்வ்யாஹ்ரு வ்ரஜ் வத் வாஸாம் ப்ரதிஷித்தானாம்.

எதிர்மறைப் பொருளில், யாசி, வ்யாஹ்ரு ஆகிய தாதுக்களுக்குப் பின் 'ணின்' ஒட்டு சேர்க்கப்படும்.

அயாசீ (அயாச + ணினி) யாசிக்காதவன்

| | | |
|---|---|---|
| அவ்யாஹாரீ | – | பேசாதவன் |
| அஸம்வ்யாஹாரீ | – | பேச்சு வார்த்தையில் கலந்து கொள்பவன். |
| அவ்ராஜீ | – | தெரியாதவன் |
| அவாதீ | – | 'பேசாதவன்' |
| அவாஸீ | – | 'வசிக்காதவன்' |

வா: அசாமசித்த கர்த்ரு காணாம்

எதிர்மறைப் பொருளை உணர்த்தும், ஓர் உயிரெழுத்தை ஈறாகக் கொண்ட தாதுக்களுக்குப்பின் 'ணினி' ஒட்டு, இணைக்க வேண்டும்.

அகாரீ (அக்ரு ணினி)

வா: விஸயீ விஷயீ தேஸே

இடம் என்ற பொருளில் விஸயீ, விஷயீ என்ற சொற்கள் 'ணினி' ஒட்டு சேர்க்கப்பட்டுத் தருவிக்கப்பட்டவை.

வா: அபிபாவீ பூதே கடந்தகாலத்தை உணர்த்தும் 'அபிபாவீ' என்ற சொல் நிபாதனமாகும். பச (பச் + அச் = அ) வச, வப

**3.1.135** இகு[3]ப[1]த[4]க்[3]ஞாப்[1]ரீ கிர: க:

'இக்[1]' ப்ரத்யாஹாரத்தைச் சேர்ந்த உயிரை (இ, உ, ரு[1], ல்ரு[1]) ஈற்றயலாகக் கொண்ட தாதுக்களுக்குப் பின்பும், க்[3]ஞா (அறி), ப்[1]ரீ, 'மகிழ்', 'க்ரூ[1]' (சிதறடி) ஆகிய தாதுக்களுக்கு பின்பும் 'க' என்ற ஒட்டு கர்த்தாவைக் குறிக்கும் பெயர்ச் சொல் ஆக்குவதற்கு இணைக்கப்படும்.

விக்ஷிப: (விக்ஷிப் + க = அ)

பு[3]த[4] : (பு[3]த்[4] + க = அ)

க்[3]ஞ (க்[3]ஞா + க = அ – க்ஞ + அ (6.4.64)=

க்ஞ: அறிவாளி

ப்ரிய: (ப்[1]ரீ + க = அ → ப்ர் – இய்,

(6.4.77) + அ = ப்ரிய: 'மகிழ்விப்பவன்'

கிர: (க்ரு[1] + க = அ → க்இர் + அ = கிர:) 'பன்றி'

தேவ, ஸேவ, மேஷ ஆகிய சொற்கள் 'பச்' வகுப்பைச் சேர்ந்தன. இச்சொற்கள் முறையே தி[3]வ், ஸிவ், மிஷ், தாதுக்களிலிருந்து தருவிக்கப்பட்டவை, இத்தாதுக்களின் ஈற்றயல், 'இக்[1]' ப்ரத்யாஹாரத்தைச் சேர்ந்த 'இ'யாகும். ஆனால், இச்சூத்திரத்தின்படி 'க்' ஒட்டைச் சேர்த்தால் தவறான சொற்கள் (தி[3]வ, ஸிவ, மிஷ கிடைக்கும்)

**3.1.136** ஆத[1]ஸ்[1]ச உபஸர்கே[3]

உபசர்க்கத்தோடு சேர்ந்த 'ஆ'வை ஈறாக் கொண்ட தாதுவுக்குப் பின்னும் 'க' இணைக்கப்படும்.

ப்ரஸ்த[2]: (ப்ரஸ்த[2]ா + க) ஒத்து போகிறவன். இச்சூத்திரம் 3.1.40க்குப் புறனடை. இது 'ண' வருவதைத் தடுக்கிறது.

**3.1.137** ப[1]ாக்[4]ராத்[4]மா தே[4]ட்[1] த்[3]ருஸ[1] ஸ[1]:

பா (குடி, அருந்து), க்[4]ரா (முகர்) த்[4]மா (ஊது), தே[4]ட்[1] (உறிஞ்சு), த்[3]ருஸ் (பார்) ஆகிய தாதுக்களுக்குப் பின் 'ஸ' ஒட்டுச் சேர்க்க வேண்டும்.

உத்[1]பி[1]ப[3] : (உத்[1]ப[1]ா + ஸ[1] = அ → உத் பி[1]ப[3] ) (7.3.78) 'குடிப்பவன்'

உஜ்[1]ஜி[2]க்[4]ர: உத்[3]த[4]ம: உத்[3]த[4]ய: உத்[1]ப[1]ஸ்ய:

ஜிக்[4]ரதே: ஸம்க்[3]ஞாயாம் ப்ரதிஷேதோ[4] வக்தவ்ய:

'க்[4]ரா' தாதுவுக்குப்பின் அதிலிருந்து பெறப்பட்ட சொல் ஒரு பெயராக அமையும்போது 'ஸ' ஒட்டு வருதைத் தடை செய்ய வேண்டும்.

வ்யாக்[4]ர: 'புலி'

(வி + ஆ + க்[4]ரா + க = இ)

**3.1.138** அனுபஸர்க[3]ால் லிம்ப விந்த[3] த[4]ாரி

பாரி வேத்[3]யு தே[3]ஜி சேதி[1] ஸாதி[1] ஸாஹிப்[4]யஸ்[1] ச

கீழ்க்கண்ட தாதுக்கள், உபசர்க்கத்தோடு சேராமல், தனித்து வரும்போது அவைகளுக்குப்பின் 'ஸ' என்ற ஒட்டு இணைக்க வேண்டும்.

லிம்ப: (லிப் + ஸ[1] = அ) 'பூசுபவன்'

விந்த³: (வித் + ஸ[1] = அ) 'கிடைக்கப் பெற்றவன்'
த⁴ராய: (த⁴ாரி + ஸ[1]) 'தாங்குபவன்'
ப'ாராய: (பாரி + ஸ[1]) 'கரைகண்டவர்'
வேத³ய: (வேதி³ + ஸ[1]) 'அறிவிப்பவர்'
உதே³ஜய: (உத் – ஏஜி + ஸ்) 'ஆட்டுபவர்
சே'த'ய: (சித் + ணிச் = சிதி + ஸ்) 'உணர்பவர்'
ஸாதய: (ஸாத் + ஸ[1]) உதவியாளர்
ஸாஹய: (ஸாஹி + ஸ[1]) ஆதரவாளர்

வா: நௌ லிம்பேரிதி, வக்தவ்யம்.
'நீ' உபசர்கத்துடன் கூடிய 'லிப்' என்ற தாதுவுக்குப்பின் 'ஸ[1]' வரும்.
நிலிம்பா நாம தே³வா: சில கடவுள்களின் பெயர்.

வா: க³வாதி³ஷு விந்தே³ ஸம்க்³ஞாயாம்
'கோ' முதலிய சொற்களுடன் சேர்ந்து நிற்கும் 'விந்த³' என்ற தாதுவின் பின் 'ஸ' என்ற ஒட்டை ஒரு பெயரைக் குறிக்கும் சொல்லாக தருவிக்கப்பட்ட சொல் அமையும்போது, இணைக்க வேண்டும். கோ³விந்த³ :அரவிந்த³:

**3.1.139** த³த³ாதி[1] த³த⁴ாத்யோ: விப⁴ாஷா
உபசர்க்கத்தோடு சேராமல், தனியாக வரும் த³ா (கொடு) தா⁴ (தாங்கு) என்ற தாதுக்களுக்குப்பின் 'ஸ[1]' விருப்பாக வரும்.
இது 'ண' ஒட்டைச் சேர்ப்பதற்குத் தடை விதிக்கிறது.
த³த³: (த³ா + ஸ[1], த³ாத³ா (6.1.17), த³த³ா அ → த³த்³அ (6.4.112) = த³த³ 'கொடையாளி'
அல்லது த³ாய: (த³ா + ண) பரம்பரைச் சொத்து
த³த⁴: (த⁴ா + ஸ) 'தாங்குபவன்'
த⁴ாய: (த⁴ா + ண) 'தாங்குபவன்'

**3.1.140** ஜ்வலிதி கஸந்தேப்⁴யேண:
(உபசர்க்கமில்லாமல் தனியாக நிற்கும்) ஜ்வல் (ஒளிவிடு) என்ற தாதுவில் தொடங்கி, கஸ் (போ) என்ற தாதுவில் முடியும் வகுப்பைச் சேர்ந்த, எல்லா தாதுக்களுக்குப்பின் 'ண' என்ற ஒட்டை விருப்பாக சேர்த்து கருத்தாவைக் குறிக்கும் பெயர்ச் சொல் தருவிக்கப்படும்.
இது அச் ஒட்டுக்குப் புறனடை
ஜ்வால: ஜ்வல் + ண = அ = ஜ்வால:அல்லது ஜ்வல: (ஜ்வல் + அச் = அ) 'எரிதல்', 'ஒளிவிடுதல்' இதில் கூறப்பட்ட தாதுக்கள் மொத்தம் 56. இவை 'ப்⁴வாதி' வகுப்பைச் சேர்ந்தவை.
'ண' ஒட்டின் 'ண்' ஒரு 'இத்', ஈற்றயல் உயிரை, இந்த 'இத்' விருத்தியாக்கும். ஆனால், உபசர்க்கத்துடன் சேர்ந்து வரும் தாதுக்களுக்குப் பின் 'அச்' தான் இணைக்க வேண்டும்.

வா: தனோதே: ணஸ்ய உப்ஸம்க்[2]யானம்

தன் (விரி) என்ற தாதுவுக்குப்பின்னால் 'ண' வரவேண்டுமென்று கூற வேண்டும்.

'விருப்பாக' (விப[4]ாஷா) உபசர்க்கமில்லாமல் (அனுபஸர்காத்) ஆகியவை இந்த வினைக்கு இல்லை.

அவதான: (அவதன் + ண) 'விரித்து வைப்பவர்'

**3.1.141** ஸ்'யாத்[3] வ்யத[4]ாஸ்ரு[1] ஸம்ஸ்ருவதீண

வஸா[1] ஹ்ரு[1] லிஹ ஸ்'லிஷஸ்[1] வஸஸ்[1] ச

ஸ்'யா (போ), 'ஆ'வில் முடியும் தாதுக்கள், வ்யத்[4] (துளைத்து, உட்செல்) ஆஸ்ரு[1], ஸம்ஸ்ரு[1] (ஊறு) அதி + இண் (மீறு), அவ + ஸா (முடி) அவஹ்ரு[1] (எடுத்துக் கொள்) லிஹ்(நக்கு)ஸ்லிஷ்(அணை, கட்டிக்கொள், பிடி) ஸ்'வஸ் (மூச்சுவிடு) ஆகிய தாதுக்களுக்குப்பின்னும், 'ண' ஒட்டு, கர்த்தாவைக் குறிக்கும் சொல்லைத் தருவிக்க இணைக்க வேண்டும்.

அவஸ்'யாய: அவ + ஸ்'யை = ஸ்'யா + ண = அ

அவ + ஸ்'யா + ய் + அ (7.3.23) = அவஸ்யாய

'ஸ்'யை' என்ற தாது, ஒட்டுக்கள் தொடரும்போது ஸ்'யா வாக மாறும் (6.1.45) ஆகையால் 'ஆ'வை ஈறாகக் கொண்ட தாதுக்கள் (ஆத்) என்பதில் இது அடங்கும். இதைத் தனியாகப் பிரித்துக் கூறுவதின் பயன் என்ன, 'ண' ஒட்டைச் சேர்ப்பதற்குத் தடை விதிக்கும் எல்லாவிதியும் இதில் பயன்படுத்தக்கூடாது என்று உணர்த்த இதைத் தனியாகக் குறிப்பிட்டிருக்கிறது. இதை ப3ாத4க43ாத4னம் என்று கூறுவார்கள். அதாவது தடை விதிக்குத் தடை.

காட்டாக 3.1.136, உபசர்க்கத்துடன் கூடிய 'ஆ'வை இறுதியாகக் கொண்ட தாதுக்களுக்குப்பின் 'க' ஒட்டை

தாதுக்களுக்குப்பின் 'க' ஒட்டை இணைக்க வேண்டுமென்று கூறுகிறது. ஆனால் இந்த விதி 'ஸ'யா'வுக்குப் பயன்படுத்தக் கூடாது.

| | | |
|---|---|---|
| அவஸ்'யாய: | – | 'உறைபனி' |
| ப்ரதிஸ்'யாய: | – | 'உறைபனி' |
| த[3]ாய: | – | பரம்பரை உடைமை |
| த[4]ாய: | – | தாங்குபவன்/ஆதரவாளர் |
| வ்யாத[4]: | – | வேட்டைக்காரன் |
| ஆஸ்ராவ: | – | நீர்வெளியேறுதல், சளி |
| ஸம்ஸ்ராவ: | – | ஒன்றாகப் பாய்தல், சந்திப்பு |
| அத்யாய: | – | வரம்பு கடத்தல் |
| அவஸாய: | – | முடிவு |
| அவஹார : | – | எடுத்துக் கொள்பவன் |
| லேஹ: | – | நக்குபவன் |
| ஸ்'லேஷ: | – | அணைப்பவன் |
| ஸ்வாஸ : | – | 'மூச்சு' |

**3.1.142** து$^{3}$ன்யோரனுபஸர்கே$^{3}$

உபசர்க்கமில்லாமல், தனியாக நிற்கும் து$^{3}$(எரி), நீ (முன்செல்) என்ற தாதுக்களுக்குப்பின் 'ண' வரும்.

த$^{3}$ாவ: (து$^{3}$ + ண = அ) 'காட்டுத்தீ'

நாய: (நீ + ண = அ) 'தலைவன்'

ஆனால், ப்ரத$^{3}$வ: ப்ரணய: 'காதலன்'

**3.1.143** விப$^{4}$ாஷா க்$^{3}$ரஹ:

'க்$^{3}$ரஹ்' (பிடி)என்ற தாதுவுக்குப்பின் 'ண' விருப்பாக வரும்.

இது 'அச்' (3.1.134)க்குப் புறனடை

க்$^{3}$ராஹ: (க்$^{3}$ராஹ் + ண = அ) முதலை

க்$^{3}$ரஹ: 'கிரஹம் (சோதிடத்தில்) க்$^{3}$ரஹ் + அச்

வா:. ப$^{4}$வதேஸ்$^{1}$ ச இதி வக்தவ்யம்

'பூ$^{4}$' என்ற தாதுவுக்குப் பின்னும் 'ண' விருப்பாக வரும்.

ப$^{4}$ாவ: (பூ$^{4}$ + ண = அ) 'நிலைமை'

ப$^{4}$வ: (பூ + அச் = அ)

**3.1.144** கே$^{3}$ஹே க:

க்$^{3}$ரஹ் (பிடி) என்ற தாதுவுக்குப்பின் அதனால் தருவிக்கப்பட்ட சொல் 'வீடு' என்ற பொருளை உணர்த்தும்போது 'க' ஒட்டு வரும்.

க்$^{3}$ரு$^{1}$ஹம் – 'வீடு' (க்$^{3}$ரஹ் + க = அ)

**3.1.145** ஸி$^{1}$ல்பினி ஷ்வுன்

ஒரு தாதுவுக்குப்பின் 'ஷ்வுன்' ஒட்டு, அதனால் தருவிக்கப்பட்ட சொல் 'கலைஞன்' என்ற பொருளை உணர்த்தும்போது இணைக்க வேண் டும்.

வா ந்ரு$^{1}$தி க$^{2}$னி ரஞ்ஜிப்$^{4}$ய: பரிக$^{3}$ணனம் கர்தவ்யம்

இந்த ஒட்டு, அ தாவது ஷ்வுன், ந்ரு$^{1}$த், 'நாட்டியமாடு' க$^{2}$ன் (தோண்டு) ரஞ்ஜ் (சாயம் ஏற்று) ஆகிய மூன்று ஒட்டுக்களோடு மட்டுந்தான் சேர்க்க வே ண்டும்.

ந்ரு$^{1}$த் + ஷ்வுன் = உக: = நர்தக: 'நாட்டியக்காரன்'

நர்தகீ (பெண்பால்)

க$^{2}$னக: 'தோண்டுபவர், க$^{2}$னகீ (பெண்பால்)

ரஜக: 'வண்ணான்' ரஜகீ (பெண்பால்)

**3.1.146** க$^{3}$ஸ்த$^{2}$கன்

கை$^{3}$ (பாடு) என்ற தாதுவுக்குப்பின், த$^{2}$கள் = (த$^{2}$க) என்ற ஒட்டு, தருவிக்கப்பட்ட சொல், கலைஞன் என்ற பொருளை உணர்த்தும்போது இணைக்கவேண்டும்.

க$^{3}$ாத$^{2}$க: (கை$^{3}$ + த$^{2}$கன் = த$^{2}$க) 'பாடகன்'

க$^{3}$ாத$^{2}$கீ (பெண்பால்)

**3.1.147** ண்யுட்[1] ச

மேலே குறிப்பிட்ட பொருளில், 'கை[3]', என்ற தாதுவுக்குப் பின்னும் 'ண்யுட்' ஒட்டும் வரும்.

கை[3] + ண்யுட்ஷ்யு = அன → க[3]ாயன: 'பாடகன்'

க[3]ாயனீ (பெண்பால்)

**3.1.148** ஹஸ்'ச வ்ரீஹிகாலேயோ:

'ஹா' என்ற தாவுக்குப்பின்னும் 'ண்யுட்' ஒட்டு இணைக்கப்படும். தருவிக்கப்பட்ட சொல், 'அரிசி', 'காலம்' என்ற பொருளைக் குறிக்கும்.

ஹா + ண்யுட்ஷயு=அன=ஹாயன ஒருவகையான அரிசி, ஆண்டு இவ்விரண்டு சொற்களிலும் சுரம் மாறுபடும்.

**3.1.149** ப்ருஸ்ருல்வ: ஸமபி[4]ஹாரோவுன்

ப்ரு(போ) ஸ்ரு[1] (இயங்கு) லூ (வெட்டு) ஆகிய தாதுக்களுக்குப்பின், 'வுன்' என்ற ஒட்டு, 'சிறந்த' என்ற பொருளை உணர்த்தும் ப்ரவக: (ப்ரு + வுன் = அக) 'நன்றாக முன்னேறுகிறவன்'

ஸரக: 'நன்றாக இயங்குபவன்'

லவக: நன்றாக வெட்டுபவன்

**3.1.150** ஆ[1]ஸிஷிச

'ன்' ஒட்டு, 'வாழ்த்துதல்' என்ற பொருளைக் குறிக்கும் போது எல்லா தாதுக்களுக்குப் பின்னாலும் வரும்.

ஜீவக: 'வாழட்டும்'

நந்த[3]க: 'மகிழட்டும்'

**3.2.1** க[1]ர்மணி அண்

செயப்படுபொருளை (கர்மன்) உபபதமாகக் கொண்ட தாதுவுக்குப்பின் 'அண்' (க்ருத் ஒட்டு) இணைக்க வேண்டும். கர்மனை, நிவர்த்யம், விகார்யம், ப்ராப்யம் என்று 3 வகையாகப் பிரிக்கலாம். நிவர்த்யமென்பது முதலில் இல்லாத ஒன்றை உருவாக்குவது. காட்டாக – கு[1]ம்ப[4]கார: 'குயவன்' என்ற தொகையில், கும்ப[4]ம் 'பானை' உபபதம் க[1]ார:= க்[1]ரு[1] + அண் உபபதமாக நிற்கும் கு[1]ம்ப[4]ம் என்ற சொல் செயப்படுபொருள் விகார்யம் என்பது, முதலில் இருக்கும் பொருளை மாற்றமடையச் செய்வது, காண்டலாவ: 'கிளைவெட்டுபவன்' (காண்டம் + லூ + அண்) ப்ராப்யம் என்பது, இல்லாத ஒன்றை உருவாக்குவதோ அல்லது இருக்கிற பொருளை மாற்றமடையச் செய்வதோ அல்ல. இவ்விரண்டுமே அல்லாமல், செயலினால் மாத்திரம் புலப்படுவது. காட்டாக, வேத[3]ாத்யாய:– 'வேதம் படித்தல்'. வேத[3]ம் + அதி[4] – ஈங் + அண். இங்கு, வேதம் நிரந்தரமாக உள்ளது. இதில் மாற்றம் எதுவும் நிகழவில்லை. 'படிப்பது' என்ற வினை, படித்தல் என்ற செயலை மாத்திரம் குறிக்கிறது.

வா: ஸீ^1லிகாமி ப^4க்ஷ்ய ஆசரிப்^4யோ ண பூர்வ பத ப்ரக்ரு^1தி ஸ்வரத்வம் ச வக்தவ்யம்

ஸீ^1லி, காமி, ப^4க்ஷ்ய், ஆசர் என்ற தாதுக்களுக்குப்பின் ண வரும். இத்தாதுக்களுடன் நிற்கும் பெயர்ச் சொல் அதன் சுரத்துடன் வரும் (ப்ரக்^1ரு^1திஸ்வரம்)

மாம்ஸஸீல: மாம்ஸம் + ஸீ^1ல + ண = அ

மாமிசம் சாப்பிடும்(கெட்ட)பழக்கத்திற்கு அடிமையான;

மாம்ஸகாம: (மாம்ஸம் + காமி (கம் + ணிச்) + ண = அ)

'மாமிசத்தை விரும்புகிற' மாம்ஸப^4க்ஷி (மாம்ஸம் + ப^4க்ஷி (ப^4க்ஷ + ணிச்) + ண = அ)

கல்யாணாசார: (கல்யாணம் + ஆசர் + ண = அ)

'நன்னடத்தையுள்ளவன்'

இந்த எடுத்துக்காட்டுகளில், மாமிசம், கல்யாணம் ஆகிய சொற்கள் உபபதங்கள்

வா: ஈக்ஷி க்ஷமிப்^4யாம் சேதி வக்தவ்யம்

ஈக்ஷ், க்ஷம், ஆகிய தாதுக்களுக்குப்பிறகும் (அதே சூழலில்) 'ண' வர வேண்டும் என்று கூற வேண்டும்.

ஸுக^2ப்^1ரதீ^1க்ஷ: (ஸுக^2ம் + ப்ரதி – ஈக்ஷ் + ண = அ)

'மகிழ்ச்சியை எதிர்பார்க்கிற'

ப^3ஹுக்ஷம: 'மிகவும் பொறுமையுள்ள'

**3.2.2** ஹ்வா வா மஸ்^1ச

ஹ்வா, (அழை), வா (நெய்), மா(அள) ஆகிய தாதுக்களுடன் அவைகளின் செயப்படுபொருளாக அமையும் பெயர்ச் சொற்கள், உபபதமாக நிற்கும்போது இத்தாதுக்களுடன் 'அண்' ஒட்டு வரும்.

ஸ்வர்க^3ஹ்வாய: 'சுவர்க்கத்தை யழைப்பவன்'

ஸ்வர்க^3ம் + ஹ்வே – ஹ்வா + அ = ஸ்வர்க^3ம்

ஹ்வா – ய் + அ (7.3.33)

தந்துவாய: (தந்தும் + வே + அ = தந்தும் வா ய் + அ = தந்துவாய) 'நெசவாளர்'

த^4ான்யமாய: ( = த^4ான்யம் + மா + அ) 'தானியத்தையளப்பவன்' இச்சூத்திரம் 'க' வருவதைத் தடுக்கிறது (3.2.3)

**3.2.3** ஆதோ அனுபஸர்கே^3 க:

'ஆ'வை இறுதியாகவும், உபசர்க்கமில்லாமலும் அமையும் தாதுக்களுக்குப்பின் மேற் குறிப்பிட்ட சூழலில் 3.2.1) 'க' என்ற (க்ரு^1த்)ஒட்டு வரும்.

இது 'அண்' வருவதைத் தடை செய்கிறது

கோ^3த^3 : (க^3ாம் + த^3ா + க = அ = கோ^3த^3ா + அ

கோ^3த + அ (6.4.64) = கோ^3த^3 : 'பசுவைக் கொடுப்பவன்'

அங்கு$^{3}$லித்ரம் ( = அங்கு$^{3}$லித்ரை + அ = அங்குலித்ரா (6.1.45)
அங்குலித்ரம் 'விரல் முனைப்பூண்'
ஆனால்
கே$^{3}$ாஸந்த$^{3}$ாய: (கே$^{3}$ா + ஸம்த$^{3}$ா + அண் = அ)
'பசு தானம் செய்பவன்'

**3.2.4** ஸுபி ஸ்த$^{2}$:
ஒரு வேற்றுமைச் சொல்லை உபபதமாகக் கொண்டு நிற்கும் ஸ்த$^{2}$ா (நில்) என்ற தாதுவுக்குப்பின் 'க' ஒட்டு வரும்.
ஸமஸ்த$^{2}$ = ஸமே (7) திஷ்ட$^{2}$தி 'அணுகக்கூடியவன்' இதற்கு முன் கூறப்பட்ட3 சூத்திரங்களிலும் உபபதமாக வரும் சொல், 2ஆம் வேற்றுமைச் சொல்லாக அமையும். இச்சூத்திரம், ஸ்த$^{2}$ா என்ற தாதுவுடன் வரும் உபபதம் எந்த வேற்றுமையிலும் அமையலாம் என்று உணர்த்துகிறது.
இச்சூத்திரத்தை இரண்டாகப் பகுத்துவிளக்க வேண்டும்

(யோக$^{3}$லிப$^{4}$ாக$^{3}$)
1) ஸுபி 'க' என்ற ஒட்டு, 'ஆ'வை ஈறாகக் கொண்ட தாதுவுக்குப்பின் (வேற்றுமைச் சொல்லை உபபதமாகக் கொண்டு நிற்கும்போது) இணைக்க வேண்டும்.
த்$^{3}$விப: (த்$^{3}$வி + பா + க = அ (6.4.64)
'இரண்டு அவயவங்களால் குடிப்பவன்' அதாவது யானை
பாத$^{3}$ப: மரம், (பாத + பா + க = அ)
கச$^{1}$ச$^{2}$ப: (கச$^{1}$ச$^{2}$ + பா + க = அ) 'ஆமை'
2) ஸுபிஸ்த$^{2}$ : மேலே விளக்கப்பட்டது
இவைகள் இரண்டிலும், 'ஆ'வை ஈறாகக் கொண்ட தாதுக்கள்தான் கூறப்பட்டிருக்கின்றன. ஆகையால், இவைகளைத் தனித்தனியாகப் பிரிப்பதனால் என்ன பயன், முதலில் விளக்கப்பட்ட விதி, கர்த்தாவைக் குறிக்கிறது. இரண்டாவது ஒரு நிலைமையையும் குறிக்கலாம் என்று உணர்த்துகிறது.
ஆக்ஷி$^{2}$த்$^{1}$த$^{2}$ : (ஆக்ஷி$^{2}$ + உத் + ஸ்தா + க = அ) எலிக்கூட்டம் ஸ$^{1}$லபே$^{4}$ாத்$^{1}$த$^{2}$ 'வெட்டுக்கிளி கூட்டம்'
இதைத் தொடர்ந்து வரும் சூத்திரங்களில் 'கர்மணி' 'ஸுபி' என்ற இரண்டு சொற்களுமே அனுவ்ருத்தி மூலம் பயன்படுத்தலாம். செயப்படுபொருள் குன்றாவினைகளோடு 'கர்மணி' என்ற சொல்லும், செயப்படுபொருள் குன்றிய வினைகளோடு 'ஸுபி' என்ற சொல்லையும் சேர்த்துக் கொண்டு அவைகளை விளக்க வேண்டும்.

**3.2.5** து$^{1}$ந்த$^{3}$ ஸோ$^{1}$க$^{1}$யே: பரிம்ருஜ$^{1}$ா பநுதே$^{3}$ா:
பரிம்ருஜ்(கழுவு), அப$^{1}$நுத்$^{3}$(விரட்டு) என்ற தாதுக்கள் முறையே து$^{1}$ ந்த$^{3}$ (தொப்புள்), ஸோக (வருத்தம்) ஆகிய சொற்கள், செயப்படுபொருட்களாக,

அவ்வினைகளுடன் கூட வரும்போது, 'க' என்ற ஒட்டு அத்தாதுக்களுக்குப்பின் வரும்.

து'ந்த[3] பரிம்ரு'ஜ': ஆஸ்தே – 'சோம்பேறியாக உட்கார்ந்திருக்கிறான்'.

ஸோ'காபநுத[3] : புத்'ர ஜாத: 'வருத்தத்தை விரட்டும் மகன் பிறந்திருக்கிறான்'.

வா: ஆலஸ்ய ஸுக[2]ாஹரணமிதி வக்தவ்யம்

சோம்பேறி, மகிழ்ச்சியளிப்பவன் என்ற பொருட்களைத் தருவிக்கப்பட்ட சொல் உணர்த்தும்போது மட்டுந்தான் இந்த ஒட்டைப் பயன்படுத்த வேண்டும்.

மற்ற இடங்களில் து'ந்த[3] பரிமார்ஜ[1] : (இங்கு அண்) ஸோ'க'ப நோத[3] : (இங்கு அண்)

து'ந்த[3]'பரிம்ரு'ஜ[1] : சோம்பேறி

து'ந்த[3]ப'ரிமார்ஜ[1] : தொப்புளை கழுவுகிறவன்

ஸோ'க'ப'நுத[3] : மகிழ்ச்சியளிப்பவன்

ஸோ'காபநோத[3] : மகிழ்ச்சியளிப்பவன்

வா: க'ப்'ரக'ரணே மூலவிபு[4]ஜாதி[3]ப்[4]ய: உப'ஸங்க்[2]யானம் மூலவிபு[4]ஜ[1] (தேர்) முதலிய சொற்களையும் 'க' ஒட்டைச் சேர்த்துத் தருவிக்கப்பட்ட சொற்களோடு சேர்க்க வேண்டும்.

நக[2]முச': – வில்

க'ா'க்கு'ஹ : – 'எள்'

கு'முத[3]ம் – அல்லி

**3.2.6** ப்'ரே த[3]ாக்[3]ஞ:

த[3]ா(கொடு), க்[3]ஞா (அறி) என்ற தாதுக்கள் 'ப்ர' என்ற உபசர்க்கத்துடன் சேர்ந்து, செயப்படு பொருளைக் குறிக்கும் பெயர்ச் சொல்லுடன் வரும்போது அத்தாதுக்களுக்குப் பிறகு 'க' என்ற ஒட்டு இணைக்கப்படும்.

ஸர்வப்'ரத[3]: 'எல்லாவற்றையும் கொடுப்பவன்'

பதி[2]ப்'ரக்[3]ஞ: 'பாதை தெரிந்தவன்'

3ஆம் சூத்திரத்திலிருந்து, 'க' ஒட்டை, 'ஆ'வை இறுதியாகக் கொண்ட தாதுக்கள் உபசர்க்கமில்லாமல் வரும்போது இணைக்க வேண்டும் , என்று விதி பெறப்பட்டது. இச்சூத்திரத்திலிருந்து உபசர்க்கத்தோடு வரும் தாதுக்களுக்குப்பின் க இணைக்க வேண்டுமென்று பெறப்படுகிறது. இது அண் ஒட்டுக்குத் தடைவிதிக்கிறது.

மற்ற உபசர்க்கத்துடன் வரும்போது 'அண்' ஒட்டுத்தான் இணைக்கப்படும்.

கோ[3]ாஸந்த[3]ாய: ('அண்' ஒட்டுடன்)

**3.2.7** ஸமிக்[2]ய:

க்[2]யா (கூறு) என்ற தாது 'ஸம்' என்ற உபசர்க்கத்துடன் (செயப்படுபொருளைக் குறிக்கும் பெயர்ச் சொல்லை உபபதமாகக் கொண்டு) வரும்போது 'க' ஒட்டு இணைக்கப்படும்.

கோ[3]ா ஸம்க்[2]ய: 'மாட்டு இடையன்'

க3ாம் ஆச1ஷ்டே2 கே3ாஸம்க்2ய:
(க3ாம் – ஸம் – க்2யா + க = அ)
இங்கு குறிப்பிட்ட தாது 'ஆ'வை ஈறாகக் கொண்டமைவதால் 'அண்' இங்கு வரவேண்டும் (3.2.3) இச்சூத்திரம் 'அண்' ஒட்டுக்குத் தடைவிதிக்கிறது.

**3.2.8** க3ாபே1ாஷ்ட1க்

க3ா (பாடு) பா1(குடி) என்ற தாதுக்கள் உபசர்க்கமில்லாமல் தனித்து வரும்போது 'ஷ்டக்' என்ற (க்ருத்1) ஒட்டு (செயப்படுபொருளைக் குறிக்கும் பெயர்ச் சொல் அத்துடன் உபபதமாக நிற்கும்போது) இணைக்க வேண்டும்.
ஸ1க்ரக3 : (ஸ1க்1ரம் க3ாயதி) = ஸ1க்ர + க3ா + ஷ்ட1க், ஸ1க்ர என்ற பெயரால் குறிக்கப்படும் ருக்கைப் பாடுபவன்.
ஸாமக3 : ஸாமம் பாடுபவன்
வா: ஸுராஸு1த்4வோ பி1ப3தேரிதி வக்தவ்யம்
ஸுரா, ஸு1து4 என்ற சொற்களை உபபதமாகக் கொண்டு வரும்போதுதான் 'பா' என்ற தாதுவுக்குப்பின் ஷ்ட1க் இணைக்க வேண்டும்.
ஸுராப 'மது அருந்துபவன்' ஸுராபி (பெண்பால்) ஸீ1து4ப; 'சாறு அருந்துபவன்' ஸீ1து4பி (பெண்பால்) ஆனால் க்ஷீரபா ப்3ராஹ்மணீ 'பால் அருந்தும் பிராம்மணத்தி'
இது 'க' என்ற ஒட்டு 'பா' என்ற தாதுவுடன் சேர்க்கப்பட்டு ஆக்கப்பட்ட சொல். இதன் பெண்பால் 'ஆ'வை இணைத்துப் பெறப்பட்டது. 'ஈ' அல்ல.

வா: அருந்துதல் என்ற பொருளைக் குறிக்காமல் காத்தல், என்ற பொருளைக் குறிக்கும்போது க ஒட்டுத்தான் இணைக்க வேண்டும்.
ஸுராபா (ஸுராம் பாதி) = 'மதுவைக் காப்பாற்றுபவன்'
இந்த வினைகளை உபசர்க்கத்தோடு பயன்படுத்தினால் அண் தான் வரும் ஷ்டக் அல்ல
ஸ1க்1ர ஸங்க3ாய: ஸாமஸங்க3ாய:

வா: ப3ஹுலம் ச3ந்த3ஸீதி வக்தவ்யம்
வேதமொழியில் இந்த ஒட்டுக்கள் வெவ்வேறு வகையில் பயன்படுத் தப்பட்டுள்ளன.
யாப்3ராஹ் மணீ ஸுரா1ப4வதி
ந ஏனாம் தே3வா: பதிலோகம் நயந்தி/ யா ப்3ராஹ்மணீ ஸுரா1பா ப4வதி ந ஏனாம் தே3வா: ப1தி லோகம் நயந்தி

**3.2.9** ஹரதே: அனுத்3யமனே அச்

'ஹ்ரு1': என்ற தாது மேலே தூக்குதல் என்ற பொருளைக் குறிக்காமல் அமைந்து, அத்துடன் அதன் செயப்படுபொருள் நிற்கும்போது 'அச்' என்ற (க்ரு1த்) ஒட்டு இணைக்கப்படும்.
இது 'அண்' வருவதைத் தடுக்கிறது.

அம்ஸ்1ஹர: ஒரு பங்கு எடுத்துக் கொள்பவன்
ரிக்த2ஹர: 'வாரிசு'
அம்ஸ் – ஹ்ரு + அச் = அ = அம்ஸ1ஹர (8.3.84)
ஆனால் ப4ார ஹார: 'கனத்தைத் தூக்குபவன்' இச்சொல் 'அண்' ஒட்டு 'ஹ்ரு' வுடன் சேர்க்கப்பட்டு ஆக்கியது.

வா: அச்ப்1ரக1ரணே ஸ1க்தி லாங்க3ல அங்கு1ஸ் யஷ்டி1 தே1ாமர க4ட க4டீ1 த4னுஷ்ஷு க்3ர ஹேஷு உபஸங்க்2யானம்.
'க்ரஹ்' என்ற தாது, ஸ1க்தி, லாங்கல, அங்கு1ஸ த4னுஸ் ஆகிய சொற்களை உபபதமாகக் கொண்டு நிற்கும்போது, 'அச்' இத்தாதுவுக்குப் பின் வரும் என்று கூறவேண்டும்.
ஸ1க்திக்3ரஹ: 'ஈட்டி தாங்கும் குதிரைப்படை வீரன்'
லாங்க3லக் 3ரஹ 'உழவன்'
அங்கு3ஸக்3ரஹ: 'யானைப் பாகன்'
யஷ்டி1க்3ரஹ: 'கோல் தூக்குபவர்'
தே1ாமரக்3ரஹ : 'தடி தூக்குபவர்'
க4டீக்3ரஹ: 'பானை தூக்குபவர்'
த4னுர்க்3ரஹ: 'வில்லாளி'

வா: ஸூத்1ரே ச த4ார்யர்தே2
சூத்திரம் (கயிறு) என்ற சொல்லை உபபதமாகக் கொண்டு த4ாரி (பிடி) என்ற பொருளைக் குறிக்கும்போது 'க்3ரஹ'வுக்குப்பின் 'அச்' வரவேண்டும்.
ஸூத்ரக்3ரஹ: 'நூல் பிடிப்பவன்'
ஸூத்ரக்3ராஹ: 'நூலை எடுத்துக் கொள்பவன்'
என்று பொருளைக் குறிக்கும்போது 'அண்' வரும்.

**3.2.10** வயஸி ச
'ஹ்ரு' தாதுவுடன் அதன் செயப்படு பொருள் நின்று, அதிலிருந்து தருவிக்கப்படும் சொல் ஒரு வயதைக் குறிக்குமாறு அமையும்போது, அத்தாதுவுக்குப்பின் 'அச்' ஒட்டு இணைக்க வேண்டும்.
இங்கு, உத்யமன 'உயர்த்து' என்ற பொருளைக் குறிக்கிறது.
காலம் சுழல்வதால், உடல்நிலையில் ஏற்படும் இளைஞன் போன்ற தன்மையை வயது என்ற சொல் குறிக்கும். 'ஹ்ரு'வுடன் நிற்கும் உபபதத்தினால் குறிக்கப்படும் நிலைமைக்குத் தகுந்த வயதை ஒருவன் அடைந்துவிட்டான் என்று குறிப்பிட, இச்சூத்திரம் வழிவகுக்கிறது. காட்டாக அஸ்தி2ஹர: ஸ்1வா
எலும்பு கடிக்கக்கூடிய நாய்
அதாவது எலும்பைக் கடிக்க இயலும் வயதையடைந்த நாய்
கவசஹர: க்ஷத்1ரியகுமார;
கவசத்தையணிந்து கொள்ளும் வயதையடைந்த க்ஷத்திரிய குமாரன்.

**3.2.11** ஆநி தாச்[1] சீ2ல்யே

'ஆங்' என்ற உபசர்க்கத்துடன் சேர்ந்து நிற்கும் 'ஹ்ரு' தாதுவுக்குப்பின் (அதனுடன் செயப்படுபொருள் உபபதமாக வரும்போது) ஆக்கப்பட்ட சொல், ஒருவனுடைய வழக்கமான தொழில் அல்லது இயல்பான செய்கை என்ற பொருளைக் குறிக்கும்போது, 'அச்' என்ற ஒட்டு இணைக்க வேண்டும்.

புஷ்பாஹர: (புஷ்ப+ஆ+ஹ்ரு+அச்=அ) 'பூ சேகரிப்பவன்'

ப[2]லாஹர:

ஆனால் ப்ராராஹார: 'மூட்டை தூக்குபவன்'

இங்கு 'அண்' ஒட்டு வரும். பூ, பழங்களைச் சேகரிப்பது ஒருவகை இயல்பு என்று பொருளைக் குறிக்க 'அச்' இணைக்க வேண்டும். ப்ராராஹார அந்த இயல்பு (தாச்[1]சீல்ய) உள்ளவன் என்ற பொருளை உணர்த்தாது.

**3.2.12** அர்ஹ :

'அர்ஹ' (மதி) என்ற தாது, அதன் செயப்படுபொருளோடு சேர்ந்து வரும்போது 'அச்' ஒட்டு அத்தாதுவுக்குப்பின் இணைக்கப்படும்.

பூஜார்ஹா 'மரியாதைக்குரியவள்'

இவ்வாறு ஆக்கப்பட்ட சொற்கள் பெண்பாற்பெயர் சொற்களாகும். இச்சூத்திரம் 'அண்' ஒட்டு வருவதற்குத் தடை விதிக்கிறது.

**3.2.13** ஸ்த'ம்ப[3] க'ர்ணயோரமிஜபோ:

வேற்றுமையுருபுகளோடு (ஸுபி) சேர்ந்து ஸ்த'ம்ப[1], க'ர்ண ஆகிய சொற்கள் முறையே, ரம், ஜப் என்ற தாதுக்களின் உபபதமாக அமையும்போது அத்தாதுக்களுக்குப்பின் 'அச்' இணைக்க வேண்டும்.

ரம், ஜப் என்ற தாதுக்கள் செயப்படுபொருள் குன்றிய வினைகள். ஆகையால் இத்துடன் உபபதமாக வரும்சொல், செயப்படுபொருளாக முடியாது. ஆனால் 'ஸுபி' என்ற சொல்லை கு. 'விருந்து அனுவ்ருத்தி' மூலம் சேர்த்து இச்சூத்திரம் விளக்கப்பட்டிருக்கிறது.

வா: ஹஸ்தி ஸுச'கயோரிதி வக்தவ்யம்

அவ்வாறு ஆக்கப்பட்ட சொற்கள் முறையே யானை என்ற பொருளைக் குறிப்பதாக அமைய வேண்டும். ஸ்த'ம்பே'ரம: (ஸ்த'ம்பே'ரமதி) 'யானை' அதாவது புற்களில் விளையாடுபவன்.

கர்ணேஜப': (கர்ணே ஜபதி)

'காதில் ஓதுபவன்' அதாவது அவதூறு கூறுபவன் மேற்கூறிய பொருளைக் குறிக்காவிட்டால், தருவிக்கப்பட்ட சொல் ஸ்த'ம்பே'ரந்தா. கர்ணேஜபி'தா 'கொசு' இவைகள் த்ருச் ஒட்டு சேர்க்கப்பட்டு தருவிக்கப்பட்டவை.

**3.2.14** ஸ'மி[4]தாதோ: ஸம்க்[3]ஞாயம்

'அச்' என்ற ஒட்டு, ஸம் உபபதமாகச் சேர்ந்து நிற்கும் தாதுவுக்குப்பின் தருவிக்கப்பட்ட சொல் ஒரு பெயரைக் குறிக்கும்போது, இணைக்கப்படும்.

ஸ'ம் + க்ரு + அச் = அ = ஸ'ங்கர; ஸ'ம்ப⁴;வ ஸ'ம்யத³;
இச்சூத்திரத்தில் 'தாதோ' என்ற சொல் மறுபடியும் கூறப்பட்டிருக்கிறது. அனுவிருத்தி மூலம் இச்சொல் 3.1.91 இலிருந்து பெறப்படும் ஆயினும், இதைத் திரும்பவும் இச்சூத்திரத்தில் பயன்படுத்தியிருப்பதன் காரணம், இச் சூத்திரத்தைத் தொடர்ந்து வரும் விதியில் (3.2.20) கூறப்பட்டிருக்கும் 'க்ரு'வுக்குப் பின் இணைக்கப்பட வேண்டிய 'ட'' ஒட்டைத் தடை செய்யத்தான். சூ. 3.2.20 இல் குறிப்பிடப்படும் பொருட்களில்கூட 'அச்' என்ற ஒட்டுத்தான் க்ரு'வுக்குப்பின் வரவேண்டும். ஆகையால் 'ஸ'ங்கர' என்ற சொல்லின் பெண்பால் ஸ'ங்கரா கழுகு, நல்லதைச் செய்யும் இயல்புடையவள்.
ஸ'ங்கரீ அல்ல (பார்க்க 3.2.20)

**3.2.15** அதி⁴க'ரணே ஸே'தே':
'ஸீ'' (படு) என்ற தாதுவுடன் உபபதமாக வரும் வேற்றுமைச் சொல் 7ஆம் வேற்றுமையாக அமைந்தால் (அதி⁴க'ரணே) அத்தாதுவுக்குப்பின் 'அச்' ஒட்டு இணைக்கப்படும்.
க²ஸ'ய (கே²ஸே'தே) வானத்தில் படுப்பவன்
க³ர்த'ஸ'ய்

வா: பார்ஸ்'வாதி³ஷு உபஸ'ங்க்²யானம்
பார்ஸ்வ முதலிய சொற்களும் உபபதமாக வரும்போது,'ஸ்' க்குப்பின் 'அச்' ஒட்டு இணைக்க வேண்டும்.
பார்ஸ்'வஸ'ய: 'ஒரு பக்கமாகப்படுப்பவன்' இங்கு
பார்ஸ்'வ இடத்தைக் (அதிகரண) குறிக்காது உத³ரஸ'ய: குப்புறப்படுப்பவள்
ப்ருஷ்ட'ஸ'ய நிமிர்ந்துப்படுப்பவன் (ப்ருஷ்ட'= முதுகு)

வா: தி³க்³த⁴ஸஹபூ'ர்வாச்ச
'ஸீ''க்கு முன் தி³க்³த⁴ ஸஹ என்ற சொல் நிற்கும் போதும் அத்தாதுவுடன் 'அச்' ஒட்டு சேர்க்க வேண்டும். தி³க்³த⁴ஸஹஸ'ய

வா: உத்'த'னாதி³ஷு கர்த்ருஷு
'உத்'த'ன' முதலிய சொற்கள் (முதல் வேற்றுமையில்) கர்த்தாவாக நிற்கும்போது அதனுடன் வரும் ஸீ'என்ற தாதுவுக்குப்பின் 'அச்' ஒட்டு வரவேண்டும்.
உத்தானஸ'ய : (உத்தானஸே'தே')
அவமூர்த்³த⁴ஸ'ய: 'தலையைக் குனிய வைத்துக் கொண்டு படுப்பவன்'.
வா: கி³ரௌ ட³ஸ்' ச²ந்த³ஸி
வேதமொழியில் 'கி3ரி' என்ற சொல்லுடன் (அதிகரணமாக) வரும் 'ஸீ''க்குப்பின் 'ட³ச்' என்ற ஒட்டு, இணைக்கப்படும்.
கி³ரிஸ': 'மலையில் படுப்பவன்'

**3.2.16** ச[1]ரேஷ்ட[1]:

'சர்' என்ற தாதுவுடன் உபபதமாக இடத்தைக் குறிக்கும் வேற்றுமைச் சொல் நிற்கும்போது, அத்தாதுவுக்குப்பின் 'ட[1]', என்ற ஒட்டு இணைக்க வேண்டும்.

கு[1]ருச[1]ர: (குருஷு ச[1]ரதி) (கு[1]ரு + சர் + ட[1] = அ) 'குரு தேசத்தில் சுற்றுபவன்'

'ட[1]' என்ற ஒட்டின் 'ட்', ஒரு 'இத்', இந்த ஒட்டைச் சேர்த்து ஆக்கப்படும் சொல்லின் பெண்பாற்சொற்கள் 'ஙீப்' ஐச் சேர்த்துப் பெறப்படும் என்று குறிக்கிறது.

கு[1]ருச[1]ரீ

**3.2.17** பி[4]க்ஷாஸேனா ஆத[3]ாயே ஷு ச

பி[4]க்ஷா (பிச்சை) ஸேனா (படை) ஆத[3]ாய (எடுத்துக் கொண்டு) என்ற சொற்களை உபபதமாகக் கொண்டு வரும் சர் தாதுவுக்குப்பின்னும் ட[1] என்ற ஒட்டு வரும்.

[4]பிக்ஷாச[1]ர: (பி [4]க்ஷாம் சரதி) = பி[4]க்ஷா + ச[1]ர் ட[1] = அ) பிச்சைக்காரன்

ஸேனாசர: படையோடு செல்பவன்

ஆதாய சர எடுத்துக் கொண்டு போகிறவன்

இச்சூத்திரம் இடத்தைக் குறிக்கும் வேற்றுமைச் சொல் உபபதமா காமல், வேறு சொற்கள் வருவதைக் குறிக்கிறது.

**3.2.18** புரோ அக்[3]ரதே[1]ா அக்[3]ரேஷு ஸர்த்[1]தே

புரஸ், அக்[3]ரதஸ், அக்[3]ரே, ஆகிய சொற்கள் உபபதமாக ஸ்ரு என்ற தாதுவுடன் வரும்போது, அத்தாதுவுக்குப்பின் ட[1] ஒட்டு இணைக்க வேண்டும்.

புர ஸர (புர + ஸ்ரு [1] + ட = அ)

முன்னால் போகிறவன்

அக்[3]ரத[1] ஸர அக்[3]ரேஸர தலைவன்

**3.2.19** பூர்வே கர்த்தரி

ஸ்ரு[1] என்ற தாதுவுடன் சேர்த்து உபபதமாக வரும் பூர்வ என்ற சொல் கர்த்தாவைக் குறிக்கும்போது, அத்தாதுவுக்குப்பின் ட[1] என்ற ஒட்டு வரும்.

பூ[1]ர்வஸர ([1]பூர்வம் ஸரதி) முதலில் போகிறவன்

(பூர்வ ச[1]ாஸௌ [1]ஸர)

பூர்வ என்ற சொல் கர்த்தாவைக் குறிக்காவிட்டால் அச் ஒட்டு வரும்.

பூர்வதே[3]ஸம் ஸர–பூர்வஸர கீழ்த்தேசம் செல்பவன்

**3.2.20** க்[1]ரு[1]ஞோ ஹேது தாச்[1]சி[2]ல்யானுலோம்யேஷு

க்ரு தாதுவுடன், செயப்படுபொருளைக் குறிக்கும் சொற்கள் உபபதமாக நின்று அவை (1) காரணம், (ஹேது), (2) பழக்கம், இயல்பு (தாச்[1]சீ[2]ல்யம்), (3)ஒத்துப்போதல் (ஆனுலோம்ய) என்ற பொருட்களைக் குறிக்கும்போது, அத்தாதுவுக்குப்பின் ட[1] என்ற ஒட்டை இணைக்க வேண்டும்.

1) யஸ[1]ஸ் கரீ வித்[3]யா புகழைக் கொடுக்கும் படிப்பு

**3.2.96** ஸஹே ச

ஸஹ (உடன்) என்ற சொல் உபபதமாக நிற்கும்போது, யுத்[4] க்ருஞ் ஆகிய தாதுக்களுக்குப்பின் 'க்வனிப்' ஒட்டு இணைக்கப்படும் (இறந்த காலத்தைக் குறிக்கும்போது) 'ஸஹ' ஒரு இடைச் சொல்லானதால் (Particle) இது வேற்றுமையுருபுகளோடுவர இயலாது. அதனால் 'கர்மணி' அனுவிருத்தியாகாது.

ஸஹயுத்[4]வா – 'உடன் சண்டையிட்டவன்'
ஸஹக்[1]ரு[1]த்வா – 'மற்றவனுடன் சேர்ந்து செயல் செய்தவன்'

**3.2.97** ஸப்தம்யாம் ஜனேர் ட[3]:

ஜன் (உண்டாக்கு) என்ற தாது, 7ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொல் லுடன் சேர்ந்து (இறந்த காலப் பொருளில்) வரும்போது ட[3] ஒட்டு இணைக்க வேண்டும்.

உபஸரஜ: (உபஸர + ஜன் + ட[3] = அ) (6.4.143)
முதல் கர்ப்பத்தில் (உபஸரே) பிறந்தவன்–அதாவது முதல் பிள்ளை.
மந்து[3]ரஜ: (மந்து[3]ரா + ஜன் + ட[3] = அ) தொழுவத்தில் பிறந்தவன்.

**3.2.98** பஞ்சம்யாமஜாதெ[1]ள

ஒரு இனத்தைக் குறிக்காத 5ஆம் வேற்றுமைப் பெயர்ச் சொல்லை உபபதமாகக் கொண்ட, ஜன் தாதுவுக்குப்பின், (இறந்த காலப் பொருளில்) 'ட[3]' ஒட்டு வரும்.

பு[3]த்[3]தி[4]ஜ (பு[3]த்[3]தி[4] + ஜன் + ட[3] = அ) 'அறிவிலிருந்து பிறந்தது'
ஸம்ஸ்காரஜ – 'பழக்கத்தினால் வந்தது'

ஆனால், ஹஸ்தின: ஜாத:
'யானையிலிருந்து பிறந்தது'
'யானை' ஒரு இனத்தைச் சேர்ந்ததால் இங்கு ஒட்டு இணைக்கப்படமாட்டாது.

**3.2.99** உபஸர்கே[3] சஸம்க்[3]ஞாயாம்

இறந்தகாலத்தைச் சுட்டும் 'ஜன்' தாது ஒரு உபசர்க்கத்தை உபபதமாகக் கொண்டு வரும்போது, அந்தத்தாதுவுடன் 'ட[3]' ஒட்டு, அச்சொல் ஒரு பெயர்ச் சொல்லாக அமையும்போது இணைக்கப்படும்.

ப்ரஜா: (ப்ர + ஜன் + ட[3] = அ) 'மக்கள்'

**3.2.100** அநௌ கர்மணி

அனு + ஜன் (உடன் செயப்படு பொருள் – உபபதமாக நிற்கும் போது) உக்குப்பின் (இறந்த காலத்தைச் சுட்டும்) 'ட[3]' ஒட்டு இணைக்கப்படும்.

புமனுஜ:– ஓர் ஆணுக்குப்பின் பிறந்தவன்
ஸ்[1]தர்யனுஜ:– ஒரு பெண்ணுக்குப்பின் பிறந்தவன்

**3.2.101** அன்யேஷ்வபி த்³ருʼஸ்யதே

மற்ற காரகங்கள் உபபதமாக நிற்கும்போதும் 'ஜன்' தாது, 'ட³' ஒட்டோடு வருவதைக் காணலாம்.

அஜ: பிறக்காதவன் (ந + ஜன் + ட³ = அ) பிறவியற்றவன்

த்³விஜ: (இரண்டு தடவை பிறந்தவன்/இருபிறவியெடுத்தவன்.

இவ்விரண்டு சொற்களும்7ஆம் வேற்றுமைச் சொல்லை உபபதமாகக் கொண்டு அமையவில்லை. முதல் எடுத்துக்காட்டு எதிர்மறைச் சொல்லுடனும், 2வது முதல் வேற்றுமைச் சொல்லுடனும் காணப்படுகிறது.

2) ப்ராஹ்மணஜ: த⁴ர்ம: பிராம்மணிடமிருந்து பிறந்தது தர்மம் க்ஷத்ரியஜம் யுத்³த⁴ம் க்ஷத்திரியனிடமிருந்து பிறந்தது யுத்தம் இங்கு 5ஆம் வேற்றுமைச் சொல் உபபதமாக நின்று இனத்தைக் குறிக்கும்போதும் 'ஜன்' கக்குப்பின் 'ட³' ஒட்டு வரக்காணலாம் (3.2.98ஐ ஒப்பிடுக)

3) அபி⁴ஜா: பரிஜா: தலைமுடி:
உபசர்க்கத்தோடு வரும் 'ஜன்' ஒரு பெயராக அமையாமலிருந்தால் 'ட³' ஒட்டு இணைக்கப்படும் என்று 3.2.99 கூறுகிறது. இந்த இரண்டு எடுத்துக்காட்டுகளிலும் உபசர்க்கத்துடன் (அபி4, பரி) வரும் 'ஜன்' பெயர்ச் சொல்லாகத் தருவிக்கப்பட்ட சொல் அமையும்போதும் 'ட³' ஒட்டுடன் இணைக்கப்பட்டிருக்கிறது.

4) செயப்படு பொருள் இல்லாமல் வரும்போதும் 'அனு + ஜன்' உடன் 'ட³' இணைக்கப்படும் (3.2.100) அனுஜ: 'தம்பி' (பின்னால் பிறந்தவன்)

இவ்விதி காணப்படும் 'அபி!' என்ற சொல், இதற்கு முன் விளக்கப்பட்ட எல்லா சூழல்களையும் தவிர்த்த மற்ற இடங்களிலும் இத்தகைய சொல் ஆக்க இயலும் என்று குறிக்கிறது. அதாவது வேறு தாதுக்களுடனும், வேற்றுமைச் சொற்களுடனும் 'ட³' ஒட்டு இணைத்து இவ்வாறு சொல் தருவிக்கலாம்.

பரிக²ா (பரி + க²ன் + ட³ = அ) 'அகழ்'

ஆக²ா (ஆ + க²ன் + ட³ = அ) 'குளம்'

**3.2.102** நிஷ்ட²ா

நிஷ்ட²ா ஒட்டுக்கள் தாதுவுடன் சேர்ந்து இறந்த காலத்தைக் குறிக்கும்.

'க்த', க்தʼவது ஆகியவைகள் நிஷ்டாவாகும் (1.1.26) க்ருʼதʼம்

(க்ருʼ + க்தʼ = த்) 'செய்யப்பட்டது'

க்ருʼதʼவான் (க்ருʼ + க்தʼவத் = தʼவத்ʼ) 'செய்தான்'

வா: ஆதி³ கர்மணி நிஷ்ட²ா வக்தவ்யா

ஒரு செயலின் தொடக்கத்தைக் குறிக்கும்போது (ஆதிகர்மணி) நிஷ்ட$^{2}$ா ஒட்டு இணைக்க வேண்டும்.
க்ரு$^{1}$த: க$^{1}$ட$^{1}$ம் தே$^{3}$வத$^{3}$த்த:
ப்ரக்ரு$^{1}$தவான் கட$^{1}$ம் தே$^{3}$வத$^{3}$த்த:
பாய்முடையத் தொடங்கினான் தேவதத்தன்
ஆதிகர்மன் பார்க்க 3.4.71

**3.2.103** ஸுயஜோர் ங்வனிப்

ஸு, யஜ் ஆகிய தாதுக்களுக்குப்பின் (இறந்தகாலத்தைச் சுட்டும்) ங்வனிப் ஒட்டு இணைக்கப்படும்.
ஸு + ங்வனிப் = வன் = ஸுத்வா – 'சாறு பிழிந்தவன்'
யஜ்வா – 'யாகம் பண்ணியவன்'

**3.2.104** ஜீர்யதேரத்$^{1}$ரு$^{1}$ன்

(இறந்தகாலத்தைக் குறிக்கும்) ஜ்ரு$^{1}$ (முதுமையடை) என்ற தாதுவுக்குப்பின் 'அத்ரு$^{1}$ன்' ஒட்டு இணைக்கப்படும்.
ஜரன் (ஜ்ரு$^{1}$ + அத்ருன் = ஜர் + அத் (7.3.84) = ஜரத்)
'வயதானவன்'
இத்தாதுவுடன், நிஷ்ட$^{1}$ா ஒட்டுக்களும் (வாஸரூப 3.1.94படி) வரும்.
ஜீர்ண: ஜ்ரு$^{1}$ + க்த = ஜிர் + த (7.1.100), (1.1.51) =
ஜிர் + ன (8.2.42) = ஜீர்ண: (8.2.77 68.4.1) 'வயதானவன்' ஜீர்ணவான்.

**3.2.105** ச$^{2}$ந்த$^{3}$ஸி லிட்$^{1}$

வேதமொழியில், இறந்தகாலத்தைக் குறிக்க 'லிட்' ஒட்டு தாதுவுக்குப்பின் இணைக்கப்படும்.

அஹம் ஸுர்யம் உப$^{4}$யதோ த$^{3}$த$^{3}$ர்ஸ$^{1}$
'நான் இருபக்கமும் சூரியனைப் பார்த்தேன்'
அஹம் த்$^{3}$யாவா ப்ரு$^{1}$தி2வீ ஆத$^{1}$த$^{1}$ான
நான் ஆகாயத்தையும் பூமியையும் விரிவாக்கினேன்.
இங்கு த$^{3}$த$^{3}$ர்ஸ, ஆத$^{1}$த$^{1}$ான என்ற சொற்கள் 'நிஷ்ட$^{1}$ா' ஒட்டின் செயலைக் கொண்டது. 3.4.6 வேத மொழியில் லுங், லங், லிட்$^{1}$ ஒட்டுக்கள் இறந்த காலத்தைச் சுட்டுவதாக வருமென்று கூறுகிறது. ஆகையால் இங்கு தனியாக அதைப் பற்றிக் கூறுவதன் அவசியம் என்ன? சூ. 3.4.6 இரண்டு அல்லது அதற்கும் மேற்பட்ட தாதுக்கள் தொடர்பு கொண்டதாக ஒரு வாக்கியத்தில் வருவதைப் பற்றிப் பேசுகிறது (3.4.1 தாது ஸம்ப$^{3}$ந்தே). ஆனால் இச்சூத்திரம், பொதுவாக (அதாவது இம்மாதிரியான கட்டுப்பாடு இல்லாத) இறந்த காலத்தைப் பற்றிப் பேசுகிறது.

**3.2.106** லிட[1] : கானஜ்வா:

(வேதமொழியில்) 'லிட்[1]' டுக்கு, 'கானச்' விருப்பாகப் பதிலியாகும்.

அக்[3]னிம் சிக்யான: 'புனிதத் தீயை வளர்த்த'

(சி + லிட் = காசன் = ஆன = சிக்யான)

ஸோமம் ஸுஷிவாண: 'ஸோமரஸம் பிழிந்த'

இது ஒரு விகல்ப (விருப்பு) விதியானபடியால் 'கானச்' ஒட்டு வராமலும் அமையலாம் (மேற் சூத்திரத்தின்படி) இதற்கு முந்திய சூத்திரத்திலிருந்து 'லிட்' என்ற சொல் அனு விருத்தி மூலம் இச்சூத்திரத்திற்கு எடுத்து வர வாய்ப்பு இருக்கும் போது இச் சொல்லை ஏன் திரும்பவும் இங்கு பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

'கானச்' ஒட்டு 3.2.105இல் கூறப்பட்டிருக்கும் சிறப்பியல்புடைய 'லிட்'உக்கு மட்டுமல்லாமல், தாதுக்களுடன் பொதுவாக வரும் இறந்த காலத்தைக் குறிக்கும் (Perfect) 'லிட்' உக்கும் ஆதேசமாக வருமென்பதை இது சுட்டுகிறது. ஆகையால் 'கானச்' ஒட்டு ஒரு வினையடைச் சொல்லாகவும் (Verbaladjective) (Perfect) ஆகவும் அமையும்.

**3.2.107** க்வஸுஸ்[1] ச

வேதமொழியில் 'லிட்'டுக்கு 'க்வஸு' ஆதேசமாகும். ஜக்ஷிவான் (அத் + லிட் = க்வஸு = வஸ்) 'உண்டான்'

பபிவான் – 'அருந்தினான்'

'க்வஸு' ஆதேசமாகாமலும் வரலாம் (பார்க்க முன் சூத்திரத்தின் எடுத்துக்காட்டு)

இது யோக விபாகமாகும். 'க்வஸு' மட்டுந்தான் அடுத்த சூத்திரத்தில் தொடரும் என்று குறிக்கத்தான் இச்சூத்திரத்தை இதற்கு முந்திய சூத்திரத்தில் சேர்க்காமல் தனியாகக் கூறப்பட்டிருக்கிறது.

**3.2.108** ப[4]ாஷாயாம் ஸத[3]வஸ ஸ்[1]ரு[1]வ:

பேச்சு மொழியில், ஸத, வஸ, ஸ்[1]ரு என்ற தாதுக்களுக்குப் பின் விருப்பாக லிட்[1] டுக்குப் பதிலியாக 'க்வஸு' ஆதேசமாகும். உபஸேதி3வான் கௌத்ஸ: பாணினிம்

(உபஸத்[3] + லிட் = க்வஸு = வஸ்)

'கௌத்ஸன்' பாணினிக்குத் தொண்டாற்றினான்

மாற்று வடிவம் உபாஸதத் (லுங்)

உபாஸீத[3]த் (லங்), உபஸஸாத[3] (லிட்)

அநூஷிதவான் கௌத்ஸ: பாணினிம்

(அனு + வஸ் + லிட் = க்வஸு = வஸ்)

மாற்று வடிவம் அன் வவாத்ஸீத் (லுங்) அன்வவஸத் (லங்), அநூவாஸ (லிட்)

உபஸு[1]ஸ்[1]ருவாத் கௌத்ஸ: பாணினிம்

(உப + ஸ்[1]ரு + லிட் = க்வஸு = வஸ்)

மாற்றுவடிவம், உபாஸ்1ரௌஷீத் (லுங்), உபாஸ்[1]ரு[1] ணோத் (லங்)

உபஸு'ஸ்ராவ (லிட்)

லுங், லங் ஆகியவைகளிலும் 'க்வஸு' ஒட்டு ஆதேசமாகும்.

**3.2.109** உபேயிவான், அனாஸ்1வான் அனூச'ானஸ் ச

உபேயிவான், அனாஸ்1வான், அனுசான் ஆகிய சொற்கள் விதிப்படியமையாதவை (நிபாதனம்)

உப + இண் = இ + லிட் = க்வஸு வஸ் → உப + ஈ (7.4.69) + இ + வஸ் புணர்ச்சி விதியின்வடி, ஈயும், இயும் சேர்க்க முடியாது. ஏனென்றால் 7.4.69. அதைத் தடுக்கிறது. இங்கு 7.6.67க்கு மாறாக 'இட்' ஆகமம் வருகிறது. இது விதிக்குப் புறம்பானது. உப + ஈ + இ+ இட்[1] + வஸ் → உப + ஈ + ய் (6.4.81) + இட் + வஸ் = உபேயிவஸ்.

'ப[4]' அடிச் சொற்களில் 'இட்' கெடும். இங்கு 'வ'ஸ்', 'உஷ்' ஆக மாறும். ஒரு வரையறைக்குட்பட்ட தனிச் சிறப்பு வாய்ந்தது, 'இட்'ஐப் புகுத்துவது. ஏனென்றால், பொதுவிதியான 7.2.25, முதலியவைகள். இந்த இட் ஆகமத்தை விதிக்கின்றன. அதே சமயம் விதி 7.2.67 அதைத் தடை செய்கிறது. தடை விதிக்குத் தடை விதிக்கும் விதியினால், 'வஸ்'உக்கு முன் 'இட்' பயன்படுத்தப்படுகிறது. ஆகையால், 2ஆம் வேற்றுமைப் பன்மையில் உபேயுஷ: 3ஆம் வேற்றுமை ஒருமையில் உபேயுஷா என்ற வடிவங்கள் பெறப்படுகின்றன. 'உப' என்ற உபசர்க்கத்தோடு மட்டும் இந்த நிபாதனம் ஆகவில்லை, வேறு உபசர்க்கங்களுடன், உபசர்க்கமில்லாமலும் இத்தகைய சொற்களாக்கப்படும். ஸமீயிவான் (ஸம் + இ +க்தவது), ஈயிவான் (இ + க்தவது)

'வா' என்ற சொல் அனுவிருத்தி மூலம் பெறப்படுவதால், 'லுங்' முதலியவைகளும் மாற்று வடிவமாக வரும். உபாக[3]ாத் (லுங்), உபைத் (லங்), உபேயாய (லிட்)

அனாஸ்வான் (நஞ் + அஸ்[1] + க்வஸு = வஸ் → அன் + அஸ[1] + வஸ்)

மாற்று வடிவங்கள் நாஸ்னீதி (லுங்), நாஸ்'னாத் (லுங்), நாஸ[1] (லிட்)

அனூசான: (அனு + வச் + லிட் = கானச் = ஆன)

மாற்று வடிவங்கள் அன்வவோசத் (லுங்), அன்வப்[3]ரவீத் (லங்) அனூவாச (லிட்)

**3.2.110** லுங்

தாதுக்களுக்குப்பின் இறந்த காலத்தைக் குறிக்க லுங் ஒட்டு வரும்.

அகார்ஷீத் (க்'ரு[1] + லுங் = திப் → அ (6.4.71) + க்ரு + லுங் → அ + க்ரு +ஸ் + தி (3.1.43: 44:) → அக்ரு[1] + ஸ் + ஈ + த் (3.4.100: 7.3.96:) → அகார் (7.2.1) ஸ்ஈத் → அகார்ஷீத் 'செய்தான்'

வா: வஸ தேர் லுங் ராத்ரி விஸேஷே ஜாக[3]ரண ஸந்ததௌ வக்தவ்ய: இரவு முழுவதும் கண் விழித்திருத்தல் என்பதைக் குறிக்க, வஸ் (வசி) தாதுவுக்குப் பின் இறந்த காலத்தை உணர்த்த 'லுங்' ஒட்டு இணைக்கப்படும்.

நீ எங்கிருந்தாய்? என்ற கேள்விக்கு நான் இரவு முழுவதும் இங்கு தூங்காம விழித்துக் கொண்டிருந்தேன். (அஹம் அத்ர அவாத்ஸம்) என்ற பதி கூறும்போது, 'வஸ்' தாதுவுக்குப்பின் 'லுங்' ஒட்டு இணைக்க வேண்டும்.
வஸ் + லுங் –> அவாத்ஸம்.

**3.2.111** அனத்[3]யதனே லங்

ஒரு தாதுவுக்குப்பின் 'லங்' ஒட்டு, இன்றைக்கு முன் நிகழ்ந்த இறந்த காலத்தைக் குறிக்க இணைக்க வேண்டும்.
அகரோத் (அவன் செய்தான்) (லங்)
க்ரு + லங் : திப் → அகரோத்
'அனத்யதன' ப[3]ஹுவ்ரீஹி சமாசமாகும். இன்றோ அல்லது நேற்றோ என்ற சந்தேஹம் ஏற்படுமானால் 'லங்' வராது, லுங் வரும் என்பதைக் குறிக்க ப[3]ஹுவ்ரீஹிச் மாசம் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.
அத்[3]ய ஹ்யோ வா அபு[4]க்ஷ்மஹி
இன்றோ நேற்றோ உண்டோம்

வா: பரோக்ஷே ச லோகவிக்[3]ஞாதே
ப்ரயோக்துர் த[3]ர்ஸ'ன விஷயே லங் வக்தவ்ய
அண்மையில் நிகழ்ந்த உலகமறிந்த பேசுபவர் நேரில் பார்க்காத, ஆனால் உணரக்கூடிய ஒரு நிகழ்ச்சியைப் பற்றிப் பேசுபவர் குறிப்பிடும் போது லங் ஒட்டு தாதுவுக்குப்பின் வரும்.
அருணத்[3] யவன: ஸாகே'த'ம்
யவனர் சாகேதத்தை முற்றுகையிட்டனர்
அருணத்[3] யவன: மாத்[4]யமிகாம்
யவனர் மாத்யமிகத்தை முற்றுகையிட்டனர். இங்கு 'லங்' பயன்படுத்தி பேசுபவர் பதஞ்சலி. யவனர் முற்றுகை அண்மையில் நிகழ்ந்த உலகறிந்த பேசுபவரால் அறிந்துணர்ந்த ஒரு செய்தியாகும்.

**3.2.112** அபி[4]க்[3]ஞாவசனே ல்ருட்

'நினைவு கூர்' என்ற பொருளைக் குறிக்கும் சொல் உபபதமாக நிற்கும்போது இன்றைக்கு முன் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் குறிக்க தாதுவுடன் 'ல்ருட்' (2ஆம் எதிர்காலம்) ஒட்டு இணைக்க வேண்டும். இது 'லங்' ஒட்டுப் பயன்படுத்தத் தடையாகிறது.
அபி[4]ஜானாஸி தே[3]வத[3]த்த: கஸ்மீரேஷூ வத்ஸ்யாம: நினைவிருக்கிறதா தேவதத்தா காஷ்மீரத்தில் வசித்தோமே
வஸ் + ல்ருட் : மஸ் → வஸ் + ஸ்ய (3.1.33) + மஸ் → வஸ் + ஸ்யா (7.3.101) + மஸ் → வத் (7.4.49) + ஸ்யா மஸ் : வத்ஸ்யாம
'வசன' என்ற சொல், ஸ்மரஸி, பு[3]த்[4]யஸே, சே'த'யஸே, போன்ற அதே பொருளை அதாவது நினைவு கூர் உணர்த்தும் சொற்களையும் குறிக்கும்.

**3.2.113** ந யதி[3]

முன் சூத்திரத்தில் கூறப்பட்ட சூழலில் 'யத்' என்ற இடைச்சொல் தாது உடன் நிற்கும்போது 'ல்ருட்' இணைக்கப்பட மாட்டாது.

அபி[4]ஜானாஸி தே[3]வத[3]த்த:

யத்[1] கஸ்மீரேஷு அவஸாம

நாம் காஷ்மீரில் வசித்தோம் என்பது (யத்) நினைவிருக்கிறதா தேவதத்தா இங்கு வசித்தது மாத்திரம் நினைக்கப்படுகிறது அதை த் தவிர வேறு எதுவும் உணர்த்தவில்லை. முந்திய சூத்திரத்துக்கு இ து தடை விதிக்கிறது.

**3.2.114** விப[4]ாஷா ஸாகாங்க்ஷே

'நினைவு கூர்தல்' என்ற பொருளைச் சுட்டும் சொல் உடன் நிற்கும்போது, இறந்த காலத்தை உணர்த்த 'யத்' என்ற இடைச் சொல்லுடனோ அல்லது அவ்விடைச் சொல் இல்லாமலோ வரும் தாதுவுக்குப்பின் 'ல்ரு'ட்'' ஒட்டு விருப்பாக இணைக்கப்படும். மேலும் இவ்விரண்டு தாதுக்களும் ஒன்றையொன்று சார்ந்து நின்று, இவைகளில் ஒன்றில்லாவிட்டால், வாக்கியங்களின் பொருள் முழுமையாகாது என்ற நிலையேற்படும். (ஆகாங்க்ஷா) லக்ஷ்ய (குறிப்பதுக்) லக்ஷண (குறி) ஆகாங்ஷா, ஆகும்.

அபி[4]ஜானாஸி தேவதத்த: கஸ்'மீரேஷு

வத்ஸ்யாமஸ் தத்ரௌத[3]னம் பே[4]ாக்ஷ்யாமஹே

நினைவிருக்கிறதா? தேவதத்தா நாம் காஷ்மீரில் வசித்தோமே. அங்கு சோறு உண்டோமே.

வசிப்பது (வத்ஸ்யாம) இங்கு லக்ஷணம்.

சோறு உண்பது (ஒதனம் )பே[4]ாக்ஷ்யாமஹே) லக்ஷ்யம்.

அபி[4]ஜானாஸி தே[3]வத[3]த்த யத்[1]கஸ்'மீரேஷு

வத்ஸ்யாம: யத்தத்ர ஒத[3]னம் பே[4]ாக்ஷ்யாமஹே

இது 'லங்' உடனும் வரும்.

அபி[4]ஜானாஸி தே[3]வத[3]த்த யத்[1]கஸ்மீ

ரேஷு அவஸாம, யத்[1] த[1]த்[1]ர ஒத[3]னம் அபு[4]ஞ்ஜ்மஹி. அவஸாம, அபு[3] ஞ்ஜ்மஹி இரண்டும் 'லங்'

**3.2.115** பரோக்ஷே லிட்[1]

பேசுபவர் தான் நேரில் பார்க்காத (இன்றைக்கு முன் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் குறிக்கும்) இறந்த காலத்தைச் சுட்ட 'லிட்'' ஒட்டு இ ணைக்க வேண்டும். சகார 'அவன் செய்தான்.'

தன்மையில் லிட் வரமுடியாது என்பது தெளிவு, ஏனென்றால், செயலின் கர்த்தாவே, பேசுபவரும் ஆவதால், அவர், அந்நிகழ்ச்சியை நேரில் பார்த்தவராகத்தான் இருக்க முடியும். ஆனாலும் சில நே ரங்களில், கர்த்தா தன் நினைவோடு அந்நிகழ்ச்சியைப் பார்க்காதவராகவோ அல்லது செய்யாதவராகவோ இருக்கும் வாய்ப்பு உண்டு. காட்டாக, சில நேரங்களில், ஒருவன் தன் நினைவிழந்த நிலையில் ஒரு செயலைச் செய்திருக்கக் கூடும்.

அதைப்பற்றி அவன் பேசும்போது தன்மையில் 'லிட்'ஐ பயன்படுத்தலாம்.
ஸுப்'த': அஹம் கில விலலாப
தூங்கும்போது நான் புலம்பினேன்
இங்கு 'புலம்புதல்' என்ற செயல், கர்த்தா தன் சுயநினைவோடு செய்த செயல் அல்ல. இது அவன் உறக்க நிலையிலிருக்கும் போது நடந்த நிகழ்ச்சி. அதனால் இது பரோக்ஷமாகும்.

வா: அத்யந்தாபஹ்னவே ச லிட் வக்தவ்ய:
கர்த்தா, தான் செய்த செயலை அறவே மறுக்கும்போதும் (மேற்குறிப்பிட்ட சூழலில்) லிட் வரும்.
கலிங்கே[3]ஷூ ஸ்தி[4]த: அஸி
நாஹம் க'லிங்க[3]ான் ஜக[3]ாம
கலிங்கத்தில் வசித்தாயா? என்று ஒருவனைக் கேட்கும்போது அவன் அங்கு வசித்ததை மறுக்க, நான் கலிங்கத்துக்கு போனதில்லை என்ற பதிலையளிக்கிறான். இங்கு 'ஜகாம' தன்மையில் அமையும் 'லிட்.'

**3.2.116** ஹஸ'ஸ்'வதே'ார் லங் ச இன்றைக்கு முன் நிகழ்ந்த பேசுபவர் பார்க்காதநிகழ்ச்சியை இறந்த காலத்தில் குறிக்கும்போது, ஹ, ஸ'ஸ்' வத் என்ற சொற்களுடன் வரும் தாதுக்களோடு 'லங்' உம் வரும் அதாவது, 'லங்' 'லிட்' இரண்டுமே வரலாம். இதிஹ அகரோத்/சகார அந்தோ அவன் (அதைச்) செய்தான்
ஸ'ஸ்'வத் அகரோத்/சகார 'திரும்பத் திரும்பச் செய்தான்'

**3.2.117** ப்ரஸ்னே சாஸன்னகாலே
(பேசுபவர் தானே பார்க்காத, இன்றைக்கு முன் நடந்த ஒரு இறந்த கால நிகழ்ச்சியை குறிக்க) அண்மையில் நடந்த இறந்த காலத்தை உணர்த்தும்போது அவ்வாக்கியம் ஒரு வினா வாக்கியமாக அமையுமானால் தாதுவுடன் 'லங்',' லிட்' ஆகிய இரண்டு ஒட்டுக்களுமே இணைக்கலாம்.
ஒருவன் மற்றொருவனைக் கேட்கிறான்
அக[3]ச்'ச[2]த்[3] தே[3]வத[3]த்த:? (லங்)
ஜக[3]ாம தே[3]வதத்த? (லிட்')
தேவதத்தன் சென்றானா
ஆனால் ஜக[3]ாமதே[3]வத[3]த்த:
தேவதத்தன் சென்றான். இங்கு வினா வாக்கியமல்லாததால் 'லிட்' தான் வரும்.
அண்மையில் நடந்த நிகழ்ச்சியைக் குறிக்காமல் வரும்போது 'லிட்' தான் வரவேண்டும்.
ப[3]வந்த'ம் ப்ரு'ச்சாமி–ஜக[3]ான கம்ஸம்
உங்களை (நான் கேட்கிறேன்–கொன்றான் கம்சனை
[1]கில வாஸுதே[3]வ:

வாசுதேவன்.
நான் உங்களைக் கேட்கிறான் வாசுதேவன் கம்சனைக் கொன்றானா?

**3.2.118** லட்$^{1}$ ஸ்மே

(இன்றைக்கு முன் நிகழ்ந்த பேசுபவர் தன் கண்ணால் பார்க்காத இறந்த காலப் பொருளை உணர்த்தும்போது), தாதுவுடன் 'ஸ்ம' சேர்ந்து நிற்கும்போது 'லட்' ஒட்டு (நிகழ்காலம்) இணைக்க வேண்டும்.
இது 'லிட்' உக்குத் தடைவிதிக்கிறது.
யஜதி ஸ்ம யுதி$^{4}$ஷ்டி'ர:
யுதிட்ரன் யாகம் பண்ணினான்

**3.2.119** அபரோக்ஷே ச

(இன்றைக்கு முன் நிகழ்ந்த இறந்த காலத்தைக் குறிக்கும் போது) பேசுபவர் தானே பார்த்த ஒரு நிகழ்ச்சியைக் குறிக்க, தாதுவோடு நிற்கும் 'ஸ்ம' என்ற இடைச் சொல்லுடன் 'லட்' ஒட்டு இணைக்கப்படும்.
ஏவம் ஸ்ம பிதா ப்$^{3}$ரவீதி
இவ்வாறு தகப்பனார் கூறினார்
இதி ஸ்ம உபாத்$^{4}$யாய: கத$^{2}$யதி
இவ்வாறு ஆசிரியர் கூறினார்.

**3.2.120** நநௌ ப்ருஷ்' ட ப்ரதிவசனே

'நநு' என்ற சொல்லுடன் வரும் தாதுவோடு, கேள்வி பதிலாக அமையும் வாக்கியங்களில், இறந்த காலத்தைக் குறிக்க, தாதுவோடு 'லட்' ஒட்டு இணைக்கப்படும். இது 'லுங்' ஒட்டு வருவதற்குத் தடை விதிக்கிறது.
அகார்ஷு: கட'ம் தே$^{3}$வத$^{3}$த்த: நநு கரோமி போ$^{4}$:
தேவதத்தா பாய் முடைந்தாயா?
ஆமாம் பாய் முடைந்தேன்.
அவோசஸ் தத்ர கிஞ்சித்$^{3}$ தே$^{3}$வத$^{3}$த்த? நநு ப்$^{3}$ரவீமி போ$^{4}$
தேவதத்தா அங்கு ஏதாவது பேசினாயா?
ஆமாம் அங்கு பேசினேன்
கேள்வி பதிலாக அமையாவிட்டால் லட் வராது. நநு அகார்ஷீத் மாணவக: கண்டிப்பாக மாணவன் வேலை செய்தான்.

**3.2.121** நன்வோர் விப$^{4}$ாஷா

'ந', 'நு' ஆகியவைகளுடன் வரும் தாதுக்களோடு, கேள்வி பதிலாக அமையும் வாக்கியங்களில், இறந்த காலப் பொருளில் 'லட்' ஒட்டு விருப்பாக வரும்.
அகார்ஷு: கட'ம் தே$^{3}$வத$^{3}$த்த?
பாய் செய்தாயா தேவதத்தா?
ந கரோமி போ: நாகார்ஷம்
நான் செய்யவில்லை.

அஹம் நு கரோமி/ அஹம் நு அக'ார்ஷம்
ஆமாம் நான் செய்தேன்.

**3.2.122** புரா லுங் சாஸ்மே

இன்றைக்கு முன் நிகழ்ந்த இறந்தகாலப் பொருளில், 'புரா' என்ற சொல்லோடு நிற்கும் தாது 'ஸ்ம' என்ற சொல் அதனுடன் வராமல் அமையும்போது 'லுங்' விருப்பாக வரும். அதாவது 'லுங்', 'லட்' ஆகிய இரண்டு ஒட்டுக்களும் வரும்.
வஸந்தி இஹ புரா ச²ாத்ரா: (லட்)
அவாத்ஸு புரா ச²ாத்'ரா: (லங்)
அவஸன்னிஹ புரா ச²ாத்'ரா: (லங்)
ஊஷு இஹ புரா ச²ாத்'ரா: (லிட்)
மாணவர்கள் முன்பு இங்கு வசித்தார்கள்.
இது ஒரு விருப்பு விதி, லட், லுங் வராவிட்டால் மற்ற இறந்த கால ஒட்டுக்களும் இங்கு வரலாம். 'அனத்³யதனே' (இன்றைக்கு முன்) என்ற சொல், 2 சூத்திரங்களுக்கு முன்னாலிருந்து அனுவிருத்தி மூலம் இங்கு கொண்டு வரப்பட்டிருக்கிறது . இதை 'மண்டூகப்லுதி '(தவளைத்தாவல்) என்று கூறுவது வழக்கம், அதாவது சில சூத்திரங்களைத் தாவிவிட்டு, அதற்கு முந்தைய சூத்திரத்திலிருந்து ஒரு சொல்லை அனுவிருத்தி வழியாகக் கொண்டு வருதல், ஆனால் 'ஸ்ம'வுடன் வரும்போது 'லட்' ஒட்டுத்தான் இணைக்க வேண்டும்.
யஜதிஸ்ம புரா யுதி⁴ஷ்டி'ர:
யுதிட்டிரன் முன்னொரு காலத்தில் யாகம் செய்தான்

**3.2.123** வர்த்தமானே லட்'

நிகழ்காலத்தைக் குறிக்க தாதுவுடன் 'லட்' ஒட்டு இணைக்க வேண்டும்.
ஒரு செயல் தொடங்கப்பட்டு முடிவுறாத நிலையில் நிற்கும் போது அதை நிகழ்காலம் (வர்த்தமானம்) என்று குறிப்பிடப்படும்.
'பச'தி' – 'அவன் சமைக்கிறான்.'

**3.2.124** லட'  : ஸ'த்'ரு' ஸ'ானசாவப்'ர த²மாஸமானாதி⁴கரணே

முதல் வேற்றுமையுருபுகளில் முடியும் சொற்களுடன், வினைகளின் இயைபு இல்லாமலமையும் போது, ஸ'த்'ரு', ஸ'ானச் ஆகியவை, 'லட்' உக்குப் பதிலியாக வரும்.
பச'ந்த²ம் (2) தே³வத³த்தம் (2) பஸ்ய
சமைக்கும் தேவதத்தனைப் பார்
பச'மானம்(2) தே³வத³த்தம் (2) பஸ்ய
சமைக்கும் தேவதத்தனைப் பார்
பச் + லட் = ஸ'த்'ரு' = அத், ஸப்' = அ → பச் + நும் (7.1.70) + அத் + அ = பசந்த + அம் → பசந்தம் (2ஆம் வேற்றுமை ஒருமை)

பச் + லட் = ஸ1ானச் = ஆன, ஸ1ப் = அ → பச் + ஆன → பச் + முக் =ம் (7.2.32) + அ. பசமான + அம் =பசமானம்.

'லட்'ஐ இதற்கு முந்திய விதியிலிருந்து இங்கும் அனுவிருத்தி மூலம் தருவிக்க முடியுமென்றாலும், வேறு சூழ்நிலைகளிலும் இதைப் பயன்படுத்த வேண்டி, இச்சொல்லை, திரும்பவும் இச்சூத்திரத்தில் பயன்படுத்தப்படிருக்கிறது. அதாவது, முதல் வேற்றுமைப் பெயர்ச் சொல்லுடன், இத்தகைய தருவிக்கப்பட்ட சொல் இயைவுகொண்டுள்ள போதும் காணப்படலாமென்று குறிக்கும். ஸன் ப்3ராஹ்மண:– 'பிராம்மணனாக இருந்து கொண்டு' 'ஸானச்' வராவிட்டால் (அஸ்தி ப்3ராஹ்மண:) 'திப்' வரும்

வித்3யமானோ ப்3ராஹ்மண:

வித்3யதே ப்3ராஹ்மண:

வா: மாங்யாக்ரோஸே1

கண்டனத்தையோ அல்லது சாபத்தையோ மறைமுகமாக உணர்த்தும் போது, தாதுக்களுக்குப்பின் இவ்வொட்டுக்கள் இணைக்கப்படும்.

மா பசன்/ மா பசமான:

அவன் சமைக்கமாட்டானாக

**3.2.125** ஸம்போ3த4னே ச

விளியிலும் (ஸம்போ3த4னம்) லட் உக்குப் பதிலியாக, ஸ1த்ரு1, ஸானச் ஒட்டுக்கள் தாதுவுடன் இணைக்கப்படும்.

ஹே பசன்/ஹே பசமான

ஏ சமைப்பவனே/சமைத்துக் கொண்டிருப்பவனே

**3.2.126** லக்ஷண ஹேத்வோ: க்ரியாயா:

ஒரு உடன் நிகழும் நிகழ்ச்சியையோ அல்லது தனிப் பண்பு: லக்ஷணம்) அல்லது ஒரு செயல் செய்வதற்குக் காரணத்தையோ குறிக்கும்போது, 'ஸ1த்ரு1' அல்லது 'ஸ1ானச்' ஒட்டுக்கள் 'லட்1'க்குப் பதிலியாக தாதுவோடு வரும். இவையிரண்டும் செயலுக்கு அடையாக வரும்.

ஸ1யானா: பு4ஞ்ஜதே யவனா:

'படுத்துக்கொண்டே உண்கிறார்கள் யவனர்கள்' ஸயானா: (லக்ஷணம்)

தி1ஷ்ட2ந்த: அனுஸாஸதி க3ணகா:

அதீ4யானோ வஸதி

படிப்பதற்காக (இங்கு) வசிக்கிறான்

அதீயான: (ஹேது)

அர்ஜயன் வஸதி

சம்பாதிப்பதற்காக வசிக்கிறான்

லக்ஷணம், ஹேது ஆகியவைகள் ஒரு செயலுக்கு அடையாக வரும் போதுதான் இவ்விதி பயன்படும். பொருளுக்கோ, குணத்துக்கோ அடையாக வரும்போது அல்ல. காட்டாக ய: கம்பேத ஸ: அஸ்1வ

த்[1]த[2]: 'எது ஆடுகிறதோ அது அஸ்வத்த மரம்'
யது[3]ல்லவதே தல்லகு[4] எது தண்ணீரில் மிதக்கிறதோ அது லேசானது. இங்கு இந்த ஒட்டு இணைக்கப்படமாட்டாது.

**3.2.127** தௌ ஸத்
அவைகள் (அதாவது ஸ'த்ரு', ஸ'ானச் ஒட்டுக்கள்) ஸத்' என்ற பெயர் பெறும் ப்[3]ராஹ்மணஸ்ய கு'ர்வன்/கு'ர்வாண: இவ்வொட்டுக்கள் மொத்தமாக இப்பெயர் பெறும். அதனால் மேற்குறிப்பிட்ட வரையறைகளுக்குள் மாத்திரம் இவையடைங்கா. ஆகவே, நிகழ்கால ஒட்டுக்களோடு, மற்ற கால ஒட்டுக்களுக்குக் பதிலியாக இவைகள் வரும்.

ப்[3]ராஹ்மணஸ்ய க'ரிஷ்யன் (எதிர் காலம்)
ப்[3]ராஹ்மணஸ்ய க'ரிஷ்யமாண: (எதிர் காலம்)

**3.2.128** பூங் யஜோ: ஸ'ானன்
பூங் (தூய்மையாக்கு), யஜ் (வேள்வி செய்) ஆகிய தாதுக்களுடன் 'ஸ'ானன்' ஒட்டு நிகழ்காலத்தைக் குறிக்கும்போது இணைக்கப்படும்.

பவமான: (பூ + ஸ'ானன் = ஆண, + ஸ'ப் = அ, பவ + ஆன → பவ – முக் = ம்) (7.2.82)=பவமான: தூர்மையாக்குபவன், அதாவது நெருப்பு, காற்று. யஜமான: யாகம் செய்பவன்

வா: த்[3]விஷ: ஸ'துர்வா வசனம்
'த்[3]விஷ்' தாதுவுடன் ஸ்த்'ரு' ஒட்டு இணைத்து வரும்போது 2.3.69இல் கூறப்பட்ட ஆறாம் வேற்றுமையின் தடை, விருப்பாக அமையும்.
சோரஸ்ய/சோரம்த்[3]விஷன்
'திருடனை வெறுத்துக் கொண்டு'

**3.2.129** தாச்சீல்ப வயோ வசன ஸ'க்'திஷு சானஸ்
அந்த இயல்புடைய (தாச்சீல்ய), வயதைக் குறிக்கும் சொற்கள் (வயோ வசன) திறமை ('ஸக்தி) ஆகிப பொருட்களை உணர்த்தும் தாதுக்களுடன் சானஸ்' ஒட்டு வரும். பே[4]ாக[3]ம் பு[4]ஞ்ஜான: 'துய்த்து மகிழ்ந்து கொண்டு' கவசம் பர்யஸ் யமான: 'கவசம் அணிந்து கொண்ட, அதாவது கவசம் அணியக் கூடிய வயதையடைந்த இளைஞன்'

ஸ'த்ரு'ம் நிக்[4]னான: 'எதிரிகளைக் கொல்லத் திறமை வாய்ந்த'

**3.2.130** இங் த[4]ார்யோ: ஸ'த்ரக்ரு'ச்'ச்[2]ரிணி
'இங்', 'த[4]ாரி' ஆகிய தாதுக்களுடன் 'ஸ'த்'ரு'' ஒட்டு கர்த்தா எளிதாகச்

செயலைச் செய்தவன் என்ற பொருளை உணர்த்தும்போது, இணைக்கப்படும்.
அதீ[4]யன் பாராயணம் 'எளிதில் படிப்பவன்'
த[4]ாரயன் உபநிஷதம் 'உபநிஷதத்தை எளிதில்புரிந்து கொண்ட' ஆனால்
க்ருச்ச[2]ரேண அதீ[4]தே கஷ்டப்பட்டுப் படிக்கிறான்
இங்கு அந்த ஒட்டு வராது.

**3.2.131** த்[2]விஷோ அமித்ரே
'எதிரி' என்ற பொருளைக் குறிக்கும் கர்த்தாவை உணர்த்தும் போது 'த்[3]விஷ்' தாதுவுக்குப்பின் 'ஸ்த்[1]ரு[1]' ஒட்டு வரும் த்[3]விஷன் (த்[3]விஷ் + ஸ[1]த்[1]ரு = அத்) (எதிரி) 'எதிரி' என்ற பொருளைக் குறிக்காவிட்டால் த்[3]வேஷ்டி[1] ப[4]ார்யா பதிம் 'மனைவி கணவனை வெறுக்கிறாள்.'

**3.2.132** ஸுஞோ: யக்[3]ஞஸம் யோகே[3]
வேள்வியில் கலந்து கொள்ளல் என்ற பொருளை உணர்த்தும்போது , ஸு (சாறு பிழி) என்ற தாதுவுக்குப்பின் 'ஸ[1]த்[1]ரு[1]' ஒட்டு இணைக்கப் படும்.
ஸர்வே ஸுன்வந்த 'எல்லோரும் வேள்விக்காக ஸோமரஸம் எடுக்கிறார்கள்.'

ஷு = ஸு + ஸத்ரு = அத் – ஸு + ஸ்னு = னு (3.1.73)

ஸுஸ்னு + அத் → ஸுன்வத் (6.4.57)

இங்கு யஜமானனைக் குறிக்கும். யாஜகனையல்ல, அதாவது புரோகிதனையல்ல, ஆனால் ஸுனோதி ஸுராம் சாராயம் வடிக்கிறான். இங்கு வேள்விக்காக அல்ல. அதனால் 'ஸ[1]த்ரு' ஒட்டு வராது.

**3.2.133** அர்ஹ ப்ரஸ[1]ம்ஸாயாம்
அர்ஹ் தாது, புகழ்தல் என்ற பொருளைக் குறிக்கும் போது ஸ[1]த்ரு[1]ஒட்டோடு வரும்.

அர்ஹன்னிஹ ப[4]வான் வித்[3]யாம்
இந்த வித்தயையடையத் தகுந்தவர் நீங்கள்
ஆனால் அர்ஹதி சோர வத[4]ம்
திருடன் கொல்லத் தகுந்தவன்
இங்கு புகழ்ச்சியைச் சுட்டாது
அதனால் ஸத்ரு[1] ஒட்டு[1] வராது

**3.2.134** ஆ க்வேஸ் தச்'சீ²ல தத்³த⁴ர் மத்ஸாது⁴காரிஷு

இச்சூத்திரத்திலிருந்து சூ. 177 இல் கூறப்பட்டிருக்கும் 'க்விப்' ஒட்டு வரை, விளக்கப்படும் ஒட்டுக்கள் கர்த்தா, இயற்கையாகவே அந்த இயல்பை உடையவன் (தச்சீல²) இது தன் கடமையென்று செயலைச் செய்யக் கூடியவன் (இயற்கையாகவே அந்த குனமில்லாமிருந்த போதிலும்) (தத்³த⁴ர்ம) அச்செயலை சிறப்பாக ச் செய்ய கூடியவன் (தத்ஸாது⁴க'ாரி) ஆகிய பொருட்களைச் சுட்டு வதாக அமையும்.

**3.2.135** த்ரு'ன்

ஒரு தாதுவுக்குப்பின் 'த்'ரு'ன்', ஒட்டு 'தச்சீல' முதலியவைகளை கர்த்தா உடைத்தானாக வரும்போது இணைக்க வேண்டும்.

1) 'தச்சீல'

கர்த்தா கட'ான் – 'பாய் செய்யும் பழக்கம் உடையவன்'

க்ரு' + த்ரு'ன் = கர் + த்ரு'ன் = கர்த்ரு'ன்

வதி³தா ஜனாபவதான் – வதந்தி பேசுகிறவன்

2) தத்³த⁴ர்ம

முண்டயிதார: ஸ்'ராவிஷ்ட²ாயனா: ப⁴வந்தி வதூ⁴மூட³ாம்

ஸ்'ராவிஷ்டாயனர்கள் (அக்குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்) தங்கள் குடும்பத்தில் விதவையான பெண்களின் தலையை மொட்டையடிக்கும் வழக்குமுடையவர்கள்.

முண்டி(ணிச்) + த்ரு'ன் = முண்டயித்ரு'

அன்னம் அபஹார்தார: ஆஹ்வரகா: ப⁴வந்தி ஸ்'ராத்³தே⁴ ஸித்³தே⁴

சிராத்தம் முடிந்தவுடன், அன்னத்தைத் திருடிச் செல்லும் வழக்குமுடையவர்கள் ஆஹ்வரகர்கள்

அபஹ்ரு + த்ரு'ன் = அபஹார்தார

3) தத்ஸாது⁴காரீ

க³ந்த'ா கே²ட'ம் – சிறந்த வேடன்

வா: த்ரு'ன் வித⁴ா வ்ரு'த் விக் ஷு சானுபஸர்க³ஸ்ய யாகம் செய்விக்கும் புரோஹிதர்களின் பெயர்களைக் குறிக்க உபசர்க்கமில்லாமல் தனியாக நிற்கும் தாதுக்களுக்குப்பின் 'ஸ'த்'ரு' 'ஒட்டு இணைக்கப்படும்.

ஹோதா (ஹு + த்ரு'ன்)

போதா (பூ + த்ரு'ன்)

ஆனால் உபசர்க்கங்களுடன்

உத்³க³ாத'ா (உத்³க³ா + த்ரு'ச்)

ப்ரதிஹர்த'ா (ப்ரதிஹ்ரு + த்ரு'ச்)

த்ரு'ன், த்ரு'ச் ஆகிய ஒட்டுக்கள் இணைக்கப்பட்டுத் தருவிக்கப்படும் சொற்கள் உருவத்தில் ஒத்தவையாகும். ஆனால், சுரத்தில் வேறுபாடு

காணப்படும். 'த்ரு'ச்' ஒட்டுச் சேர்த்து ஆக்கப்பட்ட சொற்கள் இறுதி அசையில் (Syllable) சுரம் பெறும் (6.1.163) 'த்ரு'ன்' ஒடு ஆக்கப்பட்ட சொற்கள் முதல் அசையில் சுரம்பெறும் (6.1.197)

வா: நயதே: ஷுக் ச
'நீ' தாதுவோடு 'த்ருன்' ஒட்டு இணையும்போது 'ஷுக்' வரும்.
நேஷ்ட'ா (நீ + த்ரு'ன் – நே +ஷுக் = ஷ் = நே + ஷ் +த்ரு' = நேஷ்ட'ா, நேஷ்ட'ரி என்ற புரோகிதன்

வா: த்விஷேத³ர்தே³வத'ானாமகாரஸ்' சோப த⁴ாயா அனிட்'வம் ச
தேவதை என்ற பொருளில், 'தவிஷ்' தாதுவுக்குப்பின் 'த்ரு'ன்' ஒட்டு வரும் தாதுவின் ஈற்றயலான 'இ' 'அ' ஆகும். 'இட்' இங்கு வராது.
த்வஷ்ட'ா (த்விஷ் + த்ரு'ன், த்வஷ் + த்ரு'ன் = த்வஷ்ட'ா)

வா: க்ஷதே'ஸ்' ச நியுக்தே
'க்ஷத்' என்ற தாதுவுக்குப்பின்னும், அதிகாரி என்ற பொருளில் 'த்ரு'ன்' ஒட்டு வரும்.
க்ஷத்தா (க்ஷத்³ + த்ரு'ன்)

வா: ச²ந்த³ஸி த்ரு'ச்'ச
வேதமொழியில் 'த்ரு'ச்' ஒட்டும் 'க்ஷத்³' உடன் வரும் க்ஷத்தரு'ப்⁴ய (க்ஷத்³ + த்ரு'ச்) இது சுரத்தில் மாறுபடும்.

**3.2.136** அலம்க்ரு'ஞ் நிராக்ரு'ஞ் ப்ரஜநோத் பசோத்பதோன் மத³ருச்ய பத்ர பவ்ர'து' வ்ரு'து⁴ ஸஹசர'ர: இஷ்ணுச் 'அலம்க்ரு' முதலிய தாதுக்களுடன் 'தச்'சீ²ல' முதலிய பொருட்களில் 'இஷ்ணுச்' ஒட்டு வரும்.
அலங்கரிஷ்ணு: (அலம்க்ரு + இஷ்ணுச் = அலங்கரிஷ்ணு)
'ஒப்பனை செய்து கொள்ளும் இயல்புடையவன்'
நிராகரிஷ்ணு: 'தடுக்கும் இயல்புடையவன் மறுக்கும்'
ப்ரஜனிஷ்ணு: 'உண்டாக்கும் இயல்புடையவன்'
உத்பசிஷ்ணு: 'நன்றாகச் சமைக்கக் கூடியவன்'
உத்பதிஷ்ணு: 'பறக்கிறவன்'
உன்மதி³ஷ்ணு: 'வெறியூட்டும்'
ரோசிஷ்ணு: 'ஒளியுடையவன்'
அபத்ர பிஷ்ணு: 'நாணமுடையவன்'
வர்திஷ்ணு: 'சுற்றுகிறவன்'
வர்தி⁴ஷ்ணு: 'வளர்கிறவன்'
ஸஹிஷ்ணு: 'பொறுமையுள்ளவன்'
சரிஷ்ணு: 'இயங்குகிறவன்'

வா: அலங்க்ருஞோ மண்ட3னார்த2ாத்3 யுச:

பூர்வவிப்ரதிஷேதே4னேஷ்ணுச வக்தவ்ய:

'அலங்க்ருஞ்' என்ற தாது ஒப்பனை செய்தல் என்ற பொருளில் வரும்பேது 'யுச்' (3.2.151)என்ற ஒட்டு வருவதை 'இஷ்ணுச்' ஒட்டு இங்கு முன்னதாகவே தடை விதிக்கிறது.

**3.2.137** ணேண்1 ச2ந்த3ஸி

இயக்குவினையாக்கும் ஒட்டான 'ணிச்' இல் முடியும் தாதுக்களோடு 'இஷ்ணுச்' ஒட்டு, வேத மொழியில் (கர்த்தா அந்த இயல்பை கொண்டவன் முதலிய பொருட்களில்) வரும். த்3ருஷத3ம் த4ாரயிஷ்ணவ: 'கல்லைத் தூக்கும் பலமுள்ளவர்கள்' (த4ாரி + இஷ்ணுச்) த4ரயிஷ்ணு: (முதல் வேற்றுமை ஒருமை) த4ாரயிஷ்ணவ: முதல் வேற்றுமை பன்மை

வீருத4: பாரயிஷ்ணவ:

**3.2.138** பு4வஸ்1ச

பூ4(இரு) தாதுவுக்குப்பின்னும் (வேத மொழியில் கர்த்தா அந்த இயல்பைக் கொண்டவன் முதலிய பொருட்களைக் குறிக்கும் போது) இஷ்ணுச் ஒட்டு வரும்.

ப4விஷ்ணு: – 'பொருந்துகிற'

இங்கும் யோக விபாக ஆகிறது. இதனால், அனுவிருத்தி மூலம், இதை அடுத்த சூத்திரத்துடன் சேர்த்து விளக்கப்படவேண்டும். மேற்கூறிய 2 சூத்திரங்களிலும் கூறப்படாத வேற சில தாதுக்களும் இதைப் போன்று காணப்படுமென்பதை 'ச' என்ற சொல் குறிக்கும்.

ப்4ராஜிடஷ்ணுனா லோஹிதசந்த3னேன

(ப்ராஜ் + இஷ்ணுச்) சிவப்பு சந்தனத்தினால் பிரகாசிக்கிறத

**3.2.139** க்3லா ஜிஸ்த2ாஸ்1 ச க்ஸ்னு

'க்ஸ்னு' என்ற ஒட்டு, க்3லா, ஜி, ஸ்த2ா என்ற தாதுக்களுடன் (கர்த்தா அத்தகைய இயல்புடையவன் முதலிய பொருளை உணர்த்தும்போது) வரும். 'ச' என்ற சொல், 'பூ4' தாதுவுடனும் இவ்வொட்டு வரும் என்று உணர்த்தும்..

க்3லாஸ்னு: (க்3லை = க்3லா + க்ஸ்னு = ஸ்னு) 'சோர்வுற்றவன்'

ஜிஷ்ணு: (ஜி + க்ஸ்னு = ஸ்னு) 'வென்றவன்'

ஸ்த2ாஸ்னு: (ஸ்த2ா + க்ஸ்னு = ஸ்னு) 'மன உறுதியுடன் நிற்கிறவன்'

பூஷ்1ணு (பூ + க்ஸ்னு = ஸ்னு ) 'தகுந்தவன்'

'க்ஸ்னு' ஒட்டின் 'இத்' எழுத்து 'க்3' ஆகும். 'க்1' அல்ல. அதனால், ஸ்த2ாவின் 'ஆ'வுக்குப் பதிலியாக 'ஈ' வராது இது 'கித்' ஆகும் போதுதான் நிகழும் (பார்க்க 6.4.66)

க்1விதி ச (1.1.5) 'க்3' என்ற எழுத்தும் இதிலடங்கும். அதனால், இங்கு கு3ணம் எழுத்து ஆதேசமாகாது. 7.2.11இன்படி 'க3' எழுத்து விதிக்கப்படுகிறது.

அதனால் 'பூ' தாதுவோடு 'இட்' வராது.

வா: த³ம்ஸே¹ஸ சந்²த³ஸ்யுபஸம்க்²யானம்

'த³ம்ஸ்' தாதுவுடன், வேதமொழியில் 'க்ஸ்னு' ஒட்டு வரும். த³ம்க்ஷ்ணவ: பஸ¹வ: 'கடிக்கும் விலங்குகள்'

**3.2.140** த்ரஸிக்ருதி⁴ த்⁴ரு¹ஷி க்ஷிபே: க்னு:

'த்ரஸ்' முதலிய தாதுக்களுக்குப்பின் (கர்த்தா அத்தகைய இயல்புடையவன் முதலிய பொருட்களில்) 'க்னு' ஒட்டு வரும்.

த்ரஸ்னு: (த்ரஸ் + க்னு = னு) 'பயப்படுபவன்'

க்³¹ருஸ்னு: 'பேராசைக்காரன்'

த்⁴ரு¹ஷ்னு: 'துணிச்சல்காரன்'

க்ஷிப்னு: 'எறிபவன்'

**3.2.141** ஸ¹மித் யஷ்டா¹ப்⁴யோ ⁴தினுண்

'ஸ¹ம்' முதலிய எட்டு தாதுக்களுக்குப்பின் (கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்) 'தி⁴னுண்' என்ற ஒட்டு வரும்.

'தினுண்' ஒட்டின் 'த⁴' அடுத்த சூத்திரத்தில் 'குத்வம்' உண்டாக்குவதற்காக 'உ' உச்சரிப்புக்காக 'ண்' விருத்தி ஆக்குவதற்காக இங்கு 'இன்' தான் ஒட்டு. தாது பாடத்தில் 'ஸம்' உபஸமே (1202)யில் தொடங்கி, மதே³ா ஹர்ஷே (1209) வரையிலுள்ள தி³வாதி³ கணத்தைச்சேர்ந்த எட்டு தாதுக்கள் இங்கு குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

| | | |
|---|---|---|
| ஸ¹மீ | – | 'அமைதியானவன்' |
| த¹மி | – | 'விரும்புபவன்' |
| த³மீ | – | 'அடக்கமுடையவன்' |
| ஸ்¹ரமீ | – | 'உழைப்பாளி' |
| ப்⁴ரமீ | – | 'சுற்றுபவன்' |
| க்ஷமீ | – | 'பொறுமையுள்ளவன்' |
| க்லமீ | – | கஷ்டப்படுபவன்' |
| ப்ரமாதீ³ | – | 'மயங்குபவன்' |
| உன்மாதீ³ | – | 'பைத்தியமாக்குபவன்' |

'உன்மத்³ என்ற தாது இஷ்ணுச்' என்ற ஒட்டுடனும் வரும். (3.2.136) இந்தச் சூத்திரத்தின்படி 'தி⁴னுன்' உடனும் சேர்ந்து வரும்.

தி³வாதி³ கணத்தைச் சேர்ந்த இந்த எட்டு தாதுக்களுடன் மட்டுந் தான் 'தி³னுண்' வரும். மற்றவைகளுடன் வேறு ஒட்டுக்கள் இணைக்கப்படும். அஸிதா.

**3.2.142** ஸம்ப்ரு¹ சானுருத⁴ாங்ய்மாங்ய ஸப்ரி ஸ்ரு¹ ஸ்ம்ஸ்ரு¹ஜ பரிதே³வி ஸம்ஜ்வர பரிக்ஷிப பரிரட¹ பரிவத³ பரித³ஹ பரிமுஹ ³துஷத்³ விஷத்³ருஹே து³ஹ

யுஜாக்ரீட$^{3}$ விவிச$^{1}$த்$^{1}$யஜராஜ ப$^{4}$ஜாதி ச$^{1}$ராபசரா முஷாப்$^{4}$
யாஹனஸ்$^{1}$ச

தி$^{4}$னுண் கீழ்க்கண்ட தாதுக்களுக்குப்பின் (கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்) வரும்.

ஸம்ப்ருச் (ருத$^{4}$ாதி வகுப்பைச் சேர்ந்தது. அத$^{3}$ாதி வகுப்பைச்சேர்ந்ததல்ல. இரண்டாவதில் விகரணம் கெடும்)

ஸம்ப்ருச் + தி$^{4}$னுண் = ஸம்பர்க + இன் (7.2.52) ஸம்பர்கின்.

ஸம்பர்கீ (முதல் வேற்றுமை, ஒருமை) கலப்பவன்

| | | |
|---|---|---|
| அனுருத்$^{4}$ – | அனுரோதி$^{4}$ – | 'குற்றம் கூறுபவன்' |
| ஆயம் – | ஆயாமி – | 'விரிவாக்குபவன்' |
| ஆயஸ் – | ஆயாஸி – | 'முயற்சி செய்பவன்' |
| பரிஸ்ரு – | பரி ஸாரி – | 'எங்கும் செல்பவன்' |
| ஸம் + ஸ்ருஜ் – | ஸம்ஸர்கீ$^{3}$ – | 'உடன் செய்பவன்' |
| பரி + தேவ் – | பரிதே$^{3}$வீ – | 'வருந்துபவன்' |
| ஸம் + ஜ்வர் – | ஸம்ஜ்வாரீ – | 'நோயாளி' |
| பரி + க்ஷிப் – | பரிக்ஷேபீ – | 'எல்லா இடங்களிலும் வீசுபவன்' |
| பரி + ரட்$^{1}$ – | பரி ராடீ$^{1}$ – | 'எங்கும் சுற்றுபவன்' |
| பரி + வத்$^{3}$ – | பரி வாதீ$^{3}$ – | 'திட்டுபவன்' |
| பரி + த$^{3}$ஹ்– | பரித$^{3}$ாஹீ – | 'எரிப்பவன்' |
| பரி + முஹ் – | பரிமோஹீ – | 'வசியப்படுத்துபவன்' |
| து$^{3}$ஷ் – | தே$^{3}$ாஷீ – | 'குற்றவாளி' |
| த்$^{3}$விஷ் – | த்$^{3}$வேஷீ – | 'வெறுப்பவன்' |
| த்$^{3}$ர$^{1}$ஹ் – | த்$^{3}$ரோஹீ – | 'சண்டைக்காரன்' |
| து$^{3}$ஹ் – | தே$^{3}$ாஹீ – | 'பால் கறப்பவன்' |
| யுஜ் – | யோகீ$^{3}$ – | 'சேர்ப்பவன், தியானம் செய்பவுன்' |
| ஆ + க்ரீட்$^{3}$ – | ஆக்ரீடீ$^{3}$ – | 'விளையாடுபவன்' |
| வி + விச் – | விவேகீ – | 'கூரறிவுடையவன்' |
| த்யஜ் – | த்யாகீ$^{3}$ – | 'துறப்பவன்' |
| ரஜ் – | ராகீ$^{3}$ – | 'ஆவலுடன் விரும்புபவன்' |
| ப$^{4}$ஜ் – | பாகீ$^{3}$ – | 'பங்கு கொள்பவன்' |
| அதிசர் – | அதிசாரீ – | 'வரம்பு மீறுபவன்' |
| அபசர் – | அபசாரீ – | 'வருத்த முண்டாக்குபவன்' |
| ஆமுஷ் – | ஆமோஷீ – | 'திருடன்' |
| அப்$^{4}$யாஹன் – | அப்$^{4}$யாக$^{4}$ாதீ – | 'தாக்குபவன்' |

**3.2.143** வௌ கஷ லஸ கத்[1]த[2] ஸ்ரம்ப[4]

'வி'யை உபசர்க்கமாகக் கொண்ட பஷ (காயப்படுத்து) லஸ (அணை, விளையாடு), கத்[1]த்[2] (புகழ்) ஸ்ரம்ப்[4] (நம்பு) ஆகிய தாதுக்களுக்குப்பின் தி[4]னுண் ஒட்டு வரும்.

விகாஷீ காயப்படுத்துபவன் – 'காயப்படுத்துபவன்'

விலாஸீ விளையாடுபவன் – 'விளையாடுபவன்'

விகத்[1]தீ[2] – 'தற்பெருமை பேசுபவன்'

விஸ்ரம்பீ[4] – 'நம்புபவன்'

**3.2.144** அப ச லஷ:

'அப' என்ற உபசர்க்கத்துடன் நிற்கும் லக்ஷ (விரும்பு) என்ற தாதுவுக்குப்பின்னும் 'தி[4]னுண்' ஒட்டு வரும். அதாவது, இத்தாதுவோடு, 'வி' அல்லது 'அப' என்ற இரண்டு உபசர்க்கங்கள் நிற்கும்போதும் 'தி[4]னுண்' இணைக்கப்படும்.

அபலாஷீ 'பேராசைக்காரன்'

விலாஷீ 'பேராசைக்காரன்'

**3.2.145** ப்'ரே லபஸூத்[3]ர மத[2]வத்[3] வஸ:

'ப்ர'வுடன் நிற்கும் லப, முதலிய தாதுக்களுடன் 'தி[4]னுண்' ஒட்டு வரும்.

| | | |
|---|---|---|
| ப்ரலாபீ | – | 'புலம்புகிறவன்' |
| ப்ரஸாரீ | – | 'எங்கும் சுற்றுபவன்' |
| ப்ரத்[3]ராவீ | – | 'ஓடுபவன்' |
| ப்ரமாதீ[2] | – | 'வேதனைப்படுத்துகிறவன்' |
| ப்ரவாதீ | – | 'நிறையப் பேசுபவன்' |
| ப்ரவாஸீ | – | 'வெளிநாட்டில் வசிப்பவன்' |

**3.2.146** நிந்த[3]ஹிம் ஸக்லிஸ க[2]ாத[3] விநாஸ பரிக்ஷிப பரிரட பரிவாதி[3] வ்யாப[4]ஷசூயோ வுஞ்

'நிந்த[3]' முதலிய தாதுக்களுடன் (கர்த்தா அந்த இயல்புடையவர் முதலிய பொருட்களைக் குறிக்கும்போது) 'வுஞ்' என்ற ஒட்டு வரும்.

சூத்திரத்தின் சொற்கள், 5ஆம் வேற்றுமைப் பொருளில் முதல் வேற்றுமை பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

நிந்த[3]க: (நிந்த[3] + வுஞ் = வு = அக) குறை கூறுகிறவன்

| | | |
|---|---|---|
| ஹிம்ஸக: | – | 'புண்படுத்துபவன்' |
| க்லேஸ[1]க: | – | 'தொல்லை தருபவன்' |
| க[2]ாத[3]க: | – | 'உண்கிறவன்' |
| விநாஸ[1]க: | – | 'அழிக்கிறவன் |
| பரிக்ஷேபக: | | |
| பரிராட[1]க: | – | 'நிறையச் சுற்றுகிறவன்'. |
| பரிவாத[3]க: | – | 'வாதி' |

வ்யாப$^{4}$ாஷக:

அஸூயக: – 'பொறாமைக்காரன்'

சூ. 3.1.133இல் கூறிய 'ண்வுல்' ஒட்டை இணைத்து 'வுஞ்' ஒட்டு இணைத்து ஆக்கப்பட்ட சொற்களைப் போன்ற சொற்களை ஆக்கலாம். ஆயினும், கீழ்க்கண்ட பரிபாஷா விதி இருப்பதை நினைவுறுத்த இங்கு ஒரு தனி விதியில் கூறப்பட்டிருக்கிறது.

3.2.134-177 வரையில் கூறப்பட்டிருக்கும் 'தச்சீல' ஒட்டுக்கள் வருமிடத்தில் வாஸரூப (3.1.94) விதிப்படி 'த்ருச்' முதலிய ஒட்டுக்கள், அப்பொருட்களில் இணைக்கப்பட மாட்டாது.

**3.2.147** தே$^{3}$விக்ரு$^{1}$'ஸோஸ்' ச உபஸர்கே

தே$^{3}$வி (புலம்பு), க்ருஸ்$^{1}$(அழு) ஆகிய தாதுக்கள் உபசர்க்கத்துடன் சேர்ந்து வரும்போது, 'வுஞ்' ஒட்டு, அவைகளுக்குப் பின் வரும்.

ஆதே$^{3}$வக: – 'புலம்புபவன்'

ஆக்ரோஸ$^{1}$க: – 'திட்டுபவன்'

பரிதே$^{3}$வக: – 'புலம்புபவன்'

பரிக்ரோஸ$^{1}$க: – 'கூக்குரலிடுபவன்'

உபசர்க்கமில்லாமல் இத்தாதுக்கள் நிற்கும்போது. தே$^{2}$வயிதா (த்ரு$^{1}$ச் உடன்) க்ரோஷ்ட$^{1}$ா ('த்ரு$^{1}$ச்' உடன்)

**3.2.148** சலன ஸ$^{1}$ப்$^{3}$த$^{3}$ாத கர்மகாத் யுச்

இயக்கம் (சலன), சத்தம் (ஸ$^{1}$ப்$^{3}$த$^{3}$) என்ற பொருட்களைக் குறிக்கும் செயப்படு பொருள் குன்றிய வினைகளுக்குப்பின் 'யுச்' ஒட்டு (தச்$^{1}$சீ$^{2}$லா. . . .') வரும்.

சலன: (சல் + யுச் = யு = அன) 'நகர்பவன்'

சோபன: (சுப் + யுச் = யு = அன) 'ஊர்பவன்'

ஸ$^{1}$ப்$^{3}$த$^{3}$ன: (ஸ$^{1}$ப்$^{3}$த$^{3}$ + யுச் = யு = அன) 'ஒலியெழுப்புபவன்'

ரவண: (ரு + யுச் = யு = அன) 'முழங்குபவன்'

செயப்படு பொருள் குன்றாவினைகளோடு இவ்வொட்டு வராது 'த்ரு$^{1}$ச்' வரும். படி$^{2}$தா வித்$^{3}$யாம்

**3.2.149** அனுத$^{3}$ாத்தேதஸ்$^{1}$ ச ஹலாதே$^{3}$

மெய்யெழுத்தை முதலாகவும் அனுதாத்த சுரத்தை 'இத்'தாகவும் கொண்ட செயப்படு பொருள் குன்றிய வினைகளுக்குப்பின் (தச்$^{1}$சீ$^{2}$ல . . .') 'யுச்' ஒட்டு வரும்.

வர்த்தன: (வ்ருத்$^{1}$ + யுச் = யி = அன) வசிப்பவன், இருப்பவன்

வர்த்$^{3}$த$^{4}$ன: (வ்ருத்$^{4}$ + யுச் = யு = அன ) 'வளர்பவன்'

'அனுதாத்தம்' 'இத்' ஆகாமல் உள்ள தாதுக்களுக்குப்பின் இவ்வொட்டு வராது.

'த்ரு$^{1}$ச்' வரும் ப$^{4}$விதா – ஏதி$^{4}$தா (ஏத்$^{4}$ + த்ரு$^{1}$ச்) இத்தாது மெய்யெழுத்தை முதலாகக் கொண்டதில்லை. ஆகையால் 'யுச்' வராது.

வஸிதா வஸ்த்ரம் – 'துணிகட்டுபவன்'
'வஸ்' 'அனுதாத்த இத்' ஆன போதிலும் செயப்படுபொருள் குன்றாவினையாவதால், இச்சூத்திரத்தின்படி 'யுச்' வராமல் 'த்ரு1ச்' வரும்.

**3.2.150** ஜு சங்க்ரம்ய த3ந்த3ரம்ய ஸ்ரு1 க்3ரு1தி4 ஜ்வல ஸு1சலஷபத1 பத3:

'ஜு' முதலிய தாதுக்களுக்குப்பின் (கர்த்தா அத்தகைய இயல்புடைய வன் முதலிய பொருட்களில்) 'யுச்' ஒட்டு வரும்.

'ஜு' என்ற தாது, தாது பாடத்தில் இல்லை. இது பாணினி சூத்திரத்தில் வருகிற தாது தனால், இதை ஸௌத்ர தாது என்று குறிப்பிடப்படும்.

ஜூ–ஜவன: 'வேகமாக ஓடுவது, வேகமாக ஓடும் குதிரை'

| | | |
|---|---|---|
| சங்க்ரம் | – | சங்க்ரமண: 'கோணல் மாணலாகச் செல்பவன்' |
| த3ந்த3ரம் | – | த3ந்த்3ரமண: 'சுற்றுபவன்' |
| ஸ்ரு1 | – | ஸரண: 'செல்கிறவன்' |
| க்3ருத்4 | – | க3ர்த4ன: 'பேராசைக்காரன்' |
| ஜ்வல் | – | ஜ்வலன: 'நெருப்பு' |
| ஸுி1ச் ஸோ1சன : | | 'வருந்துபவன்' |
| லஷ் | – | லஷண: 'விரும்புபவன்' |
| பத் | – | பத1ன: 'விழுபவன்' |
| பத்3 | – | பத3ன: 'செல்பவன்' |

**3.2.151** க்ரு1த4 மண்ட3ார்தே2 ப்4யஸ்1 ச

'கோபித்தல், ஒப்பனை செய்தல்', ஆகிய பொருட்களைச் சுட்டும் தாதுக்களுக்குப்பின்னும் யுச் ஒட்டு வரும்.

| | | | |
|---|---|---|---|
| க்ருத்4 | – | க்ரோத4ன: – | 'சீற்றம் கொண்டவன்' |
| ருஷ் | – | ரோஷண: – | 'முன்போகி' |
| மண்ட்3 | – | மண்டன:– | 'ஒப்பனை செய்தல்' |
| பூ4ஷ் | – | பூ4ஷண: – | 'நகை' |

**3.2.152** ந ய

'ய'வை இறுதியாகக் கொண்ட தாதுக்களுக்குப்பின் 'யுச்' ஒட்டு வராது. இதற்கு முந்திய சூத்திரத்துக்கு இது தடை விதிக்கிறது.

| | | |
|---|---|---|
| க்ன்ருயிதா | – | சத்தம் உண்டாக்குபவன் |
| க்ஷ்மாயிதா | – | ஆட்டுகிறவன் |

**3.2.153** ஸுத3 தீ3பதீக்ஷஸ்1 ச

ஸுத3, தீ3ப, தீ3க்ஷ என்ற தாதுக்களுக்குப்பின்பும் 'யுச்' ஒட்டு வராது. இத்தாதுக்கள் 'அனுத3ாத்தேத்' ஆன போதிலும். இவைகளுடன் 'யுச்' ஒட்டு வராமல், 'த்ரு1ன்' தான் வரும். இச்சூத்திரம் யுச் வருவதற்கும் தடை விதிக்கிறது.

| | | |
|---|---|---|
| ஸூதி3தா | – | 'தாக்குபவன்' |
| தீ3பிதா | – | 'புகழுடையவன்' |
| தீக்ஷிதா | – | 'தொடங்குபவர் தீக்கை கொடுப்பவர்' |

**3.2.153** 'தீ3ப்' தாதுவுக்குப் பின் 'ர' ஒட்டு வரவேண்டும் என்று குறிப்பாக விதிக்கிறது. ஆகையால், அந்த விதியே, 'யுச்' வருவதைத் தடை செய்யப் போதுமானதாக இருக்கும் போது இச்சூத்திரம் அதைத் தடை செய்வதனால் என்ன பயன்? வாஅஸரூபேண (3.1.94) என்ற விதியின்படி 'யுச்' ஒட்டு வரலாமே என்ற வினாவெழும்பும். ஆனால் சூ. 146, 150 இன் கீழ் விளக்கப்பட்ட பரிபாஷா அதைத் தடை செய்யும். இந்த பரிபாஷா விதிகள் எல்லா இடங்களுக்கும் பயன்படுத்த வேண்டியவையல்ல. அதற்குப் புறனடையாகப் பல எடுத்துக் காட்டுக்கள் கிடைக்கின்றன.

கம்ரா யுவதி: (கம் + ர () 'விரும்பக் கூடிய பெண்'

கமனா யுவதி: (கம் + யுச் = அன) 'விரும்பக் கூடிய பெண்'

கம்ப்ரா ஸா1கா2 –'ஆடும் கிளை'

கம்பனா ஸா1க2ா –'ஆடும் கிளை'

'ஸூத2' தாதுவுக்குப்பின் 'யுச்' ஒட்டைத் தடை செய்யும் போது, மது4ஸூத3ன: ரிபுஸூத3ன: என்ற சொற்கள் எப்படியாக்க முடியும்?

(1) இந்த விதி அநித்ய விதியாகும் அதனால் எல்லா இடங்களிலும் பயன்படுத்தக் கூடியது அல்ல. இந்த விதியை, இதற்கு முந்திய சூத்திரத்தோடு சேர்த்துக் கூறாமல் தனியாகக் கூறியிருப்பதிலிருந்தே (யோகவிபாகம்) இதை அனுமானிக்க முடியும். அல்லது (2) இவை 'நந்த்3யாதி' வகுப்பைச் சேர்ந்தவையாக இருக்கக்கூடும். அல்லது (3) 3.3.113இன்படி 'ல்யுட்' ஒட்டோடு இணைத்து ஆக்கப்பட்ட சொற்களாக இருக்கலாம்.

இம்மூன்று வகையான விடைகளும் இக்கேள்விக்கு சமாதானமாகலாம்.

**3.2.154** லஸ1 பத1 பத3 ஸ்த2ா பூ4 வ்ரு1ஷ ஹன க1மக3ம ஸ்ரூ1ப்4ய உகஞ்

'உகஞ்' ஒட்டு (கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்) கீழ்க்கண்ட தாதுக்களுக்குப்பின் வரும்.

அபலாஷுகம் வ்ருஷலஸங்க3த1ம்

'விருஷலர்களின் தொடர்பு விரும்பத்தக்கதல்ல'

(அப + லஷ் + உக1ஞ்) = அபலாஷுகம்

ப்ரபா1து1கா க3ர்ப4ா ப4வந்தி

கரு சிதைவுறுவதாகும்.

(ப்ர + பத்1 + உகஞ்) ப்ரபாதுகா: 'விழக்கூடிய'

உபபாது3கம் ஸத்வம்–'பிராணி செல்லக் கூடியது. அதாவது மறையக்கூடியது.'

உபஸ்த2ாயுகா: ஏனம் பஸ1வோ ப4வந்தி

இதற்குப் பக்கத்தில் உட்காரும் பசுக்கள்

ப்ரப4ாவுகமன்னம் ப4வதி

உண்டாகக்கூடிய உணவு உண்டாகும்

ப்ரவர்ஷுகா: பர்ஜன்யா:
மேகம் (மழை) பொழியக் கூடியது
ஆக⁴ாது'க'ம் பாகலிகஸ்ய மூத்ரம்
பாகலிகம் என்ற நோயுடைய யானையின் மூத்திரம் (தொடுவதால்) கொல்லக்கூடியது.
க'ாமுக'ா: ஏனம் ஸ்த்ரியோ ப⁴வந்தி
பெண்கள் இவனை விரும்புகிறவர்களாகிறார்கள்.
ஆக³ாமுக'ம் வாராணஸீம் ரக்ஷ ஆஹு:
போகக்கூடிய இடம் வாராணசி, சாபத்தினால், ராக்கதனானவன், அச்சாபத்திலிருந்து விடுதலை பெறுவதற்காகப் போகக்கூடிய இடம் வாரணசி என்று சொல்லப்படுகிறது.
கிம்ஸ'ாருகம் தீக்ஷ்ணமாஹு

**3.2.155** ஜல்ப' பி⁴க்ஷகு'ட்ட' லுண்ட'வ்ரு'ஞ ஷாகன்
'ஜல்ப' முதலிய தாதுக்களுக்குப்பின் (கர்த்தா அத்ந இயல்புடையவன் முதலிய பொருட்களில்) 'ஷாகன்' ஒட்டு வரும். 'ஷாகன்' இன் 'ஷ்' ஒரு 'இத்' ஆகும். இதைச் சேர்த்து ஆக்கப்பட்ட சொற்களின் பெண்பாற் சொற்கள் 'ஙீஷ்' ஒட்டுச் சேர்த்து பெறப்படுமென்று இந்தர 'இத்' குறிக்கும் (4.1.41)
ஜல்பாக: (ஜல்ப் + ஷாகன்) 'வாயாடி'
பி⁴க்ஷாக: 'பிச்சைக்காரன்', 'இரவலர்'
கு'ட்ட'ாக: 'உடைப்பவன்/உடைப்பது'
லுண்ட'ாக: 'திருடன்'
வராக

**3.2.156** ப்ரஜோரினி
'ப்ர + ஜு' தாதுவுடன் (கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்) 'இ'னி' ஒட்டு வரும்.
ப்ரஜவீ (ப்ர + ஜு + இனி = இன்)
வேகமாக ஓடுபவன்/ஓடுவது

**3.2.157** ஜித்³ரு'க்ஷி விஸ்ரீண்வ மாவ்ய
த²ாப்⁴யமபரிபூ⁴ ப்ரஸூப்⁴யஸ்' ச
(கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்)
'இனி' ஒட்டு கீழ்க்கண்ட தாதுக்களுக்குப்பின் வரும்.

| | | |
|---|---|---|
| ஜீ (வெல்) ஜயீ | – | 'வாகை சூழ்ந்தவன்' |
| த்³ரு' (மதி) த³ரீ | – | 'மதிக்கிறவன்' |
| க்ஷி (அழி, வசி, க்ஷயீ, போ) | | 'அழிகிறவன், வசிக்கிறவன், செல்கிறவன்' |
| விஸ்ரி(தங்கு) | – | விஸ்ரயீ (தங்குகிறவன்) |
| இண் (போ) | – | அத்யயீ 'எல்லை கடப்பவன்' |
| வம் (வாந்தியெடு) | – | வமீ 'வாந்தியெடுக்கிறவன்' |

அவ்யத்² (வலி, கெடாத) அவ்யதீ² 'வலியில்லாதவன்'
அப்⁴யம் (புண்படுத்து)– அப்⁴யமீ – 'புண்படுத்துபவன்'
பரிபூ⁴ (அவமதி) – பரிப⁴வீ – 'அவமதிப்பவன்'
ப்ரஸூ (அடை, பெறு) – ப்ரஸவீ – 'பெறுகிற, உண்டாக்குகிற'

**3.2.158** ஸ்ப்ரு¹ஹி க்³ருஹி பதி த³யி
நித்³ரா தந்த்³ராஸ்¹ ரத்³ த⁴ாப்⁴ ஆலுச்
(கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்)
'ஆலுச்' ஒட்டு கீழ்க்கண்ட தாதுக்களுக்குப்பின் வரும்.

ஸ்ப்ரு¹ஹ் – ஸ்ப்ரு¹ஹயாலு: – 'விரும்புபவன்'
க்ரு¹ஹ் – க்ரு¹ஹயாலு: – 'பிடித்துக் கொள்பவன்'
பத் – பதயாலு: – 'செல்பவன்'
தய் – தயாலு: – 'இரக்கமுள்ளவன்'
நித்³ரா – நித்³ராலு: – 'உறங்குபவன்'
தந்த்³ரா – தந்த்³ராலு: – 'சோம்பேறி'
ஸ்¹ரத்³த⁴ா – ஸ்¹ரத்³த⁴ாலு: – 'நம்பிக்கையுள்ளவன்'

வா: அலுசி ஸீ¹ஙோ க்³ரஹணம் கர்த்வ்யம்
'ஸீங்' தாதுவையும் 'ஆலுச்' ஒட்டோடு இணைக்க வேண்டும்.
ஸ¹யாலு: 'படுப்பவன், உறங்குபவன்'

**3.2.159** த³ாதே⁴ட் ஸி ஸ¹த³ ஸதே³ா ரு
த³ா (கொடு) தே⁴ (உறிஞ்சு) ஸி(கட்டு) ஸ¹த்³ (விழு) ஸத்³(உட்கார், அமர்) ஆகியவற்றிற்குப்பின் ரு ஒட்டு வரும்.

த³ாரு: – 'கொடையாளி'
த⁴ாரு: – 'பால்குடிப்பவன் அதாவது குழந்தை'
ஸேரு: – 'கட்டுபவன்'
ஸ¹த்³ரு: – 'விழுகிறவன்'
ஸத்³ரு: – 'உறுதியான'

**3.2.160** ஸ்ரு¹ க⁴ஸ்யத³ க்மர ச்
ஸ்ரு¹ (ஓடு) க⁴ஸ், அத்³ (உண்) ஆகியவற்றிற்குப்பின் (கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்) க்மரச் ஒட்டு வரும்.

ஸ்ரு¹மர: – 'ஒருவகை மான்'
க்⁴ஸ்மர
அத்³மர: – 'அதிகமாக உண்பவன்'

**3.2.161** ப⁴ஞ்ஜ் ப⁴ாஸ மிதே³ா கு⁴ரச்
(கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களைக் குறிக்கும் ) கு⁴ரச் ஒட்டு ப⁴ஞ்ஜ் (உடை), ப⁴ாஸ் (ஒளிவிடு), மித்³ (கொழு) ஆகியவற்றிற்குப் பின்

வரும்.

ப[4]ங்கு[3]ரம் கா[1]ஷ்ட[1]ம் – 'உடையக்கூடிய கட்டை'

ப[4]ாஸுரம் ஜ்யோதி – 'பிரகாசமுள்ள ஒளி'

மேது[3]ர: பஸு[1]: – 'கொழுத்த விலங்கு'

**3.2.162** விதி[3] பி[4]தி[3] ச்[1]சி[2]தே[3]: குரச்

(கர்த்தா அந்த இயல்பைக் கொண்டவன் முதலிய பொருட்களில்) வித்[3] (அறி), பி[4]த்[3](பிள) சி[2]த்[3] (வெட்டு ஆகியவைகளுக்குப் பின் 'குரச்' ஒட்டு வரும்.

விது[3]ர: பண்டி[3]த: – 'அறிவுள்ள/படிப்பாளி/அறிந்த'

பி[4]து[3]ரம் காஷ்ட[1]ம்: – 'உடையக்கூடிய கட்டை'

சி[2]து[3]ரா ரஜ்ஜு: – 'அறுந்து போகக்கூடிய கயிறு'

பி[4]த்[3], சி[2]த்[3] என்ற தாதுக்கள் தற்சுட்டு வினைகளாக, இவ்வொட்டுடன் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

வா: வ்யதே[4]: ஸம்ப்ரஸாரணம் குரச் ச வக்தவ்ய:

'குரச்' ஒட்டு வ்யத்[4] (கொல்) என்ற தாதுவுடன் வரும். அரை உயிர் (Semi vowel) உயிராகும் (Vocalisation) விது[4]ர:-

**3.2.163** இண் நஸ்[1] ஜி ஸர்த்திப்[4]ய: க்[1]வரப்

(கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்), இண், (போ), நஸ்[1] (அழி) ஜி (வெல்) ஸர்த்தி (ஓடு, போ) ஆகியவற்றுக்குப்பின் 'க்வரப்' ஒட்டு வரும். 'க்வரப்' இன் ஈறான 'ப' தாதுவுக்கும், ஒட்டுக்கும் இடைய 'துக்' வருமென்பதைக் குறிக்கும் (6.1.71) இ + க்வரப் = வர, துக் = த் (6.1.71) =

இத்வர: 'பிரயாணி'

இத்வரீ (இத்வர + ஙீப் (4.1.45) பிரயாணி (பெண்பால்)

நஸ்வர: 'அழியக்கூடியது'

நஸ்வரீ: (பெண்பால்) 'அழியக்கூடியது'

ஜித்வர: 'வென்றவன்' ஜித்வரீ

ஸ்ரரு[1] த்வர: ஒடுகிற, அதாவது நதி

ஸ்ரு[1]த்வரீ:- ஒடுகிற, அதாவது நதி

இங்கு கூறப்பட்ட ஒட்டு 'வல்' ப்ரத்யாஹாரத்தைச் சேர்ந்த ஒரு எழுத்தை முதலாகக் கொண்டமைவதால், 'இட்' இடையே வரவேண்டும் (7.2.35) ஆனால் 7.2.8 அதைத் தடை செய்கிறது.

**3.2.164** க[3]த்வரஸ்[1] ச

'கத்வர' என்ற சொல் ஒரு நிபாதனமாகும்.

'க[3]ம்' என்ற தாதுவின் இறுதி 'ம்' கெட்டு 'க்வரப்' இணைக்கப்பட்டிருக்கிறது.

க[3]த்வர: க[3]த்வரீ

**3.2.165** ஜாக[3]ரூக[1]

ஜாக்[3]ரு[1] (விழி) என்ற தாதுவுக்குப் பின் (கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்) ஊக: என்ற ஒட்டு வரும். ஜாக3ரூக:

**3.2.166** யஜ ஜப' த³ஸ'ாம் யங

'யங்' இல் முடியும் யஜ் முதலிய தாதுக்களுக்குப்பின் 'ஊக' என்ற ஒட்டு (கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்) வரும்.

யாயஜூக: – 'அடிக்கடி யாகம் பண்ணுபவன்'

ஜஞ்ஜபூக: – 'நிறைய ஜபம் பண்ணுபவன்'

த³ந்த³ஸூக: – 'திரும்பத் திரும்பக் கடிப்பவன்'

**3.2.167** நமி கம்பி ஸ்ம்யஜஸ கம ஹிம்ஸ தீ³போ ர:

'நம்' (வணங்கு), கம்ப்(ஆடு), ஸ்மி(சிரி) அஜஸ் (நிறுத்தாத) கம்(விரும்பு), ஹிம்ஸ் (துன்பப்படுத்து) தீப் (ஒளிவிடு) ஆகிய தாதுக்களின் பின் (கர்த்தா அந்த இயல்பு உடையவன் முதலிய பொருட்களில்) 'ர' ஒட்டு வரும்.

நம்ரம் காஷ்ட'ம் – வளைந்த கம்பு

க'ம்ப்ரா ஸ'ாக²ா – ஆடும் கிளை

ஸ்மேரம் முக²ம் – சிரித்த முகம்

அஜஸ்ரம் ஜுஹோதி – இடைவிடாது வேள்வி செய்பவன்.

[1]கம்ரா யுவதி: – 'விரும்பத்தக்க யுவதி'

ஹிம்ஸ்ரம் ரக்ஷ: – 'கொல்லும் அரக்கன்'

தீ³ப்ரம் க'ாஷ்ட'ம்: – 'எரியும் கட்டை'

'அஜஸ்ரம்' என்ற சொல், ஜஸ் (விடுவி) என்ற தாதுவுடன் எதிர் மறை ஒட்டான 'நஞ்'ஐ இணைத்து 'ர' ஒட்டை தாதுவுக்குப் பின் சேர்த்து விதிக்குப் புறம்பாக (வழுவு) ஆக்கப்பட்டிருக்கிறது. இது வினையுரிச் சொல் (adverb) ஆகப்பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

**3.6.168** ஸனா ஸ'ம்ஸபி⁴க்ஷ உ:

'ஸன்' (Desiderative) ஒட்டில் முடியும் தாதுக்கள், ஆஸ'ம்ஸ் (விரும்பு), பிக்ஷ் (இர) ஆகியவற்றிற்குப் பின் (கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்) 'உ' ஒட்டு வரும்.

சிகீ'ர்ஷு: (க்ரு¹ + ஸன் – சிகீர்ஷ + உ) செய்ய விரும்புபவன்

ஜிஹீர்ஷு: (எடுத்துக் கொள்ள விரும்புபவன்)

ஆஸ'ம்ஸு: – 'விரும்புகிறவன்'

பி⁴க் ஷு: – 'பிச்சைக்காரன்'

இங்கு, ஆங் + ஸ'ம்ஸ் (விரும்பு) தா. பா. 629) என்ற தாதுவைக்குறிக்கும். புகழ் தா. பா.728) என்ற பொருளை உணர்த்தும் தாது அல்ல.

**3.2.169** விந்து³ரிச்'சு²

(கர்த்தா அந்த இயல்பையுடையவன் முதலிய பொருட்களில்) விந்து, இச்சு என்ற சொற்கள் நிபாதனமாக காணப்படுகின்றன. 'வித்³' என்ற தாதுவுடன் 'நும்' ஆகமமும், 'இஷ்' தாதுவின் 'ஷ்'வின் இடத்தில்ச்² உம் விதிக்குப் புறம்பாக வருகின்றன. இத்துடன் 'உ' ஒட்டு இணைக்கப்பட்டிருக்கிறது.

வித் + உ, நும் = ந், = விந்து³ :அறிவுள்ள

இஷ் + உ, ஷ் → ச்[2], = இச்[1]சு[2] :விரும்புகிற

**3.2.170** க்யாச்[1]ச[2]ந்த[3]ஸி

வேதமொழியில், 'க்ய' (Denominative suffix) வில் முடியும் தாதுக்களுக்குப்பின் (கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்) 'உ' ஒட்டு வரும்.

க்யச், க்யஷ், க்யங் ஆகிய மூன்றையும் (பார்க்க 3.1.8, 11, 13) சேர்த்து 'க்ய' என்ற ஒட்டுக் குறிக்கிறது.

மித்ரயு: 'நண்பனை விரும்புகிறவன்'

மித்ர + க்யச் = ய (3.1.8) = மித்ரய (2.4.71) + உ = மித்ரய் (6.4.48) + உ மித்ரயு: 'சிநேகமான'

ஸம்ஸ்வேத[3]யு (ஸம்ஸ்வேத[3] + க்யஷ் = ய + உ) 'வியர்க்கிற'

ஸும்னயு: (ஸும்ன + க்யங் (3.1.11) + உ) இரக்கமுள்ள பேச்சு மொழியில்

மித்ரீயிதா (மித்ர + க்யச் = மித்ரீய + த்ரு[1]ன்)

**3.2.171** ஆத்[3]ரு[1]க[3] மஹன ஜன: கிகிநௌ லிட் ச

'ஆ', ரு[1] என்ற எழுத்துக்களை ஈறாக் கொண்ட தாதுக்கள், க[3]ம், ஹன், ஜன் ஆகியவைகளுக்கும், பின் (கர்த்தா அந்த இயல்பையுடைவன் முதலிய பொருட்களில்) வேத மொழியில் கி, கின், என்ற ஒட்டுக்கள் வரும். மேலும் இவைகள் லிட்–ஐப் போன்று செயற்படும். அதாவது இரட்டிப்பு ஏற்படும்.

பபி: ஸோமம் 'ஸோமம் குடிக்கும்'

பா + கி = இ = பபா + இ = பப் (6.4.24) + இ = பபி த[3]ா + கின் = இ = த[3]த[3]ா + இ =த3த் + இ = த[3]தி[3]:

கா: 'பசுக்களைத் தரும்'

மித்ரா வருணென ததுரி:

(த்ரு[1] + கி) இ = தத்ரூ[1] + இ = ததுரி: 'வெல்கிற'

தூ[3]ரே ஹ்யத்[4]வா ஜகு[3]ரி:

ஜகு[3]ரி (க்ரூ[1] + கி)

ஜக்மி: (க[3]ம + கி) 'செல்கிற'

ஜக்[4]னி: (ஹன் + கி) கொல்கிற

ஜக்[3]ஞி :(ஜன் + கி ) 'முனைகிளம்பும்'

இந்த ஒட்டுக்களில் 'க்' ஒரு 'கித்' ஆகும் இவைகள் 'லிட்' போன்று செயற்படுவதால் 1.2.5இன்படி, 'கித்' ஆகும் என்பது தெளிவு. அதனால், இதை மறுபடியும் கூறுவதற்கு தேவையேயில்லை என்ற வினாவெழுப்புகிறது.

சூ. 7.4.11 ரு'ச்ச[2], என்ற தாதுவும் ரூ'வை ஈறாகக் கொண்ட தாதுக்களும், 'லிட்' தொடரும்போது குணம் ஆதேசமாகுமென்று கூறுகிறது. இதன்படி குண எழுத்து பதிலியாக வரும். ஆகவே, ரூ' (குறிலும், நெடிலும்)வை ஈறாகக் கொண்ட தாதுக்களுக்குப்பின் கி, கின் ஒட்டுக்கள் நிற்கும்போது, குண எழுத்து ஆதேசமாவத்தைத் தடுக்கவே, இங்கு 'கித்' பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

வா: கிகிநௌ உத்ஸர்க[3]ஸ்' ச[2]ந்த[3]ஸி ஸத[3]ா
தி[3]ப்[4]யோ த[3]ர்ஸ'னாத்

வேத மொழியில், கி, கின் ஆகிய ஒட்டுக்கள் எல்லா தாதுக்களுடனும் வரும். இச்சூத்திரத்தில் குறிப்பிடப்பட்ட தாதுக்களோடு மட்டுமல்ல. ஏனென்றால், 'ஸத்' முதலிய தாதுக்களுடனும் இவைகள் காணப்படுகின்றன.

ஸேதி[3]: (ஸத் + கி)

நேமி: (நம் + கி)

வா: ப[4]ாஷாயாம் த[4]ாஞ், க்ருஞ் ஸ்ரு' ஜனி க[3]மி நமிப்[4]ய: கிகிநௌ வக்தவ்யௌ பேச்சு மொழியில் த4ாஞ் முதலிய தாதுக்களுடன் கி, கின் ஒட்டுக்கள் வரும்.

த[3]தி[4]: (த[4]ா + கி) 'தாங்குபவன்'

சக்ரி: (க்ரு + கி)

ஸஸ்ரி: (ஸ்ரு' + கி)

ஜக்[3]ஜி: (ஜன் + கி)

ஜக்[3]மி: (க3ம் + கி)

நேமி: (நம் + கி)

வா: ஸஹி வஹி சலி பதிப்[4]யோ யங்ந்தேப்[4]ய கிகிநௌ வக்தவ்யௌ 'ஸஹ்' முதலிய தாதுக்களுக்குப் பிறகு கி, கின் வரும். ஸாஸஹி: (ஸஹ் + யங் – ஸாஸஹ்ய (7.4.83) + கி = இ = ஸாஸஹி: 'பொறுமையுள்ளவன்'

வாவஹி: 'தூக்குபவன்'

சாசலி: 'செல்பவன்'

பாபதி: 'விழுபவன்'

**3.2.172** ஸ்வபித்ரு'ஷோர் நஜிங்

ஸ்வப் (உறங்க) த்ரு'ஷ் (தாகமாகு) என்ற தாதுக்களுக்குப் பிறகு, கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்) நஜிங் ஒட்டு வரும்.

ஸ்வப்னக் (ஸ்வப் + நஜிங் = நஜ் = ஸ்வர்னஜ்) 'உறங்குகிற' த்ரு1ஷ்ணக் 'தாகமாயிருக்கிற'

வா: த்[4]ரு'ஷேஸ் ச இதி வக்தவ்யம்

த்[4]ருஷ் (நிந்தி, அவமதி) என்ற தாதுவுக்குப் பின்னும் இந்த ஒட்டு வரும்.

த்$^{4}$ருஷ்ணக் அவமதிக்கிறவன்

**3.2.173** ஸ்$^{1}$ரு$^{1}$வந்த$^{3}$யோராரு:
(கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்) 'ஆரு' என்ற ஒட்டு ஸ்$^{1}$ரு$^{1}$, (துன்புறத்து), வத்$^{3}$ (வணங்கு) என்ற தாதுக்களுக்குப்பின் வரும்.
ஸ$^{1}$ராரு: 'தீங்கான'
வந்தாரு: 'கவி'

**3.2.174** பி$^{4}$ய: க்ரு$^{1}$க்லுகநௌ
பீ$^{4}$ (பயப்படு) தாதுவுக்குப்பின் 'க்ரு$^{1}$', 'க்லுகன்' ஆகிய ஒட்டுக்கள், கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில் வரும்.
பீ$^{4}$ரு: (பீ$^{4}$ + க்ருக் = உ) 'பயப்படுகிற'
பீ$^{4}$லுக: (பீ + லுகன் = லுக) கரடி, புலி, நரி

வா: க்ரு$^{1}$கன்னபி வக்தவ்ய:
'க்ரு$^{1}$கன்' என்ற ஒட்டும் 'பீ$^{4}$'க்குப்பின் வரும் பீ$^{4}$ருக: (பீ$^{4}$ + க்ரு$^{1}$கன் =ருக) பயப்படுகிறவன்

**3.2.175** ஸ்தே$^{2}$ஸ$^{1}$ப$^{4}$ாஸபி ஸகஸோ வரச்
ஸ்த$^{2}$ா (நில்), ஈஸ் (ஆள்) ப$^{4}$ாஸ் (பிரகாசி) பிஸ், கஸ் (செல்) ஆகிய தாதுக்களுக்குப்பின் (கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில்) 'வரச்' ஒட்டு வரும்.
ஸ்த$^{2}$ாவர: (ஸ்த$^{2}$ா + வரச் = வர)
ஈஸ்$^{1}$வர: 'ஆள்பவன், கடவுள்'
ப$^{4}$ாஸ்வர: 'பிரகாசிக்கிறவன்'
பே$^{1}$ஸ்வர: 'அழிக்கிறவன்'
விகஸ்வர: 'திறக்கிறவன்' 'விரிவாக்குபவன்'

**3.2.176** யஸ்$^{1}$ச யங:
'யங்' இல் முடியும் யா (போ) என்ற தாதுவுக்குப்பின் (கர்த்தா அந்த இயல்பையுடையவன் முதலிய பொருட்களில்) வரச் ஒட்டு வரும்.
யாயாவர: (யா + யங் = யாயாய + வரச் = வர)
யாயாவர: (6.4.48 6.1.66) அடிக்கடி அல்லது அதிகமாகச் சுற்றுபவன்

**3.2.177** ப்$^{4}$ராஜ ப$^{4}$ாஸது$^{4}$ர் வித்$^{3}$யுதோர்ஜி
ப்ரு$^{1}$ ஜுக்$^{3}$ராவஸ்து வ: க்விப்
ப்$^{4}$ராஜ் முதலிய தாதுக்களுக்குப்பின் (கர்த்தா அந்த இயல்லையுடைவன் முதலிய பொருட்களில்) 'க்விப்' ஒட்டு வரும்.
விப்$^{4}$ராட் (வி + ப்$^{4}$ராஜ் + க்விப்) 'ஒளிவிடுகிற'
விப்$^{4}$ராஜௌ (இருமை) விப்$^{4}$ராஜ: (பன்மை)

ப4ா: ப4ாஸௌ, ப4ாஸ: 'வெளிச்சம், ஒளிவிடுகிற'
துா4, து4ரௌ: து4ர: 'துன்புறுத்துகிற'
வித்3யுத்: வித்3யுதௌ, வித்யுத: 'மின்னல்'
ஊர்க் ஊர்ஜௌ ஊர்ஜ: 'பலம்'
பூ: புரௌ புர: 'காப்பாற்றுகிற, நிரப்புகிற'

வா: ஜவதே: தீ3ர்க3ஸ் ச நிபாத்யதே
'ஜு'வுக்குப்பின் 'கவ்ப்' வரும், அதன் நீட்டல் நிபாதனமாகும்.
'ஜு' ஜூவௌ ஜுவ:
க்3ராவஸ்துத், க்3ராவஸ்துதௌ, க்3ராவஸ்துத: 'கல்லை வணங்குபவன்'
சூ. 3.2.75, 76இன்படி இத்தாதுக்களுக்குப்பின் 'க்விப்' ஒட்டு வரமுடியும். ஆயினும் வா அஸரூப விதி (3.1.94) தச்1சீ2லிகாதி ஒட்டுக்களுக்குப் பயன்படுத்தக் கூடாது என்று உணர்த்த, இங்கு இ தை மறுபடியும் கூறப்பட்டிருக்கிறது.

**3.2.178** அன்யேப்4யோ அபித்3ரு1ஸ்யதே
(மேலே குறிப்பிட்ட தாதுக்களைத் தவிர) மற்ற தாதுக்களோடும் (கர்த்தா அந்த இயல்புடையவன் முதலிய பொருட்களில் 'க்விப்' ஒட்டு காணப்படுகிறது. த்3யுத், க3ம், ஹு ஆகிய தாதுக்களுக்குப்பின் 'க்விப்' ஒட்டும், இரட்டித்தலும் நிகழும்.
தி3த்3யுத், 'பிரகாசிக்கிற'
ஜக3த் 'உலகம், போகிற'

வா: ஜுஹோதேர் தீ3ர்க4ஸ்1 ச
'ஹு' தாது நெடிலாகவும் ஆகும்.
ஜுஹு: பிறைச் சந்திரன் போன்ற வடிவத்திலமைந்த கரண்டி யாகத்தின்போது நெருப்பில் நெய் விடப் பயன்படுத்துவது.

வா: த்3ரு1ப4யே இத்யஸ்ய ஹ்ரஸ்வஸ1 சத்3வே ச த்3ரு (பயம்)என்ற தாது குறிலாகவும் இரட்டித்தலும் ஆகும்.
த்3த்3ருத் 'கிழிக்கிற'

வா: த்4யாயதே ஸம்ப்ரஸாரணம்
'த்4யை' என்ற தாது ஸம்ப்ரசாரணம் ஆகும்.
தீ4: 'அறிவு, புத்தி'

**3.2.179** பு4வ: ஸம்க்3ஞாந்தரயோ:
'பூ' தாதுவுக்குப்பின் 'க்விப்' ஒட்டு, தருவிக்கப்பட்ட சொல், ஒரு பெயர் அல்லது உத்தரவாதம் குறிக்கும்போது இணைக்கப்படும்.
விபூ4: 'ஒரு பெயர்'

ப்ரதிபூ4: 'உத்திரவாதி'

**3.2.180** விப்ரஸம்ப்4யோ ட்3வஸம்க்3ஞாயாம்

வி, ப்ர, ஸம் ஆகியவைகள் முன்னொட்டாக நிற்கும் 'பூ4' தாதுவுக்குப்பின், டு3 ஒட்டு தருவிக்கப்பட்ட சொல் ஒரு பெயராக அமையாவிட்டால் வரும்.

யுக் (யுஜ் + க்விப்) 'சேர்பவன், சந்திப்பவன்'

சி2த்1

பி4த்1 உடைப்பவன்

'காணப்படுகிறது' (த்3ருஸ்1யதே) என்ற சொல், (சூத்திரத்தில்) வே று விதிகளும், 'க்விப்' ஒடு பயன்படுத்தப்படுமென்று மறைமுகமாக உ ணர்த்துகிறது. ஆகையால், சில இடங்களில், உயிர் நீட்டித்தல், மற் ற இடங்களில் தாது இரட்டித்தல், வேறு இடங்களில், அரை உயிர்களை உயிராக்குதல், வேறு சில இடங்களில் உயிராக்காமை போன்ற பலவகையான மாறுபாடுகளைக் காண்கிறோம்.

வா: வசிப்ரச்ச2 யாயதஸ்துகட1 ப்ருஜீஸ்ரீணாம் தீ3ர்கே4ா அஸம்ப ரஸாரணம் சவச், முதலிய தாதுக்களுக்குப்பின் 'க்விப்' ஒட்டு வரும், நீட்டித்தல் இ ருக்கும், ஸம்ப்ர ஸாரணம் (உயிராக்கம்) இருக்காது.

வசி1–வாக் (வச் + க்விப்) (ஸம்ப்ரசாரணமில்லை) பேசுபவன்

ப்ரச்1ச்2–ஸ1ப்3த3 ப்ராச்1ச்2–ஸ1ப்3த3 ப்ராட் (முதல் வேற்றுமை ஒருமை) 'சத்தத்தைக் கேட்கிறவன்'

ஆயதஸ்தூ: 'அதிகமாகப் புகழ்பவன்'

கடப்1ரூ: 'புழு'

ஜீ: 'வேகமாக' (செல்பவன்)

ஸ்1ரீ: 'லக்ஷ்மி'

வா: த்3யுதி க3மி ஜுஹோதீனாம் த்3வே ச

விபு4 'எங்கும் நிறைந்தவன்'

ப்ரபு4: 'யஜமானன்'

ஸம்பு4: 'படைப்பவன்'

வா: டு3ப்ரகரணே மித1த்3ரு1வாதி3ப்4ய உபஸம்க்2யானம்

டு3 ஒட்டைப் பற்றிப் பேசும்போது மித1த்3ரு1 முதலியவைகளையும் இத்துடன் சேர்த்துக் கூற வேண்டும்.

மித1த்3ரு: 'கடல்'

ஸ1ம்பு4: 'மகிழ்ச்சியளிக்கும்.'

**3.2.181** த4: கர்மணிஷ்ட்1ரன்

த4ா (ஊட்டு) என்ற தாதுவுக்குப்பின் செயப்படு பொருளைக் குறிக்கும் ஷ்ட்ரன் ஒட்டு வரும்.

'ஷ்' ஒரு இத். இது பெண்பாற் சொற்கள் 'ஙீஷ்'ஐச் சேர்த்து பெறப்படுமென்று குறிக்கும்.

த்[4]ாத்[1]ரீ (த்[4]ா + ஷ்ட்[1]ரன் = த்ர + ஙீஷ் = ஈ)

செவிலித்தாய் அல்லது நெல்லிக்காய்

**3.2.182** த[3]ம்னீஸ[1] ஸயுயுஜஸ்து[1] து[1]த[3]ஸிஸிச மிஹ பத[1]த[2]ஸ[1] நஹ: கரணே

த[3]ா (வெட்டு), நீ (அழைத்துச் செல்), ஸ[1]ஸ் (துன்புறுத்து), யு (சேர், கல்) யுஜ் (இணை) ஸ்து (புகழ்) துத்[3] (வலியுண்டாக்கு), ஸி (கட்டு), ஸிச் (தெளி), மிஹ் (சிறுநீர்கழி), பத் (விழு), த[3]ஸ் (கடி) நஹ் (கட்டு) ஆகிய தாதுக்களுக்குப்பின் தருவிக்கப்பட்ட சொல், 'கருவி' என்ற பொருளை உணர்த்தும்போது ஷ்ட்[1]ரன் ஒட்டு வரும்.

த[3]ாத்[1]ரம் 'அரிவாள்'

நேத்[1]ரம் 'கண்'

ஸ[1]ஸ்த்[1]ரம் 'ஆயுதம்' யோத்ரம் 'கட்டுதளை'

யோக்[1]த்ரம் 'தோல் வார், தும்புக் கயிறு'

ஸ்தே[1]ாத்ரம் 'புகழ்ச்சி, சொல் மாலை'

தே[1]ாத்[1]ரம் 'காற்றுக்கோள், அங்குசம்'

ஸேத்ரம் 'கயிறு, விலங்கு எலும்புகளைப் பிணைக்கும் தசை நார்'

ஸேக்த்ரம் 'தெளிப்பவன் (தண்ணீர்)'

மேட்[3]ரம் 'ஆண்குறி'

ப[1]த்[1]ரம் 'வண்டி'

த[3]ம்ஷ்ட்[1]ரா பெரிய பல். இது அ[1]ஜாதி வகுப்பைச் சேர்ந்தது. அதனால் பெண்பால் 'ட[1]ாப்' சேர்த்து ஆக்கப்பட்டிருக்கிறது.

'த[3]ம்ஸ்' என்ற தாது அனுநாஸிகமில்லாமல் இச்சூத்திரத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. சில ஒட்டுக்களின் முன் இதன் அனுநாஸிகம் கெடுமென்று இது குறிக்கும். காட்டாக 'ல்யுட்' தொடரும்போது, த3ஸ1னம் 'பல்' என்று ஆகும்.

நத்[3]த்[4]ரீ (ணஹ் = நஹ் + ஷ்ட்[1]ரன் = த்ர

நத்[4] (8.2.34) = நத்[4] + த்[4]ர = நத்[3] (8.4.53) + த்[4]ர = நத்[3]த்[4]ர + ஈ = நத்[3]த்[4]ரீ – 'கயிறு'

**3.2.183** ஹலஸூகரயோ: புவ:

'பு' தாதுவுக்குப்பின் 'ஷ்ட்[1]ரன்' ஒட்டு, (ஆக்கப்பட்ட சொல்) கருவி என்ற பொருளைக் குறிக்கும்போது வரும். அக்கருவி, ஏர் அல்லது பன்றியின் ஒரு அவயவமாக பகுதியாக இருக்க வேண்டும்.

ஹலஸ்ய போத்ரம் – 'ஏர்க் கொழு'

ஸூகரஸ்ய போத்ரம் – 'பன்றியின் நீண்ட மூக்கு'

**3.2.184** அர்த்திலூதூ ஸூக[2]ன ஸஹ சர இத்[1]ர:

'இத்ர' ஒட்டு, ரு[1] (போ), லூ (வெட்டு) தூ[4] (ஆட்டு) ஸூ[1] (உண்டாக்கு), க[2]ன்

(தோண்டு, கொத்து) ஸஹ் (தாங்கு) சர் (போ) ஆகிய தாதுக்களுக்குப்பின் கருவிப் பொருளில் வரும்.

அரித்ரம் – 'படகோட்டும் துடுப்பு'
லவித்ரம் – 'அரிவாள்'
த$^{4}$வித்ரம் – 'விசிறி, காற்றோட்டச் சாதனம்'
ஸவித்ரம் – 'விளைவிக்கப்பயன்படும் ஒரு கருவி'
க$^{2}$னித்ரம் – 'கோடலி'
ஸஹித்ரம் – 'பொறுமை'
சரித்ரம் – 'நடத்தை, ஒழுக்கம்'

**3.2.185** புவ: ஸம்க்$^{3}$ஞாயாம்

'பு' (தூய்மையாக்கு)வுக்குப்பின் 'இத்ர' என்ற ஒட்டு, கருவிப் பொருளில் தருவிக்கப்பட்ட சொல் ஒரு பெயராகும் போது வரும்.
த$^{3}$ர்ப$^{4}$: பவித்ரம்
ப$^{3}$ர்ஹிஷ் பவித்ரம் ஒரு வகைப் புல்லினால் செய்யப்பட்டது.
நெய் முதலியவைகளை தூய்மையாக்கப் பயன்படுத்துவது 'சல்லடை அல்லது வடிகட்டி, மோதிர விரலில் அணியும் தர்ப்பையினால் ஆக்கப்பட்டது.'

**3.2.186** கர்தரி சர்ஷிதே$^{3}$வதயோ:

'பு'வுக்குப்பிறகு, கருவி கர்த்தா என்ற பொருட்களில் முறையே ரிஷி, கடவுள் தொடர்பாகப் பயன்படுத்தும்போது 'இத்ர' ஒட்டு வரும்.
பவித்ரோ அயம் ரிஷி: (கருவி) இவரால் தூய்மையாக்கப்பட்டது)
அக்னி: பவித்ரம் (கர்த்தா) இக்கடவுள் தூய்மையானவர்

**3.2.187** ஞீத: க்த:

'ஞி'யை இத்தாகக் கொண்ட தாதுக்கள் நிகழ்காலத்தைக் குறிக்க, 'க்த' ஒட்டோடு வரும்.
நிஷ்டா ஒட்டான 'க்த' பொதுவாக இறந்த காலத்தைக் குறிக்கும். (பார்க்க 3.2.102) இச்சூத்திரம், 'ஞி'யை இத்தாகக் கொண்ட தாதுக்கள் நிகழ்காலத்தைக் குறிக்குமென்று சூ. 102க்கு புறனடையாக அமைகிறது.
மின்ன: (ஞிமித்$^{3}$) 'பருமனாகு'
க்ஷ்விண்ண (ஞிக்ஷ்வித்) 'விடுதலையான'
த்$^{4}$ருஷ்ட$^{1}$ :(ஞித்$^{4}$ருஷா) 'துணிவுள்ள'

**3.2.188** மதி பு$^{3}$த்$^{3}$தி$^{4}$ பூஜார்தே$^{2}$ப்$^{4}$யஸ் ச

விருப்பம் (மதி), அறிவு (பு$^{3}$த்$^{3}$தி$^{4}$) மரியாதை (பூஜா) ஆகிய பொருட்களைக் குறிக்கும் தாதுக்களுக்குப்பின், நிகழ் காலப் பொருளில் 'க்த' ஒட்டு வரும்.
ராக்$^{3}$ஞாம் மத:
ராக்$^{3}$ஞாம் இஷ்ட$^{1}$: 'அரசனால் விரும்பப்பட்ட'

ராக்[3]ஞாம் பு[3]த்[3]த[4] 'அரசனுக்குத் தெரிந்த'
ராக்[3]ஞாம் க்ஞாத:

ராக்ஞாம் பூஜித: 'அரசனால் மதிக்கப்பட்ட
ராக்ஞாம் அர்ச்சித:

மேலே கூறிய தாதுக்களில் சேர்க்கப்படாத மற்ற தாதுக்களை சுட்டும் வகையில் அமைகிறது, சூத்திரத்திலுள்ள 'ச' என்ற சொல், ஆகையால், கீழ்க்காணும் தாதுக்களிலிருந்து தருவிக்கப்பட்ட எச்சங்கள், நிகழ்காலத்தையும் குறிக்கும். அதாவது இவைகள் இறந்த காலம், நிகழ் காலமிரண்டையுமே சுட்டும்.

ஸீலித: பழகுகிற, அனுஷ்டிக்கிற
ரக்ஷித: காப்பாற்றப்பட்ட
க்ஷாந்த: பொறுக்கிற
ஆக்ருஷ்ட: கண்டனம் செய்த
ஜூஷ்ட: திருப்தியுள்ள
ருஷ்ட/ருஷித: கோபமுள்ள
அபி[4]வ்யாஹ்ருத: சொன்ன
ஹ்ருஷ்ட: மகிழ்ச்சியான, திருப்பிதியுடைய
து[1]ஷ்ட: மகிழ்ச்சியான
காந்த: அனுகூலமாக
ஸம்யத: அடக்கிய, தடுத்த
உத்யத: தயாரான
கஷ்டம்: துன்பம், துக்கம் (எதிர்காலப் பொருள்)
அம்ருத: அழியாத அழிவற்ற நிகழ்காலத்தைக் குறிக்கும்.
ஸுப்த: உறங்குகிற
ஸயித: படுத்துக் கொள்கிற
ஆஸித: உண்கிற
லிப்த: பூசுகிற
த்ருப்த: திருப்தியடைகிற

**3.3.1** உணாத[3]யோ ப[3]ஹுலம்

'உண்' முதலிய ஒட்டுக்கள் (நிகழ்காலத்தைக் குறிப்பதாகவும், ஸம்க்3ஞாவாகவும்) பல வகையாகப் பயன்படுத்தப்படுகின்றன.

கா[1]ரு: (க்ரு[1] + உண் = உ → கார் + உ) 'கலைஞன்'
வாயு (வா + உண் = உ → வா + யுக் = ய் (7.3.33) + உ) 'காற்று'
ஜாயு: (ஜி + உன்) 'மருந்து'

**3.3.2** பூ[4]தே[1] அபி த்[3]ருஸ்யந்தே[1]

'உண்' முதலிய ஒட்டுக்கள் கடந்த காலத்தைக் குறிப்பதாகவும் காணப்படுகின்றன.
வர்த்$^1$மன் (வ்ருʼத்$^1$ + மனின்) 'பாதை, வழி' (எது ஒரு விதியாக நிறுவப்பட்டுள்ளதோ)

**3.3.3** ப$^4$விஷ்யதி க$^3$ம்யாதய:
'$^3$கமி' முதலியவைகள் எதிர்காலத்தைக் குறிக்கும்.
க$^2$மீ க்$^3$ராமம் கிராமத்துக்குச் செல்லப் போகும்
ஆக$^3$ாமீ வருகிற, வரப்போகிற
ப்ரஸ்த$^2$ாயீ – கிளம்பப் போகும்.
இங்கு கூறப்பட்டிருக்கிற 'எதிர்காலம்' ஒட்டுக்குத்தான் அடிச் சொல்லுக்கு அல்ல.

வா: அனத்$^3$யத$^1$ன உபஸம் க்$^2$யானம்
'இன்றைக்கு' அல்லழுத (அனத்$^3$யதன) எதிர்காலத்தைக் குறிக்கும் என்று அமைய வேண்டும்.
ஸ்$^1$வோ க$^3$மீ க்$^3$ராமம்
நாளைக்கு போவான் கிராமத்துக்கு
கிராமத்துக்கு நாளை அவன் போவான்

**3.3.4** யாவத் புரா நிபா$^1$தயோர் லட்$^1$
'யாவத்', 'புரா' என்ற நிபாதங்களுடன் நிற்கும் நிகழ்காலத்தைக் கு றிக்கும் ஒட்டான (லட்) எதிர்காலத்தைக் குறிக்கும்.
யாவத் பு$^4$ங்க்தே: 'அவன் கட்டாயம் உண்பான்'
புரா பு$^4$ங்க்தே:

**3.3.5** விப$^4$ாஷா கத$^3$ா கர்ஹ்யோ:
கத$^3$ா, கர்ஹி என்ற சொற்களுடன் நிற்கும் தாதுக்களுடன் எதிர்காலத்தைக் குறிக்க 'லட்' ஒட்டு விருப்பாக வரும்.
கத$^3$ா பு$^4$ங்க்தே (லட்) எப்போது உண்பான்
கத$^3$ா பே$^4$ாக்ஷ்யதே (ல்ருʼட்) எப்போது உண்பான்
கத$^3$ா போ$^4$ாக்தா (லுட்) எப்போது உண்பான்
கர்ஹி பு$^4$ங்க்தே எப்போது உண்பான்
கர்ஹி பே$^4$ாக்ஷ்யதே எப்போது உண்பான்
கர்ஹி பே$^4$ாக்தா எப்போது உண்பான்

**3.3.6** கிம்வ்ருத்தே லிப்ஸாயாம்
'கிம்' அல்லது அச்சொல்லை இணைத்துத் தருவிக்கப்பட்ட சொற்களுடன், வரும் வினை, பேசுபவன் ஒரு பொருளையடைய விரும்புகிறானென்ற பொருளை உணர்த்தும்போது, அவ்வினையுடன், 'லட்' ஒட்டு விருப்பாக,

எதிர்காலத்தைக் குறிக்குமாறு வரும்.
கம் 4வந்த: பே4ாஜயந்தி
தாங்கள் யாருக்கு உணவு அளிப்பீர்கள்
கம் ப4வந்த: பே4ாஜ யிதார:
கம் ப4வந்த: போஜயிஷ்யிஷ்யந்தி
கதரோ பி4க்ஷாம் த3த3ாதி/த3ாஸ்யதி/த3ாத1ா
கதமோ பி4க்ஷாம் த3த3ாதி/த3ாஸ்யதி/த3ாத1ா
கர்த்தா ஒரு பொருளையடைய மறைமுகமாக விருப்பம் தெரிவிக்கு ம் போது தான் இவ்விதி பயன்படுத்தப்படும் மற்ற சூழலில் க: பாட 1லி புத்ரம் க3மிஷ்யதி யார் பாடலிபுத்திரத்துக்குப் போகிறான்?

**3.3.7** லிப்ஸமான ஸித்3தெள ச
'விரும்பிய பொருளையடைதல்' என்ற பொருளை உணர்த்தும் போது ம், எதிர்காலப் பொருளில், நிகழ்கால ஒட்டு (லட்) விருப்பாகப் பயன்படுத்தப்படும்.
யோ ப4க்தம் த3த3ாதி1ஸ ஸ்வர்க3ம் க3ச்1ச2தி (லட்)
யோ ப4க்தம் த3ாஸ்யதி ஸ ஸ்வர்க3ம் க3மிஷ்யதி (ல்ருட்)
யோ ப4க்தம் த3ாத1ா ஸ ஸ்வர்க3ம் க3ந்த1ா (லுட்)
யார் "அன்னம் கொடுக்கிறார்களோ அவர் சுவர்க்கத்தையடைவா ர்கள்."
இங்கு விரும்பப்படும் பொருள் அன்னம் (ப4க்தம்) இதைக் கொடுப்பதால், சுவர்க்கததையடைகிறான் கொடுத்தவன்.
இங்கு உணவைக் கேட்பவன் அதாவது அவன் விரும்பும் பொருளைக் கேட்பவன், இதைக் கொடுப்பவனிடம் (கொடையாளி), "அன்னம் கொடுப்பதால், நீ சுவர்க்கத்தையடைவாய்" என்று அவனுக்குக் கொடுப்பதில் ஆர்வத்தை உண்டாக்குகிறான்.

**3.3.8** லோட3ர்த2 லக்ஷ ணேச
ஏவல் பொருளை சுட்டும் (லோட்3) தாதுவுக்குப்பின் எதிர் காலத் தைக் குறிக்க நிகழ் கால ஒட்டுக்கள் (லட்) விருப்பாக பயன்படுத் தப்படும்.
உபாத்4யாயஸ்1 சே1த3ாக3ச்1ச2தி/உபாத்4யாயஸ்1
சே1தாக3மிஷ்யதி/உபாத்4யாயஸ்சே1தா க3ந்தா அத2த்வம் ச2ந்தே3ா அதீ4ஷ்வ/
அத2த்வம் வ்யாகரண மதீ4ஷ்வ/
ஆசிரியர் வந்தால் நீ வேதம்/ இலக்கணம் படி

**3.3.9** லிங்சோர்த்4வ மௌஹூர்த்திகே
மேற்சூத்திரத்தில் குறிப்பிடப்பட்ட சூழலில் ஒரு முகூர்த்ததுக்குப் பிறகு நிகழவிருக்கும் எதிர்காலத்தைக் குறிக்க, லிங் (Potential) உம் வரும், அதாவது லிங் நிகழ்கால ஒட்டு இரண்டுமே வரும்.
(1) ஊர்த்4வம் முஹூர்தாத் உபாத்4யாயஸ் சே1த3ா க3ச்1சேத் (2) உபாத்4யாயஸ் சேத3ாக3ச்1ச2தி (3) உபாத்4யாயஸ் சே1த3ா க3மிஷ்யதி (4) உபாத்4 யாயஸ் சே1த3ாக3ந்தா அத2த்வம் ச2ந்தே3ா அதீ4ஷ்வ/அத2த்வம் வ்யாகரணமதீஷ்வ

ஒரு முகூர்த்ததுக்குப்பிறகு ஆசிரியர் வந்தால், நீ யாப்பிலக்கணம் அல்லது இலக்கணம் படி
(1) லிங் (2) லட் (3)லுட் (4)ல்ருட்

**3.3.10** துமுன் ண்வுலௌ க்ரியாயாம் க்ரியார்த[2]ாப்[4]யாம்
ஒரு செயல், மற்றொரு செயலுக்காகச் செய்யப்படும்போது,
முதலில் குறிப்பிட்ட செயல் 'க்ரியார்த[2] க்ரியா' என்று கூறப்படுகிறது. இந்த வினை உபபதமாக நிற்கும்போது, தாதுவுடன் 'துமுன்' 'ண்வுல்' ஆகிய ஒட்டுக்கள் எதிர்காலப் பொருளில் வரும்.
பே[4]ாக்தும் வ்ரஜதி (பு[4]ஜ் + துமுன் = தும்) 'உண்ணப் போகிறான்'
பே[4]ாஜக: வ்ரஜதி (பு[4]ஜ் + ண்வுல் = அக)
இங்கு வினைச் சொல் (வ்ரஜ்) உபபதம். இது எதிர்காலத்தில் நிகழவிருக்கும் ஒரு செயலுக்காக, ஒரு செயல் செய்வதைக் குறிக்கிறது.

**3.3.11** ப[4]ாவசனாஸ்[1] ச
செயலை மாத்திரம் குறிக்கும் சில ஒட்டுக்கள் (க[4]ஞ் போன்றவை 3.3.18) தாதுக்களுக்குப்பின் வரும்போதும், எதிர் காலத்தைக் குறிக்கும் (அத்துடன் சேர்ந்து வரும் வினைச் சொல், எதிர் காலத்தில் நிகழவிருக்கும் ஒரு செயலுக்காக, ஒரு செயல் செய்ததைக் குறிக்கும்போது)
பாகாய வ்ரஜதி சமைப்பதற்காகச் செல்கிறான்

**3.3.12** அண் கர்மணி ச
(மற்றொரு செயலுக்காக ஒரு செயல் செய்வது என்ற பொருளில்) தாதுவுடன் செயப்படு பொருள் சேர்ந்து நிற்கும் போது 'அண்' ஒ ட்டு தாதுவுடன் வரும்.
காண்ட[3]லாவோ வ்ரஜதி கிளை வெட்டப் போகிறான்
கோ[3]ாத[3]ாயோ வ்ரஜதி பசுக்களைக் கொடுக்கப் போகிறான்

**3.3.13** ல்ருட்[1]ஸே[1]ஷே ச
மற்ற இடங்களில் ல்ருட்[1] பயன்படுத்தப்படும். அதாவது எதிர்கால த்தைக் குறிக்கவும், எதிர்காலத்தில் நிகழப் போகும் செயலுக்கா க, ஒரு செயல் செய்யப்படுகிறது என்று சுட்டும்போதும், 'ல்ருட்[1]' பயன்படுத்தப்படும்.
கரிஷ்யாமி இதி வ்ரஜதி செய்வேன் என்று போகிறான்
கரிஷ்யதி அவன் செய்வான்

**3.3.14** ல்ருட:[1] ஸத்[3]வா
ல்[1]ருட்[1] உக்குப் பதிலியாக ஸத்[1] (அதாவது ஸ[1]த்ரு[1], ஸானச்) வரும்.
இது ஒரு ஒழுங்குபடுத்தப்பட்ட விருப்பம் (வ்யவஸ்தி[2]த[1]விப[4]ாஷா) லட்[1]க்குப் பதிலியாக, ஸத்ரு, ஸானச் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறதோ அதே போன்று, இவைகளை 'ல்ருட்[1]' உக்குப் பதிலியாகவும் பயன்படுத்தப்படும்.
கரிஷ்யந்தம் (2) தேவ[3]வத[3]த்தம் (2) பஸ்[1]ய செய்யவிருக்கும் தேவதத்தனைப்

பார் கரிஷ்யமாணம் (2) தே³வத³த்தம் (2) பஸ்¹ய செய்யப்படவிருக்கும் தேவதத்தனைப் பார் ஹே கரிஷ்யத்

ஹேகரிஷ்யமாண:

முதல் வேற்றுமையுருபுகளுடன் வரும் பெயர்ச் சொல்லோடு, வரும்போது இந்த ஒட்டுக்கள் 'ல்ருட்' உக்குப் பதிலியாக வரா (பார்க்க 3.2.124) அதாவது முதல் வேற்றுமைச் சொல்லோடு விருப்பாகவும், மற்ற வேற்றுமைச் சொற்களோடு கட்டாயமாகவும் இவ்வொட்டுக்கள் பதிலியாகும்.

கரிஷ்யன் தே³வத³த்த:

கரிஷ்யமாண: தே³வத³த்த:

செய்யவிருக்கும் தேவதத்தன்

(எதிர்காலம்)

அல்லது கரிஷ்யதி/கரிஷ்யதே 'செய்வான்'

**3.3.15** அனத்³யதனே லுட்¹

இன்றைக்கல்லாத எதிர்காலத்தைக் குறிக்க (அனத்³யதன) 'லுட்' தாதுவுக்குப் வரும்.

ஸ்¹வ :கர்தா நாளை செய்வான்

ஸ்¹வோ பே⁴ாக்தா நாளை உண்பான்

இது 'ல்ருட்¹' வருவதைத் தடுக்கிறது. ஆனால், ஒரு வாக்கியத்தில், இன்று அல்லது, இன்றைக்குப் பிறகு என்ற இரண்டுவித எதிர்காலத்தையும் குறிக்கும் சொற்கள் அமைந்தால் 'லுட்' வராது.

அத்³ய ஸ்¹வோ வா க³மிஷ்யதி இன்று அல்லது நாளை போவான் இன்றைக்கோ அல்லது நாளைக்கோ போவான்

வா: பரிதே³வனே ஸ்¹வஸ்தனீ ப⁴விஷ்ய த³ர்தே² வக்தவ்யா:

வருத்ததைக் குறிக்கும்போது (பரிதே3வனே) எதிர்காலத்தை உணர்த்த 'லுட்' பயன்படுத்த வேண்டும்.

(ஸ்¹வஸ்தனீ = லுட்)

இயம் நு கத³ா க³ந்தர், யா ஏவம் பாதெ³ள நித³த⁴ாதி

இவ்வளவு மெதுவாக நடப்பவள் எப்போது போவான்

அயம் து க¹த³ா அத்⁴யேதா, ய ஏவமன பி⁴யுக்த:

இப்படி கவனமில்லாமலிருப்பவன் எப்போது படிப்பான்

**3.3.16** பத³ருஜவிஸ¹ ஸ்ப்ரு¹ஸே¹ா க⁴ஞ்

பத³ (நட) ருஜ் (துன்புறுத்து) விஸ் (நுழை) ஸ்ப்ரு¹ஸ்¹ (தொடு) ஆகிய தாதுக்களோடு 'க⁴ஞ்' ஒட்டு இணைக்கப்படும்.

எதிர்காலம் (ப⁴விஷ்யதி) என்ற சொல், இங்கு அனுவிருத்தி யாகாது இங்கிருந்து தொடரும் சூத்திரங்களில் கூறப்படும் ஒட்டுக்கள் மூன்று காலத்தையும் உணர்த்தும்.

பாத³: 'கால்', ரோக: 'நோய்', வேஸ¹: 'வாசல்'

பத்³யதே அஸெள பாத³: எது நடக்கிறதோ அது:

ருஜதி அஸௌ ரோக: 'எது வருத்துகிறதோ அது'
விஸ$^{1}$தி அஸௌ வேஸ$^{1}$: எது நுழைகிறதோ அது
பத்$^{3}$ + க$^{4}$ஞ் = பாத$^{3}$: ருஜ் + க$^{4}$ஞ் ரோக:
விஸ் + க$^{4}$ஞ் = வேஸ$^{1}$:
இவைகள் கர்த்தாவைக் குறிக்கும் சொற்கள் (பார்க்க 3.4.67)
வா: ஸ்ப்ருஸ$^{1}$ உபதாப இதி வக்தவ்யம்
'நோய்' என்ற பொருளைக் குறிக்கும்போதுதான் 'க$^{4}$ஞ்' ஒட்டு 'ஸ்ப்ரு$^{1}$ஸ்$^{1}$' தாதுவுடன் வரும். ஸ்பர்ஸ்$^{1}$: 'ஒரு நோய்' வேறு பொருளைக் (அதாவது தொடுதல்) குறிக்கும்போது 'அச்' ஒட்டு வரும் (3.1.134)
ஸ்பர்ஸ$^{1}$: தேவத$^{3}$த்த: தொடுகிற தேவதத்தன் இவ்விரண்டும் சுரத்தினால் வேறுபடும். 'க$^{4}$ஞ்' இணைத்து ஆக்கப்படும் சொல் முதலசையில் உதாத்தமும், 'அச்' உடன் ஆக்கப்படும் சொல்லின் இறுதி அசையில் உதாத்தமும் கொண்டதாக அமையும்.

**3.3.17** ஸ்ரு ஸ்தி$^{2}$ரே
கர்த்தா நெடுங்காலம் நிற்கும் (ஸ்தி$^{2}$ர) என்ற பொருளைக் குறிக்கும்போது, 'ஸ்ரு' தாதுவுக்குப்பின் 'க$^{4}$ஞ்' ஒட்டு வரும்.
நெடுங்காலம் நீடித்து நிற்கும் பொருளைச் சுட்டுகிறது. ஸ்தி$^{2}$ர என்ற சொல்
சந்த$^{3}$ன ஸார:– சந்தனத்தின் மணம் (ஸ்ரு + க$^{4}$ஞ் = ஸார)
க$^{2}$தி$^{3}$ரஸார:– பாக்கின் சாரம்/சுவை
ஆனால், ஸர்த்தா, ஸாரக: நடப்பவன்
இங்கு, 'க$^{4}$ஞ்' வராமல் முறையே த்ரு$^{1}$ச்: ண்வுல் இணைக்கப்படுகிறது.

வா: வ்யாதி$^{4}$ மத்ஸ்ய ப$^{3}$லேஷு இதி வக்தவ்யம் நோய், மீன், பலம் ஆகிய பொருட்களைக் குறிக்கும் போதும், க$^{5}$ஞ் ஒட்டு வரும்.
இந்த வார்த்திகம் நீண்ட காலம் நீடித்து நிற்காத பொருட்களையும், க்$^{4}$ஞ் ஒட்டு இணைத்துத் தருவிக்கலாம் என்று குறிக்கும். அதிஸார: (அதி + ஸ்ரு + க$^{4}$ஞ்) ஒரு வகை நோய்
விஸார: 'மீன்'
ஸார: பலம்

**3.3.18** ப[4]ாவே

ஒரு செயலை மாத்திரம் குறிக்க ஒரு தாதுவுக்குப்பின் 'க[4]ஞ்' இணைக்கப்படும்.

பாக: (பச் + க4ஞ்) 7.2.116–7.3.52) 'சமைத்தல்'

த்யாக[3]: (த்யஜ் + க[4]ஞ்) 'துறவு, கைவிடுதல்'

ராக[3]: (ரஞ்ஜ் + க[4]ஞ்) 'சாயமேற்றுதல்'

ஒரு செயல் பொதுவாக ஒரு நிலையைக் குறிக்கும் ஆகையால் தாதுக்களனைத்தும் அவைகளின் பொருட்களை உணர்த்தும்போது செயலைக் குறிக்கும். அதாவது தாதுவின் பொருளைத் (அத்தாதுவே உணர்த்தும்) தான் குறிக்கும். ஆகையால், ஒரு முடிவுற்ற செயலைக் குறிக்கவே, 'க[4]ஞ்' முதலிய ஒட்டுக்கள், ஒரு தாதுவுடன் இணைக்க வேண்டும் என்பதை இச்சூத்திரம் வலியுறுத்துகிறது. இவ்வாறு ஆக்க ப்பட்ட சொற்கள், எப்போதுமே ஆண்பால் ஒருமையைக் குறிப்பதாகத்தான் அமையுமென்ற நியதியில்லை. ஆகையால் இச்சொற்கள் மற்ற பால், எண்ணையுடைத்தாகவும் ஆகலாம்.

பத்தி: (பச் + க்தின் + பெண்பால் ஒட்டு)

பக்வம் (பச் + க்த அஃறிணை)

பசனம் (பச் + ல்யுட் = அன அஃறிணை

பாகெள (இருமை) பாகா: (பன்மை)

சுருங்கக்கூறுவதனால், இவ்வொட்டுக்கள், தொழிற்பெயர், பண்புப்பெயர் ஆகியவைகளைத் தருவிக்க, தாதுக்களுடன் இணைக்கப்படும்.

**3.3.19** அகர்தரி ச காரகே ஸம்க்[3]ஞாயாம்

கர்த்தா அல்லாத காரகமாகவும் ஒரு பெயராகவும் (பெயர்ச் சொல்) தருவிக்கப்பட்ட சொல்லமையும் போது 'க[4]ஞ்' ஒட்டு தாதுவுக்குப் பின் வரும். ப்ரஸேவ: பை முதலியவை எதை மனிதன் சேர்த்துத் தைக்கிறானோ ப்ராஸ: (அம்பு, அஸ்திரம் (மனிதன் எதை எறிகிறானோ ஆஹார: உணவு (எதிலிருந்து மனிதன் சக்தி பெறுகிறானோ) மது[4]ராஹார:, தக்ஷஸிலாஹார: போன்ற தொகைகளில் காணப்படுவது, ஆனால் கர்த்தாவைக் குறிக்கும் காரகமானால், 'அச்' ஒட்டு வரும். மேஷ: ஆடு (எது சண்டையிடுகிற தோ) ஒரு நிலைமையக் குறிக்கும் (ப[4]ாவே 18) கர்த்தா அல்லாத ஒரு காரகப் (அகர்தரி காரகே 19) ஆகியவைகள் இங்கிருந்து தொடங்கி, சூ. 3.3.113 வரை எல்லாச் சூத்திரங்களிலும் தொடரும்.

**3.3.20** பரிமாணாக்[2]யாயாம் ஸர்வேப்[4]ய:

தருவிக்கப்பட்ட சொல் ஓர் அளவின் பெயரைச் சுட்டும்போது (பரிமாணாக்[2]யா) எல்லாத் தாதுக்களுக்குப் பின்னும் 'க[4]ஞ்' ஒட்டு வரும்.

ஏகஸ்தண்டு[3]ல நிஸ்'சாய: (நி + சி + க[4]ஞ்)

'ஒரு நிஸ்சாய அரிசி'

த்[3]வௌ ஸூர்ப நிஷ்பாவௌ (நி + பூ + க[4]ஞ்)
இரண்டு முறம் உமி முதலியவை நீக்கிச் சுத்தப்படுத்தியது.
'உமி முதலியவைகளை நீக்கி சுத்தப்படுத்திய இரண்டு முறம் அரிசி'
3.3.58 'சி' தாதுவுடன் 'அப்' ஒட்டு வருமென்று கூறுகிறது
3.3.57 'அப்' ஒட்டு சில தாதுக்களுடன் வருமென்று குறிக்கிறது. 3.3.56 'அச்' ஒட்டு விதிக்கிறது. இச்சூத்திரத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கும் 'எல்லாம்' (ஸர்வ) என்ற சொல், 'அப்' ஒட்டு மட்டுமல்லாமல் 'அச்' ஒட்டும் வரத் தடை செய்கிறது. ஒரு அபவாத விதிக்கு முன்னால் அமையும் ஒட்டுக்களை மட்டுந்தான் அந்த அபவாத விதி தடுக்க முடியும். அதற்குப் பின் வருபவகளையல்ல என்ற பரிபாஷா விதியின்படி 'அச்' ஒட்டுக்கு மாத்திரந்தான் இத்தடை. ஆகையால், 'எல்லாம்' என்ற சொல்லை இங்கு பயன்படுத்தி 'அச்' 'அப்' ஆகிய இரண்டையுமே தடை செய்யப்பட்டிருக்கிறது. அளவின் பெயராகாமல், வேறு பொருளில் நிஸ்'சய என்ற சொல் வரும். ஆராய்ந்தறிந்து கொள்தல்
'அப்', 'அச்' ஆகியவற்றிற்குத் தடையாக கூறப்பட்டிருக்கும் 'க[4]ஞ்' ஒட்டு, பெண்பாற் சொற்களாக்கும் ஒட்டுக்களுக்குத் தடையாகாது.
ஏகா திலோச்[1]ச்[2]ரிதி:
உத் + ஸ்'ரிஞ் + க்தின் (3.3.94) = தி = உச்[1] + ஸ்ரி + தி (8.4.40) = உச்[1]ச்[2]ரித்தி
த்[3]வே ப்ரஸ்ருதீ

வா: த[3]ார ஜாரௌ கர்தரி ணிலுக்ச
இயக்கு வினைகளான த3ாரி, ஜாரி ஆகியவைகளோடு 'க[4]ஞ்' ஒட்டு, தருவிக்கப்பட்ட சொல் கர்த்தாவை குறிக்கும்போது வரும். இயக்கு வினை ஒட்டான ணி கெடும்.
த[3]ாரா: 'மனைவி'
ஜாரா: 'கள்ளநாயகன்'

**3.3.21** இஙஸ் ச
'இங்' தாதுவுக்குப்பின் 'க[4]ஞ்' ஒட்டு வரும்.
இது 'அச்' (3.3.56) ஒட்டு வருவதைத் தடுக்கிறது. அத்[4]யாய: (அதி[4] + இ + க[4]ஞ் = அ = அதி[4] + ஆய் + அ, யண் – அத்யாய: ) பாடம் அல்லது படிப்பு
உபாத்[4]யாய: (உப + அதி[4] + இ + க[4]ஞ்) 'ஆசிரியர்'
(யாருக்குப் பக்கத்தில் போய் படிக்கிறார்களோ அவர்)
வா: அபாத[3]ானே ஸ்த்ரியாம் உபஸம்க்[3]யானம்
தத[3]ந்தாச் ச வா ஙீஷ்
அபாதான காரகத்தில் பெண்பாலில் 'க[4]ஞ்' ஒட்டு வரும். அதற்குப் பின் ஙீஷ் (பெண்பாலாக்கும் ஒட்டு) விருப்பாக வரும்.
உபாத்[4]யாயா/உபாத்[4]யாயீ 'ஆசிரியை'

வா: ஸ்'ரு' வாயுவர்ண நிவ்ரு'தேஷு

'ஸ்'ரு' தாதுவுக்குப்பின் க4ஞ் ஒட்டு தருவிக்கப்பட்ட சொற்கள் காற்று, (வாயு) நிறம் (வர்ண), நிறுத்தம் (நிவ்ரு'த) ஆகிய பொருட்களைக் குறிக்கும்போது வரும்.
ஸ'ார (ஸ்'ரு' + க4ஞ் = அ) 'காற்று', 'பச்சை' முதலிய நிறம்:

**3.3.22** உபஸர்கே3 ருவ:
உபசர்க்கத்தோடு சேர்ந்து நிற்கும் 'ரு' தாதுவுக்குப்பின் 'க4ஞ்' ஒட்டு வரும். இது 'அப்' ஒட்டுக்குத் தடை விதிக்கிறது.
ஸம்ராவ: உபராவ: 'இரைச்சல்' உபசர்க்கமில்லாமல் 'ரு' தனியாக வரும்போது ரவ: (ரு + அப்) 'சத்தம்'

**3.3.23** ஸமி யுத்3ரு து3வ:
'ஸமி'யுடன் நிற்கும் தாதுக்கள் யு (இணை) த்3ரு (ஓடு) து3 (எரி) ஆகியவைகளுக்குப்பின் 'க4ஞ்' ஒட்டு வரும்.
ஸம் யாவ: 'ஒருவகை ஆப்பம்'
ஸந்த்3ராவ: 'மக்கள் ஒருமித்து ஓடுமிடம்'
ஸந்த3ாவ: 'பெருந்தீ'
வேறு உபசர்க்கத்துடன் 'க4ஞ்' வராது 'அப்' வரும் ப்ரயவ:

**3.3.24** ஸ்'ரிணீபு4வோ அனுபஸர்கே3
உபசர்க்கமில்லாமல் தனித்து நிற்கும், ஸ்'ரி, (போ) நீ (வழிகாட்டு), பூ4 (இரு) ஆகிய தாதுக்களுக்குப் பின் 'க4ஞ்' ஒட்டு வரும்.
இது அச், அப் ஒட்டுக்கள் வருவதைத் தடை செய்கிறது.
ஸ்'ராய 'புகலிடம்', நாய: 'தலைமை', ப4ாவ: 'நிலைமை'
ஆனால் உபசர்க்கங்களுடன் ப்ரஸ்'ரய: மரியாதை, கௌரவம்
ப்ரணய: 'காதல்'
ப்ரப4வ: 'உற்பத்திஸ்தானம், ஆரம்ப இடம்'
ப்ரப4ாவோ ராக்3ஞ: என்ற தொடரில் வரும் ப்ரப4ாவ என்ற சொல் ப்ர + பூ + க4ஞ் என்பதிலிருந்து ஆக்கப்பட்டதல்ல. இது ப்ர + ப4ாவ என்ற இரண்டையும் தொகுக்கப்பட்ட தொகை (ப்ராதிஸமாஸ) இதன் பொருள் 'சிறந்த நிலைமை' நயோ ராக்3ஞ: என்பதில் நிற்கும் 'நய' என்ற சொல்லும். க்ருத்ய, ல்யுட் ஒட்டுக்கள் பல வகைகளில் பயன்படுத்தப்படும். (3.3.113) என்ற சூத்திரத்தின்படி 'நீ' தாதுவுடன் 'அச்' இணைக்கப்பட்டுத் தருவிக்கப்பட்ட சொல்

**3.3.25** வௌ க் ஷுஸ்'ருவ:
'வி' உபசர்க்கத்துடன் நிற்கும் க்ஷு (தும்மு) ஸ்'ரு ஆகிய தாதுக்களுடன் 'க4ஞ்' ஒட்டு வரும். இது 'அப்' வருவதைத் தடை செய்கிறது
விக்ஷாவ: 'தும்மல், இருமல்' விஸ்ராவ: 'பாய்தல் அல்லது புகழ் பெற்றவன்.'
'வி'யுடன் நிற்காவிட்டால் க்ஷவ: ஸ்'ரவ:

**3.3.26** அவோதே3ார்ய:

அவ, உத் ஆகியவற்றுடன் சேர்ந்து வரும் 'நீ' தாதுவுக்குப் பின் 'க்4ஞ்' ஒட்டு வரும்.

அவநாய: கீழே தள்ளுதல்

உன்னாய: உயர்த்துதல்

உன்னய: பத3ார்த3ானாம் என்ற தொடரில் காணப்படும் உன்னய:, என்ற சொல் 'அச்' ஒட்டுடன் இணைத்துப் பெறப்பட்டது (3.3.113)

**3.3.27** ப்ரே த்3ருஸ்து ஸ்ருவ:

'ப்ர' என்ற உபசர்க்கத்துடன் சேர்ந்து நிற்கும் த்3ரு, ஸ்து, ஸ்ரு ஆகிய தாதுக்களுக்குப்பின் 'க4ஞ்' ஒட்டு வரும்.

ப்ரத்3ராவ: வேகமாக ஒடுதல்

ப்ரஸ்தாவ: 'அறிமுகப் புகழ்ச்சி'

ப்ரஸ்ராவ: 'நீரோட்டம்'

**3.3.28** நிரப்4யோ: பூல்வோ:

'நிர்', 'அபி' என்ற உபசர்க்கங்கள் முறையே பூ (புனிதமாக்கு, சுத்தம் செய்) லூ (வெட்டு) என்ற தாதுக்களுடன் வரும்போது 'க4ஞ்' ஒட்டு வரும்.

நிஷ்பாவ: 'ஒருவகைப் பருப்பு'

அபி4லாவ: 'அறுவடை செய்தல்'

ஆனால் பவ: சுத்தம் செய்தல், லவ: வெட்டுதல்

**3.3.29** உன்னயோர்க்3ர:

உத், நி ஆகிய உபசர்க்கங்களுடன் சேர்ந்து 'க்3ரூ1', தாது வரும்பே ாது 'க4ஞ்' ஒட்டு தாதுவுக்குப்பின் வரும். உத்3க3ார: ஸமுத்3ரஸ்ய 'கடலின் இரைச்சல்' நிக3ாரோ தேவதத்தஸ்ய: 'தேவதத்தனின் உண்ணுதல்' ஆனால் க3ர: 'விழுங்குதல்'

**3.3.30** க்ரூ1 த4ான்யே

'உத், நி' ஆகியவைகளுடன் சேர்ந்து நிற்கும் 'க்ரூ1' தாது தானியம் என்ற பொருளைச் சுட்டும்போது 'க்4ஞ்' ஒட்டு வரும்.

உத்கார: த3ான்யஸ்ய தானியத்தைக் காற்றில் தூற்றுவது

நிகார: த3ான்யஸ்ய

தானியம் என்ற பொருளை உணர்த்தாமல் வரும்போது, பை4க்ஷயோத்கர: 'பிச்சையை ஒன்று சேர்த்தல்', புஷ்பநிகர: 'பூக்குவியல்' இவை 'அப்' ஒட்டு இணைக்கப்பட்டுத் தருவிக்கப்பட்டவை.

**3.3.31** யக்3ஞே ஸமி ஸ்துவ:

வேள்வி சம்பந்தமான பொருட்களைக் குறிக்கும்போது, 'ஸம் + ஸ்து'

வுக்குப்பின் 'க$^4$ஞ்' ஒட்டு வரும்.
ஸம்ஸ்தாவஸ்ச$^2$ந்தே$^3$ா க$^3$ானாம்
எந்த இடத்தில் பிராம்மணர்கள் ஒன்று சேர்ந்து வேத மந்திரங்களால் புகழ்கிறார்களோ அந்த இடத்துக்கு ஸம்ஸ்ராவ என்று பெயர்.
ஆனால் ஸம்ஸ்தவஸ் ச$^2$ாத்ரயோ: இங்கு வேள்வி பற்றியது அல்ல 'இரண்டு மாணாக்கர்களின் புகழ்ச்சியுரை'

**3.3.32** ப்ரே ஸ்த்ரோ அயக்$^3$ஞே
'ப்ர'வுடன் நிற்கும் ஸ்த்ரூ' என்ற தாதுவுடன் யாகம் பற்றிய பொருளைக் குறிக்காவிட்டால் க$^4$ஞ் ஒட்டு வரும்.
ஸங்க$^3$ப்ரஸ்த$^1$ார: 'சங்குகளின் படுகை'
ஆனால் ப$^3$ர்ஹிஷ்ப்ரஸ்தர: 'தர்ப்பைகளின் குவியல்' இது வேள்வி சம்பந்தமானதால் 'க$^4$ஞ்' ஒட்டு வராமல் 'அப்' ஒட்டு வருகிறது.

**3.3.33** ப்ரத$^2$னே வாவஸ$^1$ப்$^3$தே$^3$
'வி + ஸ்த்ரு' பரப்புதல் என்ற பொருளைக் குறிக்கும்போது, ஆனால் சொற்களைப் பரப்புதல் என்றில்லாமல் அமையும்போது, க$^4$ஞ் ஒட்டு வரும்.
பட$^1$ஸ்ய விஸ்தார: 'துணியினகலம்'
ஆனால் த்ருணவிஸ்தர: 'புற்குவியல்'
விஸ்தரோ வசஸாம்: 'சொல்மிகை'
'அப்' உடன் இணைத்துப் பெறப்பட்டது 'விஸ்தர': என்ற சொல்

**3.3.34** ச$^2$ந்தே$^3$ா நாம்னி ச
'வி + ஸ்த்ரு'வுக்குப்பின் ஒரு யாப்பின் பெயரைக் குறிக்குமாறு தருவிக்கப்பட்ட சொல் அமையும்போது 'க$^4$ஞ்' இணைக்கப்படும்.
விஷ்டார பங்க்தி: ச$^2$ந்த$^3$:
விஷ்டார ப்$^3$ருஹதீ ச$^2$ந்த:
'விஷ்டார பங்க்தி' ஒரு யாப்பின் பெயர். இது 'க$^4$ஞ்' ஒட்டில் முடியும் சொல் அல்ல, இதன் முதல் பகுதியான 'விஷ்டார' என்ற சொல்தான் 'க$^4$ஞ்' ஒட்டில் முடிகிறது.

**3.3.35** உதி$^3$ க்$^3$ரஹ:
'உத்'துடன் நிற்கும் 'க்$^3$ரஹ்' என்ற தாதுவுக்குப்பின் 'க$^4$ஞ்' ஒட்டு வரும். இது 'அப்' வருவதைத் தடை செய்கிறது.
உத்$^3$க்$^3$ராஹ: 'தூக்குதல்'

வா: ச$^2$ந்த$^3$ஸி நிபூர்வாதபீஷ்யதே ஸ்ருகு$^3$
த்$^3$யமன நிபாதனயோ: ஹகாரஸ்ய ப$^4$கார:
வேதமொழியில், 'நி' என்ற உபசர்க்கத்துடன் 'க்ரஹ்' வரும்போதும் 'க$^4$ஞ்' ஒட்டு இணைக்கப்படும். ஸ்ருக் (யாகத்தில் பயன்படுத்தும் பெரிய குழிவுக்

கரண்டி)ஐ மேலே தூக்குதல், கீழே கொண்டு போதல் என்ற பொருளை இது குறிக்கும்.

'க்ரஹ்' தாதுவின் 'ஹ'வுக்குப் பதிலியாக

'ப$^4$' வரும்.

உத$^3$க்$^3$ராப$^4$ம் ச நிக்$^3$ராப$^4$ம் ச

ப்$^3$ரஹ்ம தே$^3$வா அவீவ்ருத$^4$ன்

ஸ்ருக்கை, மேலேயும் கீழேயும் கொண்டு போவது (உத$^3$க்$^3$ ராப$^4$ம், நிக்$^3$ராப$^4$ம்) (அதாவது வேள்வித் தீயில்) நெய்யை விடும்போது) நமது வேள்வியை தேவர்கள் வளர்க்கட்டும். அதாவது, நமது வளர்ச்சியையும், நமது எதிரிகளின் வீழ்ச்சியையும் கொண்டு வந்து நமது வேள்வியை வளர்க்கட்டும்.

**3.3.36** ஸமி முஷ்டௌ

'ஸம்' உடன் சேர்ந்து 'க்$^3$ரஹ்' தாது நிற்கும்போது, அத்தாது 'கைமுட்டி'யென்ற பொருளைச் சுட்டும்போது, அதற்குப்பின் 'க$^4$ஞ்' ஒட்டு வரும்.

அஹோ மல்லஸ்ய ஸங்க்$^3$ராஹ:

குத்துச் சண்டைக்காரனின் குத்து

வேறு பொருளில், ஸங்க்$^3$ரஹோ தான்யஸ்ய 'ஒரு பிடி தான்யம்.' இங்கு 'அப்' வரும்.

**3.3.37** பரி ந்யோர் நிணோர் த்$^3$யூதா $^4$ப்ரேஷயோ:

பரி, நி, ஆகிய உபசர்க்கங்கள், முறையே 'நீ' (வழிகாட்டு) இ (போ) என்ற தாதுக்களுடன் நிற்கும் போது, அவைகள் முறையே, 'சூதாட்டம்' ($^3$த்யுத), தகுதியுடைமை ஒழுங்கு (அப்$^4$ரேஷ) ஆகிய பொருட்களை உணர்த்தும்போது, 'க$^4$ஞ்' ஒட்டு தாதுவுக்குப் பின் வரும்.

பரிணாய (பரி + நீ + க$^4$ஞ் = அ) சொக்கட்டான் காய்களை எல்லாப் பக்கத்திலும் சரியாக நகர்த்துவது.

பரிணாயே ஸாரான் உறந்தி–சொக்கட்டான் காய்களைச் சரியாக நகர்த்தி பல காய்களை வெல்கிறான்.

ந்யாய: (நி + இ + க$^4$ஞ் = அ) 'நியாயம்' இது 'அச்'சுக்குத் தடை விதிக்கிறது. மேற்கூறிய பொருளைக் குறிக்காவிட்டால் பரிணய: (திருமணம்) ந்யயம்– அழிவு ந்யயம் $^3$கத: பாப:– பாபம் அழிந்தது.

**3.3.38** பராவனு பாத்யய இண:

'பரி'யுடன் சேர்ந்து நிற்கும் 'இண்' தாதுவுக்குப்பின் ஒன்றுக்குப்பின் மற்றொன்று முறையாகத் தொடர்ந்து வருதல் என்ற பொருளைக் குறிக்கும்போது 'க$^4$ஞ்' ஒட்டு வரும்.

பர்யாய: 'முறை, தொடர்தல்'

தவ பர்யாய: 'உன் முறை'

ஆனால் காலஸ்ய பர்யய:– காலம் கழிதல்

பர்யய: ('அச்' உடன்)

**3.3.39** வ்யுபயோ: ஸே'தே பர்யாயே
வி, உப என்ற உபசர்க்கங்களோடு சேர்ந்து நிற்கும் ஸீ[1] (படு) என்ற தாதுவுக்குப்பின் 'முறைப்படியான வரிசை' என்ற பொருளில் 'க[4]ஞ்' ஒட்டு வரும்.
தவ விஸ'ாய: 'தூங்குவதற்கு உன் முறை'
தவ ராஜோபஸ'ாய: 'அரசனின் அருகில் தூங்க, உன்முறை'
'பர்யாய' என்ற பொருளைக் குறிக்காமல் அமையும்போது 'அச்' ஒட்டுடன்
விஸ'ய: 'சந்தேகம்' உபஸ'ய: 'அருகில் படுத்தல்'

**3.3.40** ஹஸ்தாத[3]ானே சேரஸ்தே'யே
'திருடுதல்' என்ற பொருளைச் சுட்டாமல் 'கையால் எடுத்துக் கொள்ளல்' என்ற பொருளைக் குறிக்கும்போது, 'சி' (திரட்டு,சேர்) என்ற தாதுவுக்குப்பின் 'க[4]ஞ்' ஒட்டு வரும்.
புஷ்பப்ரசாய: 'பூக்கொய்தல்'
ப[2]லப்ரசாய: 'பழம் பறித்தல்'
'கையால்' அல்லது 'திருடாமல்' என்ற பொருளைத் தவிர்த்து, வேறு பொருளில் அதாவது 'திரட்டுதல்' என்ற பொருளைக் குறிக்கும்போது ப்ரசய என்று அமையும்.

வா: உச்ச'யஸ்ய ப்ரதிஷேதே[4]ா வக்தவ்ய:
'உச்சய' என்ற சொல்லுக்குத் தடை விதிக்க வேண்டும். அதாவது உச்சய (சேகரித்தல்) என்ற சொல் 'க[4]ஞ்' ஒட்டு இணைத்து ஆக்கப்படவில்லை.
உத்[3] + சி + அச் = உச்சய: 'புஷ்போச்சய:– 'பூக்கொய்தல்'

**3.3.41** நிவாஸ சிதி ஸ'ரீரோப ஸமாத[4]ானேஷ்வாதே[3]ஸ் ச க:
'சி' தாதுவுக்குப்பின் 'க[4]ஞ்' ஒட்டு கீழ்க்கண்ட பொருளைத் தருவிக்கப்பட்ட சொல் குறிக்கும்போது, இணைக்கப்படும். 'சி' இன் முதல் எழுத்துக்குப் பதிலாக 'க' வரும்.
இருப்பிடம் (நிவாஸ), சேகரித்தல் (சிதி), உடல் (ஸ'ரீர)
குவித்தல் (உபஸமாத[4]ான)
காஸிநிக'ாய:– 'காசி இருப்பிடம்'
ஆகாயமக்[3]னிம் சின்வீத:– 'ஈமவிறகு அடுக்கு'
அநித்ய காய: 'அழியக்கூடிய உடல்'
மஹாகே[2]ாமய நிகாய: 'சாணத்தின் குவியல்'
வேறு பொருட்களில் ச'ய: 'சேகரிப்பு' இங்கு 'அச்' வரும் 'க[4]ஞ்' அல்ல.
மஹான் காஷ்டநிசய: "விறகுகளின் பெரிய குவியல்"

**3.3.42** ஸங்கே[4] சானௌத்தராத[4]ர்யே
ஒழுங்கு முறைப்பட்ட கூட்டம் (ஸங்கே[4]) என்ற பொருளில் 'சி'தாதுவுக்குப் பின் க[4]ஞ் ஒட்டு வரும். சி–யின் முதலெழுத்தான 'ச்' உக்குப் பதிலாக 'க்' வரும்.

இக்கூட்டம் தாறுமாறாக அமையாமலிருக்கும்போதுதான் இவ்வொட்டு வரும். இது உயர்திணைப் பெயர்களைத்தான் குறிக்கும்.

ப்[3]ராஹ்மணநிகாய: – பிராம்மணர்களின் கூட்டம்

வையாகரண நிகாய: – இலக்கணகாரர்களின் கூட்டம்

ஆனால் ஸூகரநிசய (அச் ஒட்டுடன்)

பன்றிகளின் கூட்டம்.

**3.3.43** கர்மவ்யதிஹாரே ணச் ஸ்த்ரியாம்

செயல்களின் பறிமாற்றத்தை (Reciprocity of action)க் குறிக்கும்போது, பெண்பாலில், 'ணச்' ஒட்டு வரும்.

வ்யாவக்ரோஸீ[1] – 'ஒருவரையொருவர் திட்டிக் கொள்தல்'

வ்யாவலேகீ[2] – 'ஒருவர்க்கொருவர் எழுதுதல்'

வ்யாவஹாஸீ – 'ஒருவர்க்கொருவர் ஏளனம் செய்தல்'

வி + ஆங் + க்ருஸ்[1] + ணச் = அ → வி + ஆ + க்ரோஸ்[1] + அ = வ்யாவக்ரோஸ + ஙீஷ் ஈ (5.4.14 4.1.15 6.4.148) = வ்யாவ க்ரோஸீ

ஆனால் ஆண்பாலாகும்போது வ்யதிபாக:

சூ. 3.3.94இலிருந்து 'க்தின்' ஒட்டு இணைத்து ஒரு செயலை மாத்திரம் குறிக்கும் பெண்பாற் சொற்கள் ஆக்குவதைப் பற்றிக் கூறுகிறார் ஆசிரியர். இதை இங்கு தனியாகக் குறிப்பிடாமல், அந்தப் பகுதியிலேயே அவைகளுடன் சேர்த்துக் கூறியிருக்கலாம். ஆனால் அவ்வொட்டு இணைப்பதைத் தடை செய்ய சில விதிகள் அங்கு அமைக்கப்பட்டிருக்கின்றன. அத்தடை இந்த ஒட்டுக்கும் பயன்படுத்த வாய்ப்பு உண்டு. அதைத் தடுப்பதற்காக இந்த விதியை முதலிலேயே அமைத்துள்ளார் ஆசிரியர்.

வ்யாவ சோரீ, வ்யாவசர்சீ

சுர், சர்ச் ஆகிய தாதுக்கள், சு1ராதி வகுப்பின் விகரணமான 'ணிச்' ஸ்வார்திக ஒட்டோடு வரும். அதனால் இத்தாதுக்களுடன் 'யுச்' ஒட்டு பெண்பாலில் வரும் (3.33107) ஆகவே சோரணா என்ற வடிவம் 'சுர்' தாதுவுக்கும், சர்சா என்ற வடிவம் 'சர்ச்' தாதுவுக்கும் 3.3.104இன்படியும் பெறும். ஈக்ஷ், ஈஹ் என்ற தாதுக்கள் 'க்தின்' ஒட்டுக்குப் பதிலாக 'அ' ஒட்டைப் பெறும் (3.3.102 & 103) இந்த தடுப்பு விதியினால் (debarring rule) பெறப்படும் 'அ'வை இந்த விதி (3.3.42) தடை செய்யாது ஆகையால், இத்தாதுக்களிலிருந்து பெறப்படும் பெண்பாற் சொற்கள் வ்யதீக்ஷா, வ்யதீஹா என்றேயமையும். வ்யதீக்ஷீ அல்ல. 'வ்யாதுக்ஷீ' என்று ஒரு சொல் காணப்படுகிறது. அது விதிவிலக்கு என்று தெளிவு இத்தகைய விதிவிலக்குகள், எல்லாம் 3.3.113இல் கூறப்பட்ட 'பலவகையான' (ப3ஹுலம்) என்பதற்கு எடுத்துக்காட்டுகளாக அமையும்.

**3.3.44** அபி[4]விதெ[4]ள ப[4]ாவ இனுண்

முழுவதும் உடனிணைந்து பரவிய (அபி[4]விதி[4]) ஒரு நிலைமையைக் குறிக்க, தாதுவுக்குப்பின் 'இனுண்' என்ற ஒட்டு வரும்.

ஸாங்கூடி$^{1}$னம் (ஸ்ம் + கூட் + இன் + அண் 5.4.15)
முழுவதும் பரவிய பெருந்தீ
ஸாம்ராவிணம் – 'ஒன்று சேர்ந்து கூக்குரலிடுதல்
ஸாந்த்$^{3}$ராவிணம் – 'ஒன்றாகச் சேர்ந்து ஓடுதல்'
ஆனால் ஸ்கோட$^{1}$: ('க$^{4}$ஞ்' ஒட்டுடன்) பெருந்தீ
ஸம் ராவ :–'பெருங் கூச்சல்'
'ப$^{4}$ாவே' என்ற சொல்லை மறுபடியும் பயன்படுத்தியிருப்பது வா அஸரூப (3.1.94) விதியைத் தடுப்பதற்கு. அதனால் விருப்பாக இங்கு 'க$^{4}$ஞ்' ஒட்டு வராது.

**3.3.45** ஆக்ரோஸே$^{1}$ அவன்யோர் க்$^{3}$ரஹ:
அவ, நீ என்ற உபசர்க்கங்களுடன் க்$^{3}$ரஹ் (பிடி) என்ற தாது வரும்போது தருவிக்கப்பட்ட சொல் 'சாபமிடுதல்' (ஆக்ரோஸே$^{1}$) என்ற பொருளைக் குறிக்கும்போது 'க$^{4}$ஞ்' ஒட்டு வரும். இதற்கு முந்திய சூத்திரத்தின் 'இனுண' வராமல் இங்கு 'க$^{4}$ஞ்' ஒட்டு அனுவிருத்தியாகும்.
அவக்$^{3}$ராஹோ ஹந்த தே வ்ருஷல பூயாத் ஒ பாபி உனக்கு கெடுதி உண்டாகட்டும்
நிக்$^{3}$ராஹே ஹந்த தே வ்ருஷல பூ$^{4}$யாத்ஓ பாவி, உனக்கு நாசம் உண்டாகட்டும்.
அதனுடைய பொருளில் அ வக்$^{3}$ராஹ: பத$^{3}$ஸ்ய நிக$^{3}$ரஹ: சோரஸ்ய திருடனைப் பிடித்தல்

**3.3.46** ப்ரே லிப்ஸாயாம்
'ஒரு பொருளையடைய விரும்புதல்' என்ற பொருளை உணர்த்த, 'க்$^{3}$ ரஹ்' தாது 'ப்ர' என்ற உபசர்க்கத்துடன் வரும்போது, 'க$^{4}$ஞ்' ஒட்டு தாதுவுக்குப்பின் வரும்.
பாத்ரப்ரக$^{3}$ராஹேண சரதி பிக்ஷ: பிண்டார்தீ$^{2}$
பிச்சைப் பாத்திரம் நடக்கிறான் பிச்சைக்காரன் பிச்சைக்காக
பிச்சைக்காரன் பாத்திரத்தைக் கையிலேந்தி பிச்சைக்காகப் போகிறான்
ஸ்ருவப்ரக்$^{3}$ராஹேண சரதி த்$^{3}$விஜோ தக்ஷிணார்தீ$^{2}$
தட்சிணைக்காகப் பிராமணன் போகிறான்
ஆனால் ப்ரக்$^{3}$ரஹோ தே$^{3}$வதத்தஸ்ய
தேவதத்தனின் அகம்பாவம்
இங்கு 'அப்' ஒட்டு ப்ர + க்$^{3}$ரஹ் உடன் வரும் (3.3.58)

**3.3.47** பரௌ யக்$^{3}$ஞே
'பரி'யுடன் நிற்கும் 'க்$^{3}$ரஹ்' தாதுவுக்குப் பின் யாகம் பற்றிய பொருளில் 'க$^{4}$ஞ்' ஒட்டு வரும்.
உத்தர பரிக்$^{3}$ராஹ: ஸ்ப்$^{2}$ய
வேதியின் வடபக்க வேலியமைத்தல்
அத$^{4}$ர பரிக்$^{3}$ராஹ: வேதியின் தெற்குப் பக்க வேலிகட்டுதல்

யாக சம்பந்தமில்லாவிட்டால், பரிக்[3]ரஹோ 'சூழ்தல்'
பரிக்[3]ரஹ: ('அப்' உடன்)

**3.3.48** நௌ வ்ரு[1] த[4]ான்யே
'நி'யுடன் நிற்கும் 'வ்ரு' தாதுவுடன் 'க[4]ஞ்' ஒட்டு, தானியம் என்ற பொருளைக் குறிக்கும்போது வரும். நீவாரா, ஒரு வகை அரிசி
இது 'அப்' வருவதைத் தடை செய்கிறது. தானியத்தைக் குறிக்காவிட் டால் நிவரா கன்யா—'தேர்ந்தெடுக்கத் தகுந்த பெண்'
நிவரா ('அப்' ஒட்டுடன்)

**3.3.49** உதி[3]ஸ்'ரயதி யௌதி பூத்[3]ருவ:
'உத்'துடன் வரும் ஸ்'ரி, யு, பூ, த்[3]ரு ஆகிய தாதுக்களுக்குப் பின் 'க[4]ஞ்' ஒட்டு வரும். இது 'அச்', 'அப்' ஆகிய ஒட்டுக்களுக்குத் தடை.
உச்ச[2]ராய ஒரு கிரகத்தின் உதயம்
உத்[3]யாவ:— ஒன்றாக்குதல், கலக்குதல்
உத் பாவ: — தூய்மையாக்குதல்
உத்[3]த்[3]ராவ: — ஓடுதல்

**3.3.50** விப[4]ாஷா ஆஙி ருப்லு வோ:
'ஆங்' உடன் நிற்கும் ரு, (கர்ஜி) ப்லு (மித) என்ற தாதுக்களுக்குப்பின் 'க[4]ஞ்' ஒட்டு விருப்பாக வரும்.
ஆராவ: அல்லது ஆரவ: 'கூச்சல்'
ஆங் + ரு + க[4]ஞ் = அ → ஆராவ: ஆங் + ரு + அப் = அ = ஆரவ:
ஆப்லாவ: அல்லது ஆப்லவ: மிதத்தல்
ஆங் + ப்லு + க[4]ஞ் = அ = ஆப்லாவ: ஆங் + ப்லு + அப் = அ = ஆப்லவ

**3.3.51** அவே க்[3]ரஹோ வர்ஷப்ரதி ப[3]ந்தே[4]
'அவ'வுடன் க்[3]ரஹ் தாது நின்று, மழையைத் தடுத்து நிறுத்துதல் என்ற பொருளை உணர்த்தும்போது 'க[4]ஞ்' ஒட்டு விருப்பாக வரும்.
அவக்[3]ராஹோ/அவக்[3]ரஹோ தே[3]வஸ்ய
'வானம் பொய்த்தல்'
ஆனால், அவக்[3]ரஹ: பத[3]ஸ்ய இங்கு 'அம்'தான் வரும்.

**3.3.52** ப்ரே வணிஜாம்
'ப்ர'வுடன் 'க்[3]ரஹ்' நிற்கும்போது 'வியாபார சம்பந்தமான' என்ற பொருளில் 'க[4]ஞ்' ஒட்டு விருப்பாகத் தாதுவுடன் வரும். துலாப்ரக்[3] ராஹேண சரதி அல்லது துலாப்ரக்[3]ரஹேண சரதி வியாபாரி (அல்லது மற்றவர்களோ) தராசைக் கையில் கொண்டு சுற்றுகிறான். இங்கு வியாபாரச் சம்பந்தமென்பது தராசைக் கட்டியிருக்கும் கயிற்றைக் குறிக்கும் மற்ற பொருளில் ப்ரக்3ரஹோ (அப் மட்டும்) தேவத[3]த்தஸ்ய 'தேவதத்தனின் சவுக்கு'

**3.3.53** ரஸ்'மௌ ச

(க்ரஹ் தாது, 'ப்ர'வுடன் நிற்கும்போது 'க⁴ஞ்') ஒட்டு (விருப்பாக) 'கடிவாள வார், லகான்' என்ற பொருளில் வரும்.

ப்ரக்³ரஹ:/ப்ரக்³ராய 'கடிவாள வார், லகான்'

**3.3.54** வ்ருணோதே: ஆச்'ச²ாத³னே

'ப்ர'வுடன் 'வ்ரு' தாது நிற்கும்போது 'ஒரு வகையான உறை' என்ற பொருளில் விருப்பாக 'க⁴ஞ்' வரும்.

ப்ராவார/ப்ரவர: 'போர்வை'

ஆனால் ப்ரவரா ('அப்' ஒட்டு மாத்திரம்) கௌ3ள:

'உயர்த்தியான பசு'

**3.3.55** பரௌ பு⁴வோ அவக்³ஞானே

'பரி'யுடன் பு⁴ தாது நின்று, 'அவமதிப்பு' என்ற பொருளைச் சுட்டும்போது (க4ஞ் ஒட்டு விருப்பாக வரும்)

பரிப⁴ாவ:/பரிப⁴வ: 'அவமதிப்பு'

ஆனால் பரிப⁴வ: 'சுற்றிலுமுள்ள, சூழ்ந்த'

(மாற்று வடிவம் கிடையாது)

**3.3.56** ஏரச்

'இ'வகுப்பைச் சேர்ந்த எழுத்தில் (அதாவது இ,ஈ) முடியும் தாதுக்களுக்குப்பின் 'அச்' ஒட்டு வரும். (வெறும் செயலை மாத்திரம் குறிக்கும்போது, (3.3.18), கர்த்தா அல்லாத காரகத்தில் (3.3.19) ஒரு பெயராகும்போது)

இது 'க⁴ஞ்' உக்குத் தடுப்பு விதி

சய: (சி + அச்) 'சேகரித்தல், திரட்டுதல்'

அய: (இ + அச்) 'போதல்'

ஜய: (ஜி + அச்) 'வெற்றி'

க்ஷய: (க்ஷி + அச்) 'அழிதல்'

வா: அஜ்விதௌ⁴ ப⁴யாதீனாமுபஸம்க்²யானம் நபும்ஸகே க்த'ாதி³ நிவ்ருத்யர்த²ம்

'அச்' ஒட்டு பற்றிய விதியில் 'ப⁴ய' முதலிய சொற்களையும் சேர்த்துக் கூற வேண்டும். இச்சொற்கள் நபும்ஸகமானதால் 'க்த' முதலிய ஒட்டுக்கள் இவைகளுடன் வராமலிருப்பதற்கு இவ் வார்த்திகம் தேவை.

ப⁴யம் – 'அச்சம்' வர்ஷம் 'மழை'

வா: ஜவஸவௌ ச²ந்த³'ஸி வக்தவ்யௌ

ஜவ, ஸவ என்ற சொற்கள் இவ்வொட்டை இணைத்து ஆக்கப்பட்டவை. இவைகள் வேத மொழியில் காணப்படுகின்றன.

ஊர்வோரஸ்து மேஜவ: (ஜூ + அச்)
பஞ்சௌத3னஸவ: (ஸூ + அச்)
இவ்வார்த்திகமில்லாவிட்டால், இவைகளுடன் 'அப்' ஒட்டு வந்திருக்கும். இவைகளின் வடிவம் ஒன்றாத்தானமையும். ஆனால் சுரத்தில் வேறுபாடு உண்டு. 'அச்' ஒட்டோடு சேர்ந்து தருவிக்கப்பட்ட சொல், இறுதியில் உதாத்த சுரம் பெறும்.

**3.3.57** ரு1 தே3ாரப்
ரு1, உ, ஊ எழுத்துக்களை ஈறாகக் கொண்ட தாதுக்களுக்குப் பின் 'அப்' ஒட்டு வரும் (மேற்குறிப்பிட்ட சூழலில்)
இது 'க4ஞ்' உக்குத் தடை.
ஒட்டின் 'ப்' ஒரு இத். இது சுரத்தைக் குறிப்பதற்காக (3.1.4 அனுதா த்தம்)
கர: (க்ரு1 + அப்) 'சிதறுதல்'
க3ர: (க்3ரு1 + அப்) 'நஞ்சு'
ஸ1ர: (ஸ்1ரு + அப்) 'அம்பு'
யவ: (யு + அப்) 'பார்லி'
ஸ்தவ: (ஸ்து + அப்) 'துதி'
லவ: (லூ + அப்) 'அறுவடை செய்தல்'
பவ: (பூ + அப்) 'புடைத்தல்'

**3.3.58** க்3ரஹ வ்ரு1 த்3ரு1 நிஸ்1சி க3மஸ்1 ச
'க்3ரஹ்' முதலிய தாதுக்களுக்குப்பின் 'அப்' ஒட்டு இணைக்கப்படும்.
இது 'க4ஞ்' வருவதைத் தடுக்கிறது.
'நிஸ்1சி'யுடன் 3.3.56 மூலம் கிடைத்த 'அச்' வருவதைத் தடுக்கிறது.
க்3ரஹ: 'கிரகம்'
வர: 'வரம்'
த3ர: 'குகை'
நிஸ்1சய: 'தீர்மானம்'
கம: 'அணிவகுப்பியக்கம்'

வா: வஸிரண்யோரு பஸம்க்2யானம்
வஸ், ரண் என்ற தாதுக்களோடும் 'அப்' ஒட்டு வரவேண்டுமென்று கூற வேண்டும்.
வஸ1: 'கீழ்ப்படிதல்' ரண: 'சண்டை'

வா: க4ஞர்தே2 க1வித4ானம் ஸ்த2ாஸ்தா பாவ்யதி4 ஹனி யுத்4யாத 2ம்
'க4ஞ்' ஒட்டின் பொருளில் (கர்த்தாவல்லாத காரகத்தில், பெயராகவும், ஒரு நிலைமையையும் குறிக்கும் போது) கீழ்க்கண்ட தாதுக்களுக்குப் பின் 'க' ஒட்டு இணைக்கப்படும். ஸ்த2ா, ஸ்நா, பா, வ்யத்4, ஹன், யுத்4
ப்ரஸ்த2: 'மேட்டுச் சமவெளி'மலை எதில் நிற்கிறதோ அது'

ப்ரஸ் ந: குளிக்கும் தொட்டி 'எதில் குறிக்கிறார்களோ'
ப்ரபா: தண்ணீர் தொட்டி 'எதிலிருந்து தண்ணீர் குடிக்கிறார்களோ '
ஆவித$^{4}$: குத்தூசி, துளைக்கும் கருவி
விக்$^{4}$ன: இடையூறு: 'எதில் தடை வருகிறதோ'
ஆயுத$^{4}$ம்: ஆயுத$^{4}$ம் 'எதைக் கொண்ட சண்டையிடுகிறார்களோ'

**3.3.59** உபஸர்கே$^{3}$ அத$^{3}$:
'அத்$^{3}$' உபசர்க்கங்களுடன் நிற்கும்போது 'அப்' ஒட்டு வரும். விக$^{4}$ஸ:– பகுதியை உண்ட பிறகு மீத்து இருக்கும் அன்னம். வைசுவதேவம் என்ற வேள்வியில், தேவர்களுக்கு அளித்த பிறகு மீத்திருக்கும் சோற்றின் பெயர். ப்ரக$^{4}$ஸ, 'சிறந்த உணவு'
ஆனால் க$^{4}$ாஸ: 'புல்' இங்கு 'அப்' வராது க$^{4}$ஞ் வரும்.

**3.3.60** நௌ ண ச
'நி'யுடன் சேர்ந்து நிற்கும் 'அத்$^{3}$' தாதுவுக்குப் பிறகு 'ண' ஒட்டு வரும் 'ச' என்ற சொல், 'அப்'பும் வரும் என்று குறிக்கும் ந்யாத$^{3}$: (நி + அத்$^{3}$ + ண = நி + அத்$^{3}$ + அ) ந்யாத$^{3}$ (7.2.116) 'உணவு', 'உண்பித்தல்'
நிக$^{4}$ஸ: (நி + அத்$^{3}$ + அப் = நி + க$^{4}$ஸ் + அ (2.4.38) = நிக$^{4}$ஸ) 'உண்ணுதல், உணவு'

**3.3.61** வ்யத$^{4}$ ஜபோரனுப ஸர்கே$^{3}$
வ்யத்$^{4}$, ஜப் தாதுக்கள் உபசர்க்கமில்லாமல் தனித்து நிற்கும் போது அத்தாதுக்களுக்குப் பின் 'அப்' ஒட்டு வரும்.
இது 'க$^{4}$ஞ்' உக்குத் தடை
வ்யத$^{4}$: 'காயம்' ஜப: 'ஜபம்'
ஆனால் ஆவ்யாத$^{4}$ா 'பெருந்துன்பம்'
உபஜாப:

**3.3.62** ஸ்வநஹஸோர் வா
ஸ்வந, ஹஸ், தாதுக்கள் உபசர்க்கமில்லாமல் நிற்கும்போது 'அப்' தாது விருப்பாக வரும். அதாவது 'க$^{4}$ஞ்' ஒட்டும் வரும்.
ஸ்வந:/ஸ்வாந: 'சத்தம்/ஒலி'
ஹஸ:/ஹாஸ 'சிரிப்பு'
உபசர்க்கத்துடன்
பரஸ்வாந: 'உரத்த சத்தம்'
ப்ரஹாஸ: 'உரத்த சிரிப்பு'

**3.3.63** யம ஸமுபநிவிஷு ச
ஸம், உப, நி, வி ஆகியவைகளுடன் யம் தாது வரும் போது (அல்லது உபசர்க்கமில்லாமல் இத்தாது நிற்கும்போதும்) 'அப்' ஒட்டு (விருப்பாக) வரும்.

ஸம்யம:/ஸம்யாம 'அடக்கம்'
உபய ம:/உபயாம 'திருமணம்'
நியம:/நியாம: எல்லை வரையறை
வியம:/வியாம: துன்பம்
உபஸர்க்கமில்லாமல், யம; யாம

**3.3.64** நௌ க$^{3}$த$^{3}$ நத$^{3}$ பட$^{2}$ஸ்வன

'நி'யுடன் நிற்கும், க$^{3}$த்$^{3}$, நத்$^{3}$, பட்$^{2}$, ஸ்வன் ஆகியவைகளுடன் 'அப்' ஒட்டு (விருப்பாக) இணைக்கப்படும்.
நிக$^{3}$த$^{3}$/நிக$^{3}$ாத$^{3}$: 'பேச்சு'
நிநத$^{3}$/நிநாத$^{3}$:'சத்தம்'
நிபட$^{2}$/நிபாட$^{2}$: 'படித்தல்'
நிஸ்வன/நிஸ்வான: 'சத்தம்'

**3.3.65** க்வணோ வீணாயாம் ச

'நி'யுடன் நிற்கும் 'க்வண்' தாதுவுக்குப் பிறகு (அல்லது உபசர்க்கமில் லாவிட்டாலும்) 'யாழ்' என்ற பொருளில், 'அப்' ஒட்டு வரும்.
நிக்வண:/நிக்வாண: இசைக்குறியீடு (யாழில்)
க்வண:/க்வாண: ஒலி
கல்யாண ப்ரக்வணா வீணா: 'சரியான இசையைக் கொடுக்கும் யாழ்'
ஆனால், 'அதி' யுடன் இத்தாது நிற்கும்போது
அதிக்வாண வர்த்ததே இங்கு 'க$^{4}$ஞ்' மட்டும் வரும்.
சுருக்கமாக 'க்வண்' தாதுவுடன் 'அப்' ஒட்டு, (1)'நி' யுடன் நிற்கும் போதோ அல்லது (2) உபசர்க்கமில்லாமல் தனியாக நிற்கும்போதோ அல்லது (3)'யாழை' க் குறிக்கும்போதோ (இங்கு உபசர்க்கம் கட்டாயமாக வரும்) இணைக்கப்படும்.

**3.3.66** நித்யம் பண: பரிமாணே

'பண்' (பண்டமாற்று) தாதுவுடன் ஒரு நிறையை/அளவைக் (பரிமாண) குறிக்கும்போது 'அப்' ஒட்டு கட்டாயமாக (நித்யம் வரும்.
மூலக பண: ஒரு கையளவு முள்ளங்கி
ஸ$^{1}$ாகபண: ஒரு கையளவு கீரை
பரிமாணத்தைக் குறிக்காவிட்டால் 'பாண'
வியாபாரம், வர்த்தகம்

**3.3.67** மதே$^{3}$ா அனுபஸர்கே$^{3}$

உபசர்க்கமில்லாமல் நிற்கும் 'மத்$^{3}$' தாதுவுக்குப்பின் 'அப்' ஒட்டு வரும்.
வித்$^{3}$யாமத$^{3}$ : 'படித்த கர்வம்'
த$^{4}$னமத$^{3}$ : 'பணத்தின் கர்வம்'
உபசர்க்கத்துடன் உன்மாத$^{3}$ : 'பைத்தியம்'

ப்ரமாத$^3$ : அசட்டை, சோம்பேறித்தனம்

**3.3.68** ப்ரமத$^3$ஸமதெ$^3$ள ஹர்ஷே

'மகிழ்ச்சி' என்ற பொருளில், ப்ரமத, ஸமத என்ற சொற்கள் நிபாதனங்கள்.

கன்யானாம் ப்ரமத$^3$: – 'பெண்களின் மகிழ்ச்சி'

கோகிலானாம் ஸம்மத$^3$: – 'குயில்களின் மகிழ்ச்சி'

'மகிழ்ச்சி' என்ற பொருளைக் குறிக்காவிட்டால், ப்ரமாத$^3$: அஜாக்கிரதையானவன் ஸம்மாத: 'ஆவேசம், வெறி'

**3.3.69** ஸமுதே$^3$ாரஜ பஸு$^1$ஷு

'ஸம்', 'உத்' என்ற உபசர்க்கங்களுடன் நிற்கும் 'அஜ்' தாதுவுக்குப்பின், 'விலங்கு' என்ற பொருளைச் சுட்டும்போது 'அப்' ஒட்டு வரும்.

ஸமஜ: பஸூனாம் 'விலங்குகளின் கூட்டம்'

உத$^3$ஜ: பஸூனாம் 'விலங்குகளை ஒட்டுதல்'

ஆனால், ஸமாஜோ ப்$^3$ராஹ்மணானாம்

பிராம்மணர்களின் கூட்டம்

உத்$^3$ாஜ: க்ஷத்ரியானாம் 'க்ஷத்திரியர்களின் அணி வகுப்பியக்கம்'.

**3.3.70** அக்ஷேஷு க்$^3$லஹ:

சூதாட்டம் என்ற பொருளில், க்$^3$லஹ : என்ற சொல் விதிப்படியமை யாத சொல். 'க்$^3$ரஹ்' என்ற தாதுவுடன் 'அப்' ஒட்டு 3.3.58இன்படி வந்திருக்கும். ஆயினும், 'ர' வுக்குப் பதிலியாக 'ல' என்ற எழுத்து, விதிக்குப் புறம்பானது என்பதைச் சுட்டவே இந்தச் சூத்திரம்.

அக்ஷஸ்யக்$^3$லஹ : பகடையை வீசுதல்

ஆனால் க்$^3$ரஹ: பாத$^3$ஸ்ய 'காலைப் பிடித்தல்'

'க்$^3$லஹ்' என்ற தாதுவுடன் 'அப்' ஒட்டு இணைத்து (க$^2$ஞ் ஒட்டைத் தடுத்து) 'க்$^3$லஹ்' என்ற சொல் விதிமுறைப்படியாக்கப்பட்டது என்று ஒரு சாரார் கருதுகின்றனர். அவர்கள் க்$^3$லஹ என்ற ஒரு தாது (க்$^3$ரஹ்/ஐத்தவிர) இருப்பதாக நம்புகிறார்கள். இதற்கு க்$^3$லாஹ: (க$^3$லஹ் + க$^4$ஞ்) 'பெறுதல்' என்ற சொல்லை மாற்றுச் சொல்லாக் குறிக்கிறார்கள் அவர்கள்.

**3.3.71** ப்ரஜனே ஸர்த்தே:

'ஸ்ரு' தாதுவுக்குப் பின் 'அப்' ஒட்டு 'முதல் கருவுண்டா குதல்' என்ற பொருளில் இணைக்கப் பெறும்.

க்$^3$வாம் அனுஸர:

இது 'க$^4$ஞ்' வருவதைத் தடுக்கிறது.

**3.3.72** ஹ்வ: ஸம்ப்ரஸாரணம் ச ந்யப்$^4$யுபவிஷு

நி, அபி$^4$, உப, வி, ஆகியவைகளுடன் ஹ்வே (கூப்பிடு) என்ற தாது நிற்கும்போது, அப் ஒட்டு தாதுவுக்குப்பின் இணைக்கப்படும். அதன் அரை உயிர்

அதோடு ஒத்த உயிராக மாறும்.

நி + ஹ்வே + அப் = அ = நி + ஹ்வா + அ = நி + ஹ் உ + அ = நி + ஹூ + அ = நி + ஹோ + அ = நிஹவ: 'கூப்பிடுதல்'

அபி[3]ஹவ : 'நான்கு பக்கத்திலிருந்தும் கூப்பிடுதல்'

உபஹவ: 'அருகிலிருந்து கூப்பிடுதல்'

விஹவ: 'இரைந்து கூப்பிடுதல்'

ஆனால் ப்ரஹ்வாய:

**3.3.73** ஆஙி யுத்[3]தே[4]

'சண்டை' என்ற பொருளில் 'ஆ'வுடன் சேர்ந்து 'ஹ்வே' நிற்கும்போது 'அப்' ஒட்டு இணைக்கப் பெறும் (அதன் அரை உயிர் அதற்கொத்த முழு உயிராகும்)

ஆஹவ: 'சண்டை' (ஆ + ஹ்வே + அப் = ஆ + ஹூ + அ = ஆ + ஹோ + அ = ஆ + ஹவ் + அ)

ஆனால் ஆஹ்வாய: (க[4]ஞ் ஒட்டுடன்)

**3.3.74** நிபானமாஹாவ:

தொட்டி (நிபானம்) என்ற பொருளைச் சுட்டும் ஆஹாவ என்ற சொல் நிபாதனம். இங்கு உயிராக்கம் (ஸம்ப்ரஸாரணம்) 'அப்' ஒட்டு, வ்ரு3த்தி4 இவைகள் முறைப்படி அமையா.

ஆ + ஹ்வே + அப், ஆ + ஹ் வா, ஆ + ஹ் உ + அ = ஆ + ஹூ + அ = ஆ + ஹ்வோ + அ = ஆ + ஹாவ் + அ = ஆஹாவ: பஸூனாம், 'தொட்டி' என்ற பொருளைச் சுட்டா விட்டால், ஆஹ்வாய:

**3.3.75** ப[4]ாவே அனுபஸர்க[3]ஸ்ய

உபசர்க்கமில்லாமல் நிற்கும் 'ஹ்வே' என்ற தாதுவுடன் ஒரு நிலைமையைச் சுட்டும்போது (அப் ஒட்டு வரும், ஸம்ப்ர ஸாரணம்)

ஹவ: 'அழைத்தல், கூப்பிடுதல்'

**வேதத்தில்**

ஹவே ஹவே ஸுஹவம் ஸூரமிந்தரம்

'ஒவ்வொரு பிரார்த்தனையிலும் அழைக்கத் தகுதி பொருந்திய சூரனான இந்திரனை அழைக்கிறேன்'.

இச்சூத்திரத்தில் 'பாவ' என்ற சொல் 3.3.19இல் கூறப்பட்ட அகர்தரி..... அனுவிருத்தியாகாமல் தடுப்பதற்காகத்தான்.

**3.3.76** ஹனஸ்[1] ச வத[4]:

(உப சர்க்கமில்லாமல், நிலைமையைமட்டும் குறிக்கும்போது) 'ஹன்' தாதுவுக்குப் பின் 'அப்' ஒட்டு வரும். இந்த ஒட்டுக்கு முன் நிற்கும் 'ஹன்' உக்குப் பதிலியாக 'வத்[4]' வரும்.

வத[4] : சோராணாம் 'திருடர்களைக் கொல்லுதல்'

வத4வின் இறுதியசையில் உதாத்தம் பெறும். 'அப்' அநுதாத்த சுரத்தையுடைத்தாயினும் இங்கு உதாத்தமாகிறது. மாற்று எடுத்துக்காட்டுக்கள்
க4ாத: (க4ஞ் உடன்) 'அடி'
ப்ரக4ாத: விக4ாத:

**3.3.77** மூர்த்தௌ க4ன:
கெட்டியான (மூர்த்தௌ) என்ற பொருளில் 'ஹன்' தாதுவுக்குப் பின் 'அப்' ஒட்டு வரும். அத்தாதுவுக்குப் பதிலியாக 'க4ன' வரும்.
அப்4ரக4ன: 'கெட்டியான (நெருக்கமான) மேகம்'
த3தி4 க4ன: 'கெட்டித்தயிர்'

**3.3.78** அந்தர் க4னோ தே3ஸே1
'அந்தர்' என்ற சொல்லைத் தொடர்ந்து நிற்கும் ஹன் தாதுவுக்குப் பின் 'அப்' ஒட்டு வரும். 'வத4' அதற்கு ஆதேசமாக வரும். இச்சொல், 'தேசம்' என்ற பொருளைக் குறிக்கும்.
அந்தர்க4ண: 'வாஹ்லீகத்திலுள்ள ஒரு நாட்டின் பெயர்' அந்தர் க4ண: என்றும் அமையும். நாட்டைக் குறிக்காவிட்டால் அந்தர்க4ாத: 'நடுவில் புகுந்து முற்றுகையிடுதல்'.

**3.3.79** அக3ாரைகதே3ஸே1 ப்ரக4ண: ப்ரக4ாணஸ் ச
ப்ரக4ண, ப்ரக4ாண என்ற சொற்கள் 'வீட்டின் ஒரு பகுதி' (அக3ாரைகதே3ஸே) என்ற பொருளில், விதி முறைப்படியமையாதவை (ப்ர + ஹன் உடன் 'அப்') ப்ரக4ண/ப்ரக4ாண; 'தலைவாயில், முகப்பு மண்டபம்' வேறு பொருளில் 'ப்ரக4ாத:'

**3.3.80** உத்3க4னோ அத்யாத4ானம்
உத்3க4ன: என்ற சொல் தச்சர் முதலியோர் வேலை செய்யும் மேசை. (அத்யாத4ானம்) என்ற பொருளில், (உத் + ஹன் உடன் 'அப்' இணைக்கப்பட்டு) நிபாதனமாகும்.
உத்3க4ண: 'தச்சர் முதலியோர் வேலை செய்யும் மேசை'
வேறு பொருளில் உத்3க4ாத: ' அடித்தல்'

**3.3.81** அபக4னோ அங்கம்
அபக4ன (அப + ஹன்) ஒரு அவயவம் என்ற பொருளில் நிபாதனமாகும்.
அபக4ன: 'உடலின் ஒரு அவயவம்'
வேறு பொருளில் அபக4ாத: 'வெட்டியெறிதல்'

**3.3.82** கரணே அயோவித்3ருஷு
'அயஸ்', வி, த்3ரு, ஆகியவைகளுடன் 'ஹன்' தாது வரும்போது, ஆக்கப்பட்ட சொல் கருவிப் பொருளைக் குறிக்கும்போது 'அப்' ஒட்டு தாதுவுக்குப் பின்

வரும்.

'க$^4$ன்' 'ஹன்' உக்குப் பதிலியாக வரும்.

அயோக$^4$ன: 'கொல்லனின் சம்மட்டி'

விக$^4$ன: 'மரச்சம்மட்டி, மரச் சுத்தி'

த்$^3$ருக$^4$ன: 'கோடரி'

$^3$த்ருக$^4$ண: என்றும் காணப்படுகிறது.

**3.3.83** ஸ்தம்பே$^3$க ச

'ஸ்தம்ப' என்ற சொல்லுடன் 'ஹன்' தாது நிற்கும்போது (கருவிப் பொருளில்) 'க' ஒட்டும் வரும். 'க$^4$ஞ்' உம் வரும் (ச)

ஸ்தம்ப$^3$க்$^4$ன: (ஸ்தம்ப + ஹன் + க = அ;

ஸ்தம்ப$^3$ஹ்ன் (6.4.98) = ஸ்தம்ப$^3$க்$^4$ன் + அ

(7.3.54)-ஸ்தம்ப$^3$க்$^4$ன)

ஸ்தம்ப$^3$க$^4$ன:/(க$^4$ஞ் ஒட்டு வரும்போது)

ஸ்தம்ப$^3$க்$^4$ன:/ஸ்தம்ப$^3$க$^4$ன' புல்வெட்டும் அரிவாள்'

ஸ்தம்ப$^3$க்$^4$னா:/ஸ்தம்ப$^3$க$^4$னா (பெண்பால்)

வேறு பொருளில் ஸ்தம்ப$^3$க$^4$ாத:

**3.3.84** பரௌ க$^4$:

'பரி'யுடன் ('ஹன்' நிற்கும்போது கருவிப் பொருளில் 'அப்' ஒட்டு வரும் ('ஹன்' உக்கு 'க$^4$' ஆதேசம் ஆகும்.

பரிக$^4$: 'இரும்பு உத்தரம்' ,'இரும்புத் தடி

பலக$^4$: (பார்க்க 8.2.22)

**3.3.85** உபக்$^4$ன ஆஸ்'ரயே

'உபக்$^4$ன' என்ற சொல் 'சாய்ந்து கொள்ளும் இடம்' என்ற பொருளில், விதிமுறைப்படியமையாத சொல்.

இச்சொல், உப + ஹன் + அப் = அ = உப + க்$^4$ன என்று, 'ஹன்' இன் ஈற்றயலான கெட்டு, உருவாகிறது. இங்கு ஈற்றயல் கெடுவது நிபாதனம்.

பர்வதோபக்$^4$ன: 'மலையின் கீழ் நோக்கிய சரிவு'

க்3ராமோபக்$^4$ன: 'கிராமத்தின் எல்லை'

**3.3.86** ஸங்கே$^4$ாத்$^3$கெ$^4$ள க$^3$ணப்ரஸ'ம்ஸயோ:

ஸங்க$^4$, உத்$^3$க$^4$ என்ற சொற்களும் நிபாதனங்கள். அவைகளின் பொருட்கள் முறையே, 'திரட்டுதல், கூட்டுதல்; 'புகழ்ச்சி' ஸம் + யன் + அப் = அ ஸங்க$^4$: இங்கு டி[1] (அதாவது 'ஹன்' இன் இறுதி அசை அன்) கெடுதலும், 'ஹ'வுக்கு 'க$^4$' ஆதேசமும் நிபாதனங்கள்.

ஸங்க$^4$: பஸூனாம்–'பசுக்களின் கூட்டம்'

உத்$^3$க$^4$: மனுஷ்யாணாம்–'மனிதர்களைப் பற்றிப் புகழ்ச்சி, அல்லது மனிதர்களுள் சிறந்தவன்'

வேறு பொருளில் ஸங்க$^4$ாத: 'கூட்டுக் குழு'

உத்[3]க[4]ாத: 'அடித்தல்'

**3.3.87** நிகே[4]ா நிமிதம்

'நிக[4]' என்ற சொல் 'உயரமும் அகலமும் ஒத்தது' என்ற பொருளில் நிபாதனங்கள்.

நி + ஹன் + அப் = நிக[4]: இங்கும் 'டி[1]' கெடுதலும், 'ஹ'வுக்கு 'க[4]' ஆதேசமும் விதிமுறைப்படியல்ல.

நிக[4]ா: வ்ரு'க்ஷா: 'உயரம் பருமன் ஆகிய இரண்டும் பொருத்தமாக உள்ள மரங்கள்'

நிக[4]ா: ஸ[1]ாலய: 'பொருத்தமான வடிவத்தைக் கொண்ட அரிசி' வேறு பொருளில் நிக[4]ாத: 'அடி'

**3.3.88** ட்[3]வித: க்த்ரி:

'டு[3]'வை 'இத்'தாகக் கொண்ட தாதுக்களுக்குப் பின் 'க்த்ரி' ஒட்டு வரும். (ஒரு செயலை மட்டும் குறிக்கும் போது பாவே அகர்தரி . . . . )

'க்த்ரி' ஒட்டு தனியாக வராமல் எப்போதும் 'மப்' ஒட்டுடன் சேர்ந்துதான் பயன்படுத்தப்படும் (பார்க்க 4.4.20) 'டு[3]'வை இத்தாகக் கொண்ட தாதுக்களான டு[3] பசஷ் 'சமை' (தா பா 997) டு[3]வப் (தா பா 1004), டு[3]க்ருஞ் ஆகியவைகளிலிருந்து முறையே பக்தரிமம் 'பழுத்தது' உப்தரிமம் 'விதைத்தது.' க்ருத்ரிமம் 'செயற்கையானது' என்ற சொற்கள் க்த்ரி + ம என்ற ஒட்டைச் சேர்த்து ஆக்கப்பட்டவை.

**3.3.89** ட்[1]விதோ அது[2]ச்

'டு[1]'வை இத்தாகக் கொண்ட தாதுக்களுக்குப் பிறகு "அது[2]ச்" ஒட்டு இணைக்கப்படும் (ப[4]ாவே. . . . ) டு[1]வேப்–வேபது[2]: 'நடுக்கம்' (தா பா 367)

டு[1]ஒஸ்[1]வி (தா பா 1011) ஸ்[1] வயது[2]: 'வீக்கம்'

டு[1] க் ஷூ (தா பா 1037) க்ஷுவது[2]: 'இருமல்'

**3.3.90** யஜ யாசயத விச்[1]ச[2] ப்ரச்[1]ச[2] ரக்ஷோ நங்

யஜ் முதலிய தாதுக்களுக்குப்பின் நங் ஒட்டு வரும். (ஒரு செயலை மாத்திரம் குறிக்க. . . )

நங் இல், ந ஒட்டு, 'ங்' 'இத்' குணவ்ருத்3த4 வருவதைத் தடுப்பதற்காக இந்த 'ங்'

| | | | | |
|---|---|---|---|---|
| யஜ் | – | யக்[3]ஞ: | – | "வேள்வி" |
| யாச் | – | யாச்ஞா | – | "வேண்டுகோள்" |
| யத் | – | யத்ன: | – | "முயற்சி" |
| விச்[1]ச[2] | – | விஸ்[1]ன: | – | "ஒளி" |
| ப்ரச்[1]ச[2] | – | ப்1ரஸ்1ன: | – | "கேள்வி" |
| ரக்ஷ: | – | ரக்ஷ்ண: | – | "காப்பாற்றுதல்" |

'ப்ரச்[1]ச[2]', தாதுவின் 'ர' 'ஙித்' ஒட்டான 'நங்'குக்கு முன் 'ரு' ஆக மாறியிருக்க

வேண்டும். (உயிராதல்) (6.1.16) பாணினியின் (க்ஞாபத்தின்படி) சூ. 3.2.117 இனால், அவ்வாறு மாறவில்லை. இல்லாவிட்டால், இது ப்ரு'ஸ்ன: என்று அகியிருக்கும்.

**3.3.91** ஸ்வபோ நன்

"ஸ்வப்" தாதுவுக்குப்பின் 'நன்' ஒட்டு வரும். (பாவே, அகர்தரி. . . . ) 'நன்' இன் 'ந' சுரத்திற்காக (6.1.197)
முதலசை உதாத்தம் பெறும்.
ஸ்வப்ன: 'கனவு'

**3.3.92** உபஸர்கே$^3$ கோ$^4$ : கி:

கு$^4$ (த$^3$ா, த$^4$ா) என்ற பெயரால் அழைக்கப்படும் தாதுக்கள் உபசர்க்கத்தோடு நிற்கும்போது 'கி' ஒட்டு, தாதுவுக்குப் பின் வரும். (பாவே, அகர்தரி. . . . )
தாதுவின் 'அ', 'இத்' ஒட்டுச் சேர்ப்பதால் கெடும்.
ப்ரதி$^3$ ப்ர + த$^3$ா + கி = இ = ப்ர + த + இ (6.4.64) = ப்ரதி பரிசு
ப்ரதி$^4$: சக்கரத்தின் புறச் சுற்று வட்டம்
அந்தர்த்$^3$தி$^4$: மறைதல்
உபாதி$^4$: 'ஏய்ப்பு, மோசடி'

**3.3.93** கர்மணி அதி$^4$கரணே ச

செயப்படு பொருளைக் குறிக்கும் சொல்லை உபபதமாகக் கொண்ட "கு$^4$" என்ற பெயரால் குறிக்கப் பெறும் தாதுக்களுக்குப் பின் இடப் பொருளில் (அதிகரணகாரக) 'கி' ஒட்டு இணைக்கப் பெறும்.
ஜலதி$^4$: 'கடல்' (எதில் தண்ணீர் தேக்கப்பட்டிருக்கிறதோ)
ஸ'ரதி$^4$: 'அம்பறாத்தூளி 'எதில் அம்புகள் வைக்கப்பட்டிருக்கிறதோ'

**3.3.94** ஸ்த்ரியாம் க்தின்

பெண்பாலில் 'க்தின்' ஒட்டு, (பாவே, அகர்தரி ச காரகே) இணைக்கப்படும்.
'க$^4$ஞ்', அச், அப் ஒட்டுக்களுக்கு இவ்விதி தடை விதிக்கிறது.
க்ருதி: 'செயல்'
சிதி: 'சேகரித்தல், திரட்டுதல்'
மதி: 'அறிவு'

வா: க்தின்னா ப்$^3$ாதி$^3$ப்$^4$யஸ்'ச வக்தவ்ய:
'ஆப்' முதலியவைகளோடும் 'க்தின்' ஒட்டு இணைக்கப்படும்.
ஆப்தி: 'அடைதல்'
ராத்$^3$தி$^4$: 'நிறைவேற்றிய செயல், சிறப்புத் திறமை'
தீ$^3$ப்தி: 'ஒளி'
ஸ்ரஸ்தி: 'வழுக்குதல், தவறுதல்'
த்$^4$வஸ்தி: 'அழிதல்'

ஆஸ்தி: 'உட்கார்தல்'
லப்3தி: 'அடைதல்'
வா: ஸ்'ரு யஜி ஸ்துப்4ய: கரணே
ஸ்'ரு, யஜ், ஸ்து ஆகியவைகளுக்குப்பின் கருவிப் பொருளில், 'க்தின்' ஒட்டு வரும்.

ஸ்ருதி: – காது (எதன் மூலம் கேட்கப்படுகிறதோ)
இஷ்டி: – 'வேள்வி'
ஸ்துதி: – 'புகழ்தல்'

வா: க்3லாம்லா ஜ்யா ஹாப்4யோ நி:
க்3லை, ம்லை, ஜ்யா, ஹா ஆகியவற்றின் பின் 'நி' ஒட்டு வரும்.
க்3லாநி: 'சோர்வு, களைப்பு'
ம்லாநி: 'வாடுதல்'
ஜ்யாநி: 'முதுமை'
ஹாநி: 'இழப்பு, நஷ்டம்'

வா: ரூ'காரல்வாதி3 ப்4ய: க்தின் நிஷ்டா'ாவத்3 ப4வதி இதி வக்தவ்யம்.
'ரூ'' வை ஈறாகக் கொண்ட தாதுக்கள், 'லூ' முதலிய தாதுக்கள் ஆகியவைகளுக்குப் பிறகு வரும் 'க்தின்' ஒட்டை நிஷ்டா ஒட்டுக்களுக்கு ஈடாகக் கருத வேண்டும். அதாவது அவைகள் நிஷ்டா ஒட்டுக்கள் போன்று செயற்படும்.
க்ரூ' – கீர்ணி: 'சிதறுதல்'
க்ரூ' + க்தின் = கிர் + தி = கீர்தி (8.2.77)
கீர்நி (நிஷ்டாவத்3ப4ாவ) = கீர்ணி
கீ3ர்ணி: 'புகழ்'
ஜீர்ணி: 'முதுமை'
ஸீர்ணி: 'அழிவு'
லூனி: 'வெட்டுதல்'
பூனி: 'அழிவு'

வா: ஸம்பத3ாதி3ப்4ய: க்விப்
'ஸம்பத்' முதலியவைகளுடன் 'க்விப்' ஒட்டு வரும்.
ஸம்பத் 'வளமை, நற்பேறு'
விபத் 'இடுக்கண்'
ப்ரதிபத் 'வாய்ப்பு'
'ஸம்பத்' முதலியவைகளுடன் 'க்தின்' ஒட்டு வருவதும் விரும்பத்தக்கது.
ஸம்பத்தி:
விபத்தி:

**3.3.95** ஸ்த²க³ா பா பசோ ப⁴ாவே

ஸ்த²ா முதலிய தாதுக்களுக்குப் பின் பெண்பாலில், ஒரு செயலை மாத்திரம் குறிக்கும்போது 'க்தின்' ஒட்டு வரும்.3.3.106, 'ஆ'வை ஈறாகக் கொண்ட தாதுக்களுக்குப் பிறகு 'க்தின்' ஒட்டு வருவதைத் தடுத்து, 'அங்' ஒட்டு வரவேண்டுமென்று விதிக்கிறது. இச்சூத்திரம் இத்தடுப்பு விதிக்குத் தடை விதித்து, 'க்தின்' ஒட்டுத்தான் இங்கு வரவேண்டும்.
'அங்' அல்ல என்று குறிக்கிறது.
ப்ரஸ்தி²தி: "பயணம்"
உத்³கீதி: "சாமகானம்"
ஸங்கீதி: "சங்கீதம்"
ப்ரபீதி: "தொட்டி"
ஸம்பீதி: "சேர்ந்து குடித்தல்"
பக்தி: "சமைத்தல்".
இங்கு வேறு எந்தப் பொருளையும் உணர்த்தாது என்று குறிக்க, 'ப⁴ாவே' என்ற சொல் திரும்ப இங்கு பயன்படுத்தப்பட்டிருக்கிறது.
அவஸ்த²ா, ஸம்ஸ்த²ா முதலிய சொற்களும் காணப்படுகின்றன. இவைகள் பாணினியின் சூ. 1.1.34 இத்தகைய சொற்களும் ஆக்குவதில் தவறு இல்லை என்று குறிப்பால் உணர்த்துகிறது. அதாவது 'அங்' ஒட்டும் சில சமயங்களில் வருவதற்குத் தடையில்லை.

**3.3.96** மந்த்ரே வ்ரு¹ஷேஷ பசமன வித³ பூ⁴வீரா உத³ாத்த:

வேதத்தின் மந்திரப் பகுதியில் உத³ாத்த சுரத்தைக் கொண்ட 'க்தின்' ஒட்டு, கீழ்க்கண்ட தாதுக்களுக்குப்பின் (ஒரு செயலைக் குறிக்கும் பெண்பாற் சொற்கள் ஆக்க) இணைக்க வேண்டும்.
வ்ருஷ் (மழைபெய்), இஷ் (விரும்பு), பச் (சமை), மன் (நினை), வித் (அறி), பூ⁴ (இரு), வீ(போ), ரா (கொடு) பூ⁴(இரு), வீ(போ),
வ்ருஷ்டி¹: – மழை:, இஷ்டி: (விருப்பம்)
பக்தி: 'சமைத்தல்', மதி: 'அறிவு'–வித்தி 'அறிவு'
பூ⁴தி: 'ஆக்கம், செல்வம்'
வீதி: 'போதல், செல்வம்' ராதி: 'செல்வம்'
'க்தின்' ஒட்டு எல்லாத் தாதுக்களுக்குப் பின்னும் இணைக்க வேண்டும் என்ற விதி சூ. 94இலிலேயே கூறப்பட்டிருகிறது. இவ்வாறு ஆக்கப்பட்ட சொற்களின் சுரத்தை ஒழுங்குப்படுத்துவதற்காக இச்சூத்திரம் அமைக்கப்பட்டுள்ளது. 'இஷ்' இலிருந்து இச்¹ச²ா என்ற சொல்லும் (நிபாதனம் 3.3.101) ஆக்கப்படும்.

**3.3.97** ஊதி யூதி ஜூதி ஸாதி ஹேதி கீர்த் தயஸ்¹ ச

'ஊதி' முதலிய சொற்கள் நிபாதனங்கள். இவைகள் உதாத்த சுரம் கொண்டது, ஊதி (அவ் + க்தின் = ஊட்² = ஊ (6.4.20) = ஊதி) 'காப்பாற்றுதல்' இதை சூ. 94இன்படி க்தின் இணைத்து தருவிக்க இயலும். ஆனால் சுரத்தை (உதாத்த)யல்ல. யூதி: (சேர்த்தல், இணைத்தல்) ஜூதி: (வேகம்) ஆகிய

